# அறுபத்துமூன்று நாயன்மார் வரலாறு



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

Acc.No: 28265

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

முத்தமிழ்ப்பண்ணை - அரங்கராசன்

# அறுபத்துமூன்று நாயன்மார் வரலாறு

அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. ப. உருத்திரமணி, M. A.

சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு




தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1985 [ ரூ. 7—00

*All Rights Reserved by*

THE DIVINE LIFE TRUST SOCIETY

Sivananda Nagar, (U. P.) India.

* O *

Translation of :

"SIXTY-THREE NAYANAR SAINTS"

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of* :

Malaysia Devotees and Disciples of
H. H. SRI SWAMI SIVANANDAJI MAHARAJ
in memory of
H. H. SRI SWAMI PRANAVANANDAJI MAHARAJ
Founder : Malaysia Branches of
Divine Life Society & Sivananda Ashram
Batu Caves, Malaysia.

Printed at The Literary Press, Salem - 636 001.



ஸ்ரீ சுவாமி பிரணவானந்தா

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் 'அறுபத்துமூன்று நாயன்மார் வரலாறு' என்ற நூலை திரு. ப. உருத்திரமணி, M. A., அவர்கள் மிக அற்புதமாக மொழிபெயர்த்துள்ளார்கள். இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் மலேசியா ஸ்ரீ சுவாமி பிரணவானந்தாஜி ஞாபகார்த்தமாக இந்நூலை வெளியிடுவதில் நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

---

# அறுபத்து மூன்று நாயன்மார் வரலாறு

## 1. சுந்தரமூர்த்தி நாயனார்

அருளியது : ஸ்ரீ சுவாமி சிவானந்தா
தமிழாக்கம் : திரு. ப. உருத்திரமணி, M. A.

சுந்தரமூர்த்தி நாயனார் 8-ம் நூற்றாண்டில் வாழ்ந்த பக்திச் செல்வர். சிவபெருமானுடைய, பெருமை மிகுந்த தொண்டர். தமிழ்ச் சமய குரவர் நால்வருள் ஒருவர்.

சுந்தரமூர்த்தி நாயனார், தாம் சென்று வழிபட்ட புனிதம் மிகுந்த தலங்கள் தோறும் சிவபெருமானுடைய புகழ்களைப் பாடினார். இவை தேவாரப் பாடல்கள் என்று அழைக்கப்படுகின்றன. அவை எல்லாம் நூல் வடிவில் தொகுக்கப்பட்டுள்ளன. பக்தர்கள் அனை வரும் இன்றும்கூட இத்தேவாரப் பாடல்களைப் பாடு கின்றனர். சுந்தரர், அப்பர் அல்லது திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் ஆகியோர் பாடிய பாடல்கள் தேவாரம் என்று அழைக்கப்படுகின்றன. மாணிக்க வாசகர் பாடிய பாடல்கள் திருவாசகம் என்று அழைக்கப்படுகின்றன.

சுந்தரர் இறைவனிடத்தில் கொண்ட தொடர்பு சகபாவம்' அல்லது தோழமை உணர்வாகும். தாம் விரும்பியவற்றை எல்லாம் இறைவனிடத்தில் மிகவும் தாராளமாகக் கேட்டார். எனினும், தன்னல விருப்பத் துடன் அவர் அவ்வாறு செய்யவில்லை. தம்மைச் சார்ந்திருந்த அடியார்களின் பொருட்டே அவர் எதையும் கேட்டார். அவர் பதினெட்டு ஆண்டுகளே வாழ்ந்தார்.

சுந்தரமூர்த்தி நாயனுரின் பிறந்த ஊர் திருநாவலூர்; அங்கு சைவம் நன்கு நிலைபெற்றிருந்தது; சூழ்நிலை முழுவதும் ஆன்மீக அலைகள் நிரம்பியிருந்தன. இங்கு வாழ்ந்த சடையனுர் ஆழ்ந்த பக்தியுள்ளம் படைத்தவர்; மற்றவர்களால் நன்கு மதிக்கப்பட்ட அந்தணர். இவருடைய முன்னேர்கள் அனைவரும் சிவபெருமானுடைய ஆர்வம் மிகுந்த தொண்டர்களாக இருந்தனர். இசை ஞானியார் இவருடைய கடமையுணர்வில் தலைசிறந்த வாழ்க்கைத் துணைவியார். இவ்வம்மையார் ஒரு தெய்வீகக் குழந்தையைப் பெற்ருர்; இக் குழந்தையின் பாட்டனுருடைய பெயராகிய 'நம்பி ஆரூரர்' என்ற பெயரையே பெற்ருேர்கள் சூட்டி மகிழ்ந்தனர்.

ஆரூரர் தம் முற்பிறப்பில் ஆலால சுந்தரராக இருந்தார். இவர் சிவபெருமானிடம் ஆர்வம் மிகுந்த அணுக்கத் தொண்டர். தேவர்களும், அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது ஆபத்தான நஞ்சு தோன்றி கடலின் மேற்பரப்பெங்கும் பரவி அனைவரையும் கொன்றுவிடக்கூடியதாக அச்சுறுத்திற்று. ஆலால சுந்தரர் அந்த நஞ்சைத் தம் உள்ளங்கையில் அடங்குமாறு திரட்டி அதனைச் சிவபெருமானிடம் வழங்கினுர். உலகத்தாரைக் காப்பதற்காக இறைவன் அதை விழுங்கினுர். ஆலகாலம் என்னும் நஞ்சைத் திரட்டிய காரணத்தால் சுந்தரர் தம் பெயருக்கு முன்மொழியாக ஆலாலம் என்பது சேர்க்கப்பட்டு ஆலால சுந்தரர் என்று அழைக்கப்பட்டார்.

கைலை மலையில் சிவபெருமானுக்கு அணுக்கத் தொண்டராக ஆலால சுந்தரர் பணிசெய்து கொண்டிருந்தபோது ஒருநாள், இறைவனுடைய வழிபாட்டுக்காக மலர்களைக் கொண்டுவருவதற்காகப் பூங்காவுக்குச் சென்றவர், உமை பிராட்டியின் தோழியர்களான அனிந்திதை, கமலினி என்பவர்கள் அன்னை வழிபாட்டுக்காக அவர்களும் மலர்களைக் கொண்டுவருவதற்காக அப் பூங்காவுக்கு வந்த அவர்களிடத்துக் காதல் பார்வை செலுத்தினுர். அவர்களும் அவரிடத்தில் காதல் கொண்டார்கள். சிவபெருமான்

தம் ஞானக் கண்ணுல் பூங்காவில் நிகழ்ந்த யாவும் அறிந்துகொண்டார். அவர் ஆலால சுந்தரரை அழைத்துப் பின்வருமாறு கூறினர்: "சுந்தரா! நீ இம் மகளிர்பால் காதல் கொண்டதனுல் நீயும் இவர்களும் மண்ணுலகம் சென்று மக்களாகப் பிறப்பீர்களாக. நீ இவ்விருவரையும் மணந்துகொண்டு உலகியல் இன்பங்களை எல்லாம் நுகர்ந்து மகிழ்வாயாக!" சுந்தரர் தாம் இழைத்த குற்றத்தால் இறைவனைவிட்டுப் பிரிய நேர்ந்ததே என்று வருந்திக் கண்ணீர் பெருக்கி அழுதார். அவர் இறைவனிடம் வேண்டினர், "பெருமானே! என்னுடைய தீய எண்ணத்தால் நான் தங்களைவிட்டுப் பிரிகின்ற தண்டனையைப் பெற்றேன். மையல் மானுடமாய் மயங்கி அறியாமையில் மூழ்கித் தங்களை மறந்துவிடுவேனே என்று அஞ்சுகின்றேன். கருணையங் கடலே! நான் தங்களை மறந்துவிடும் குற்றம் நிகழாமல் காப்பாற்றுங்கள். இரக்கமே சொரூபமாகிய கடவுளே! என் அறியாமையைப் போக்கித் தடுத்தாட்கொண்டு தங்கள் திருவடிகளில் என்னைத் திரும்பவும் சேர்த்துக்கொள்ள வேண்டும்." சிவபெருமான், சுந்தரருடைய விருப்பத்தை நிறைவேற்றுவதாக வாக்களித்தார்.

சுந்தரர் மக்கள் உலகில் பிறப்பதற்குப் பிறிதொரு காரணமும் இருந்தது. கைலை மலையில் தெய்வீகச் சூழலிலும் சுந்தரர் காமநோய்க்கு ஆளானர் என்று சாதாரணமான ஒருவர் நினைக்கக் கூடும். அப்படியல்ல. இறைவனுடைய திருக்கரங்களில் சுந்தரர் ஒரு கருவியே. மனித குலம் பயன்பெறுவதற்காகச் சுந்தரர் திருத் தொண்டத் தொகைப் பாசுரங்களைப் பாடவேண்டும் என்று சிவபெருமான் திருவுளங் கொண்டார். எனவே அவர் சுந்தரருடைய மனத்தில் புகுந்து இம்மகளிர்பால் கொள்ளும் காதலைத் தோற்றுவித்தார். இதன் வாயிலாக இறைவன் மனிதகுலத்துக்கு ஒரு பெரிய பாடத்தையும் கற்பிக்க விரும்பினர் காமம் அளவற்ற சக்தியுடையது. எந்நேரமும் விழிப்புடன் இருக்கவில்லையென்ருல் இறைவனுடைய மிகப்பெரும் பக்தரான சுந்தரரையும் வழுவச் செய்யும். மாயையின் கவர்ச்சி

கள் ஆற்றல் மிகுந்தவை. இத்தீய பண்பு எரிக்கப்படவில்லையென்ருல் ஆன்மா சிவபெருமானை அடைய முடியாது. இன்னும் ஒரு பாடம். காதல் பார்வை சுந்தரருடைய வீழ்ச்சிக்குக் காரணமாகியது. ஆனல் அந்தப் பார்வையை இறைவனுடைய சேவையில் திருப்பிப் புனிதமான தலங்களுக்கு யாத்திரை செய்வது, இறைவனுடைய பல வகையான திருக்கோல உருவங்களைக் காண்பது, அருளாளர்களைச் சந்திப்பது, தெய்வீக நூல்களைப் பயில்வது என்று இவ்வாறு மேற்கொண்டால் அதே பார்வை நம் விடுதலைக்கு உதவும்.

ஆதலால் சுந்தரர் ஆரூரராகத் தோன்றினர். நரசிங்க முனையர் என்ற அப்பகுதியை ஆண்ட அரசர், அழகிய இச்சிறுவரைக் காண நேர்ந்தது. அவர் சிறுவரை மிகவும் விரும்பினர். சிறுவரைத் தாமே வளர்க்க விருப்பம்கொண்டு பெற்ருேரிடம் அனுமதி வேண்டினர். உலகியல்பற்று முழுதும் நீத்திருந்த சடையனர் உலகப் பாசம் எதுவும் இல்லாதவராதலால் உடனே அரசருடைய விருப்பத்திற்கு இணங்கினர். அந்த அரசரும் அவருடைய பக்திமிகுந்த அரசியாரும் நாயன்மார்களாக மதிக்கப்பட்டார்கள் என்பதை நாம் பின்னர் காணப் போகின்ருேம்.

அரண்மனைப் பாதுகாப்பில் சிறுவர் வளர்ந்தார். தகுந்த வயதில் பெற்ருேர் தங்கள் மைந்தனுக்குத் திருமணம் செய்ய விரும்பினர். சடங்கவி சிவாச்சாரியாரின் மகளைத் தம் மைந்தன் ஆரூரர் கைப்பிடிக்குமாறு அவருடைய இசைவைச் சடையனர் நாடினர். சிவாச்சாரியார் மகிழ்ச்சியுடன் இணங்கினர். ஆனல் அத்திருமணம் தடைப்பட்டது

திருமணச் சடங்கு தொடங்கப்படும் நேரத்தில், ஒரு முதிய அந்தணர், தன் மேனி முழுதும் திருநீரு அணிந்தவராய், கழுத்தில் உருத்திராக்ஷ மாலையுடன் சடா மகுடத்துடன் வந்து; "இந்த ஆரூரர் எனக்குப் பரம்பரை அடிமை. இவ்வாறு இசைந்து இவருடைய பாட்டனர் எனக்கு எழுதிக்கொடுத்த பத்திரம் என்னிடம்

உள்ளது. இவர் திருமணம் செய்து கொள்ளமுடியாது'' எனக் கூறினர். இது திருமணச் சடங்குக்கு ஒரு முற்றுப்புள்ளியை வைத்தது. சுந்தரரும் அந்தணரும் அந்த இடத்தை விட்டுச் சென்றனர். இளம் மணமகள் சுந்தரரின் புனிதமான திருவடிகளில் தன் மனத்தை நிலை நாட்டி அழியும் உடலைக் கலைந்து சிவபெருமானுடைய அழியாத பேரின்ப உலகை அடைந்தாள்.

சுந்தரரும் முதியவரும் காரசாரமான வாதத்தில் இறங்கினர். சுந்தரர் அவரிடம், 'நீவிர் யாவர்? எங்கிருந்து வந்தீர்?' என்று வினவினர். அந்தணர் அதற்கு, 'நான் திருவெண்ணெய் நல்லூரைச் சேர்ந்தவன்' என்று பதிலிருத்தார். அவரைப் பொய்யர் என்று அழைத்த சுந்தரர், வாரும், திருவெண்ணெய் நல்லூருக்குச் செல்வோம். அங்குள்ள நியாயம் உள்ளவர்களால் நம் வழக்கைத் தீர்த்துக்கொள்ளுவோம்'' என்று தெரிவித்தார்.

திருவெண்ணெய் நல்லூரில், நியாயம் உள்ள அறிஞர் அவையின் முன்னிலையில் முதிய அந்தணர், பின்வரும் வாசகம் பொதிந்த பத்திரத்தை எடுத்துக் காட்டினர்.

''திருநாவலூர் ஆதிசைவனுகிய ஆரூரன் என்னும் நான் இந்தப் பரம்பரை அடிமைப் பத்திரத்தை முழு மனதோடும் கையெழுத்திட்டுத் தெரிவிக்கிறேன். நானும், வருங்கால்த்தில் வரும் என் வழி வழிச் சந்ததியினரும் திருவெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்குப் பரம்பரை அடிமைகளாக இருந்து எல்லா வகையிலும் பணி செய்யக் கடமைப் பட்டிருக்கின்றோம்.''

'பித்தன்' என்றால், 'பைத்தியம் மிகுந்தவன்' என்று தாம் அழைக்கப்படுவதில் மகிழ்ச்சியடையும் சிவபெருமானைக் குறிக்கும். உயர்வின் உச்சியையடைந்த யோகியின் நிலைக்கு ஓர் உதாரணமாக விளங்கினர்; அத்தகைய யோகியின் நடத்தை பைத்தியம் மிகுந்தவனுடைய நடத்தைக்கு ஒப்பாகும். உலகில் பொருட்படுத்தக்கூடிய நிலையில் எதுவும் இல்லை என்ற

பாடத்தை அவர் கற்பிக்கின்ருர். உண்மையில் பைத்தியக்காரர்கள், உலகப் பற்றுள்ள மேதாவிகளே!

பத்திரத்தில் சாட்சிக் கையெழுத்திட்டுள்ளவர்களைப் பற்றித் தீர விசாரித்து, அவருடைய பாட்டனாரின் கையெழுத்தையும் சரிபார்த்து முதியவர் கொண்டாடும் உரிமை சரியானதுதான் என்று அவையினர் முடிவு தெரிவித்தனர். இறைவனுடைய விருப்பம் என்று கருதிச் சுந்தரர் அதை ஏற்றுக்கொள்ள வேண்டியவரானுர். தம் இருப்பிடத்தைத் தெரிவிக்கும் பாவனையில் அனைவரும் தம்மைப் பின் தொடர்ந்து வர திருவருள்துறை என்னும் கோயிலினுள் நுழைந்த அந்தணர் கணப்போதில் மறைந்தார் சம்சாரபந்தங்களில் அகப்பட்டுக் கொள்ளாமல் தம்மைத் தடுத்து ஆட்கொள்ளவே முதியவர்போல் தோன்றியவர் இறைவன்தான் என்று ஆரூரர் உணர்ந்தார் முன்னதாகவே அவரை அறிந்து கொள்ளாமல் போனதற்காக அவர் மனம் மிகவும் நொந்தார். உரக்கக் கதறி அவர் அழுதார். இறைவன் காட்சி தந்து பின் வருமாறு வாழ்த்திஞர், ''தூய உள்ளம் படைத்தவனே! முன்னமே நீ என் தொண்டன். இவ்வுலகில் மனிதனாகப் பிறப்பதற்கு முன்னர் திருக்கைலையில் என் இடத்தில் நீ இருந்தாய். ஒரு தவருன எண்ணம் உனக்கு இப்பிறப்பைத் தந்தது. உன்னைக் காப்பாற்றவே இப்போது எழுந்தருளினேன்''.

சுந்தரர் தம்முடன் வாதிட்டதனுல் இறைவன் அவரை 'வன் தொண்டன்' (சுடு சொல் பேசும் பக்தன்) என்று அழைத்தார். தம்முடைய புகழ்களைப் பாடுமாறும் பணித்தார். 'அன்பனே! நீ என்னைப் 'பித்தன்' (பைத்தியக்காரன்) என்று, என்னுடன் சச்சரவிட்ட போது அழைத்தாய். ஆதலால் இச்சொல்லைத் தொடக்கமாக வைத்துப் பாடல் பாடுவாய்' என்ருர். சுந்தரரும் அவ்வாறே பாடினுர். இதன் விளைவுதான், 'பித்தா பிறை சூடி' என்ற உணர்ச்சி மிகுந்த பாசுரம். இதனுல் இறைவனுக்கே 'தடுத்தாட் கொண்ட ஈசுவரன்' என்ற பெயர் ஏற்பட்டது. (சம்சாரத்திலிருந்து தடுத்துக் காப்பாற்றிய இறைவன்).

பின்னர் சுந்தரர் பல்வேறு புனித தலங்களுக்கு யாத்திரை செய்தார். எல்லா இடங்களிலும் இறைவனுடைய புகழ்களைப் பாடினார். அப்பர் வீரட்டேசுவரருக்குத் தொண்டு செய்து அருள் பெற்ற திரு அதிகை வீரட்டானத்துக்கு வந்தார். அந்தப் புனித மண்ணில் காலடி வைக்க விரும்பாமல் சுந்தரர் ஊருக்கு வெளியில் உள்ள ஓரிடத்தில் தங்கினார்

சுந்தரர் உறங்கிக்கொண்டிருந்த இரவின்போது, இறைவன் ஒரு கிழவர் வேடத்தில் மடத்திற்கு வந்தார். அவர் சுந்தரருக்கு மிகவும் அருகில் வந்து படுத்து உறங்குவதுபோல் பாவனை செய்தார். பின்னர் சுந்தரரின் தலைமீது தம் காலடிகளை வைத்தார். சுந்தரர் மறுத்துப் பேசவே கிழவர் தம் வருத்தத்தைத் தெரிவித்தார். சுந்தரர் அறையின் பிறிதொரு மூலைக்குச் சென்றார். அங்கும் கிழவர் அதே செயலைத் திரும்பவும் செய்தார். சுந்தரர் சினம் கொள்ளவில்லை அமைதியாக அவர் அக்கிழவரை 'யார் நீங்கள்?' என்று வினவி இவ்வாறு தகாத முறையில் நடந்துகொண்டதற்கான விளக்கத்தை தருமாறு கேட்டார். 'நண்பனே! என்னை நீ அறியவில்லையா?' என்று இறைவன் வினவி மறைந்துவிட்டார். மீண்டும் இறைவனே வந்த உண்மையைச் சுந்தரர் உணர்ந்தார். இறைவனைக் கண்டு வழிபடக் கோயிலுக்குத் தாம் செல்லாத காரணத்தால் இறைவனே தம் பக்தன் இருப்பிடத்திற்கு வந்துவிட்டார். சுந்தரர் பின்வருமாறு, பணிந்து ஏத்தினார், "பெருமானே! எவ்வளவு அன்பும் கருணையும் உள்ளவராக இருக்கிறீர்கள், வேதங்களையும் ஆகமங்களையும் கரைகண்ட பக்தர்கள்கூடத் தங்கள் திருவடிகளைத் தொடும் பேறு பெற முடியாதே! இந்த ஏழையின்பால் தாங்கள் கொண்டுள்ள பேரன்பால் தங்கள் புனிதமான இருப்பிடத்தை விட்டுத் தங்கள் தூய திருவடிகளால் நடந்து எனக்கு அருள்பாலிக்க எழுந்தருளினீர்களே!"

சுந்தரர் மீண்டும் தம் தல யாத்திரையைத் தொடர்ந்தார். தில்லையில் (சிதம்பரம்) திருக்கோயிலின் கோபுரத்தைக் கண்ட அளவிலும் தம் வசம் இழந்தார்.

பெரும் மகிழ்ச்சியில் திளைத்தவராய் நிலத்தில் விழுந்து புரண்டு உருண்டு அன்புக் கண்ணீரை வெள்ளமாகப் பெருக்கினர். அவருக்கு நடராசப் பெருமானுடைய காட்சி கிடைத்தது. திருவாரூருக்குச் செல்லுமாறு அசரீரி வானில் அறிவித்தது.

பின்னர் அவர் பல்வேறு தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாரூருக்கு வந்து சேர்ந்தார். திருவாரூர் அந்தணர்களின் கனவில் இறைவன் தோன்றிச் சுந்தரரைத் தகுந்த பெருமைகளுடன் வரவேற்குமாறு பணித்தார். அவர்களும் அவ்வாறே செய்தனர். சுந்தரர் கோயிலில் இறைவனை வணங்கியபொழுது விண்ணில் பின்வரும் அசரீரி எழுந்தது, "சுந்தரா! நாம் உனக்கு நண்பராவோம். திருமணத்தின்போது உன்னைத் தடுத்தோம். இனிமேல் நீ எப்போதும் மண்ணுலகில் மாப்பிள்ளைக் கோலத்தில் மகிழ்ந்தாடு வாயாக!" உடனே சுந்தரர் அழகுமிக்க மணக்கோலம் பூண்டவரானர். மக்கள் அவரைத் "தம்பிரான் தோழர்" (இறைவனுடைய நண்பர்) என்று அழைத்தார்கள்.

திருவாரூரில் பரவையார் என்ற பெயருள்ள கற்பிற் சிறந்த நங்கை இருந்தார். அவர் வேறு யாருமல்ல! கைலாயத்தில் பார்வதி அன்னைக்குத் தோழியாக இருந்த கமலினியே, அவர். நாள்தோறும் அவர் கோயிலுக்குச் சென்று இறைவனை மிகுந்த பக்தியுடன் பணிந்து புகழ்ப் பாடல்கள் பலவும் பாடுவார். ஒரு நாள் அவர் வழக்கமாகத் தம் தோழியருடன் இறைவனை வணங்கக் கோயிலுக்கு வந்தார். அதே நேரத்தில் சுந்தரரும் தம்முடைய அன்பர் கூட்டத்துடன் கோயிலுக்குள் நுழைந்தார். பழவினை வசத்தால் சுந்தரர் பரவையாரின் பேரழகில் கட்டுண்டு நின்றார். அவர் பரவையாரை மணந்து கொள்ள விரும்பி அதே எண்ணத்துடன் இறைவன் திருமுன்பு சென்றார். இறைவனே அவருக்கு உற்ற நண்பராயிற்றே! எனவே இறைவனிடம் தம் விருப்பத்தைத் தெரிவித்தார்.

சுந்தரரைக் கோயிலில் பார்த்த பரவையாரும் அவர்பால் காதல் கொண்டு அவரை மணந்து கொள்ள விரும்பினர்.

இத்திருமணம் சிவபெருமானல் முன்னரே தீர்மானம் செய்யப்பட்டதாகும்; தற்போது இதை நிறைவேற்றுவது அவருடைய கடமையாகிறது. இருவர் கனவிலும் அவர் தோன்றி அவர்களுடைய திருமணம் நிறைவேறும் என்று தெரிவித்தார். அடியார்களின் கனவிலும் அவர் தோன்றி அடுத்த நாளே சுந்தரர், பரவையார் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு கட்டளையிட்டார். சுந்தரரும், பரவையாரும் மகிழுமாறு, அவ்வாறே திருமணம் நடைபெற்றது.

ஒரு நாள் ஆரூரர் கோயிலுக்குள் சென்றபோது அங்கு இறைவனுடைய அடியார்கள் பலரும் இருக்கக் கண்டார். அவர்களின் புகழ்களை அவர் பாட விரும்பினர். திருத் தொண்டத் தொகை என்னும் பாசுரங்களின் முதலடியை இறைவனே பாடினர்; அவர் அருளால் சுந்தரர் தொடர்ந்து நிறைவு செய்தார்.

திருவாரூரில் அவர் தங்கியிருந்தபோது, அவரிடம் மிகவும் பக்தி பூண்ட குண்டையூர் கிழார் என்னும் வேளாளர், சுந்தரரையும் அடியார்களையும் பேணுவதற்காக நாள்தோறும் வேண்டிய அளவு தானியங்களையும் மளிகைப் பொருள்களையும் வழங்கி வந்தார். திடீரென்று அங்கு பஞ்சம் ஏற்பட்டு, மக்கள் உணவின்றித் துன்புற்றனர். குண்டையூர் கிழாரும் பாதிக்கப்பட்டார். சுந்தரருடைய தேவைகளை நிறைவேற்ற முடியவில்லையே என்று அவருடைய மனம் மிகவும் துயருற்றது. இறைவன் அவருடைய கனவில் தோன்றி வேண்டும் அளவு தானியங்களை வழங்குவதாக உறுதி கூறினர். இறைவனுடைய கட்டளைக்கிணங்கச், செல்வத்தின் கடவுளாகிய குபேரன் அத் தேவைகளை நிறைவேற்றினன். அடுத்தநாள் காலையில் குண்டையூர் கிழார் மலைபோல் குவிந்த நெற்குவியல்களைக் கண்டார்.

அதேநேரம் இறைவன் சுந்தரருக்கு இந்த நிகழ்ச்சியைக் காட்சி தந்து தெரிவித்தார். உடனே சுந்தரர் கிழாரைக் காண்பதற்குக் குண்டையூருக்குச் சென்றார். பாதி தூரத்தில் இருவரும் சந்தித்தனர் சுந்தரர் குண்டையூரில் குவிந்திருந்த நெற்குவியல்களைக் கண்டு வியந்தார்; இறைவன் திருவிளையாடல் என்று அறிந்தார். அருகில் இருந்த கோயிலுக்குச் சென்று இறைவனுடைய புகழைப்பாடி, அவ்வளவு நெற்குவியல்களையும் திருவாரூரில் சேர்க்கும்படி வேண்டினார். அன்றிரவே, இறைவனுடைய தொண்டர்களாகிய பூதகணங்கள் அவ்வளவு நெற்குவியல்களையும் கொண்டுபோய்த் திருவாரூர் நகர் முழுவதும் நிறைத்துவிட்டார்கள். பரவையார் பல்கால் இறைவனைப் பணிந்து பணிந்து அவருடைய பெருமைகளைப் பாடினார். மக்கள் அனைவரும் வேண்டும் அளவு நெற்குவியல்களை எடுத்துக் கொள்ளுமாறும் பசியைப் போக்கிக் கொள்ளுமாறும் அவ்வம்மையார் தெரிவித்தார். இவ்வாறு அப் பஞ்சம் ஒரு முடிவுக்கு வந்தது. மக்களனைவரும் பரவையாரையும் இறைவனையும் போற்றிப் பாராட்டினார்கள்.

திருநாட்டியத்தான்குடியில் வாழ்ந்த கோட்புலி நாயனார் சோழ மன்னனின் படைத் தளபதியாக இருந்தார். இறைவனிடம் மிகுந்த பேரன்பு பூண்டிருந்த அத் தொண்டர் சுந்தரரைச் சந்தித்துத் தம் இல்லத்திற்கு எழுந்தருளுமாறு அழைத்தார். சுந்தரர் இசைவு தெரிவித்து அவருடன் சென்றார். சுந்தரருக்கு வழிபாடு செய்தபின் கோட்புலி நாயனார், சிங்கடியார், வனப்பகையார் என்ற தம் இரு புதல்வியருடன், சுந்தரருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம் இரு பெண்களையும் மணந்துகொள்ளும்படி வேண்டினார். சுந்தரர் அவ்வேண்டுகோளை மறுத்தவராய் அவ்விரு பெண்களையும் தாம் பெற்ற புதல்வியராகவே பாவித்து அவர்களைத் தம் மடிமீதிருத்தி அன்பு பாராட்டினார். பின்னர் சுந்தரர் கோயிலுக்குச் சென்று இறைவனைப் புகழ்ந்து பதிகம் பாடினார். அப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் தம்மைச் சிங்கடியப்பன் என்றும் வனப்பகையப்பன் என்றும் குறிப்பிடுகின்றார்.

அவ்விருவர்க்கும் தம்மையே தந்தையாக அவர் பாவித்த அன்பு உள்ளத்தை இதனால் நாம் அறியலாம்.

சுந்தரர், திருவாரூருக்குத் திரும்பினார். பங்குனி உத்திரத் திருநாள் பண்டிகையின்போது பரவையார் அடியார்களுக்கு அறங்கள் செய்யும் வகையில் பெருமளவில் பொன்னும் மணியும் பிறபொருள்களும் வழங்குவது வழக்கம். சுந்தரர் திருப்புகலூருக்குச் சென்று பரவையாருக்காகப் பொன் வழங்குமாறு இறைவனை வேண்டித் துதித்தார். அன்றிரவு தலையணையாகச் சில செங்கற்களை அடுக்கிவைத்து அங்கேயே உறங்கினார். அடுத்த நாள் காலையில் அவர் விழித்துப் பார்த்தபோது செங்கற்கள் யாவும் தங்கக் கட்டிகளாக மாறியிருந்ததைக் கண்டார். இறைவன் செய்த இந்த அற்புதத்தைக் கண்டு சுந்தரர் மிகவும் வியந்து இறைவன் புகழ்பாடித் திருவாரூருக்குத் திரும்பி வந்தார் வழியில் திருப்பனையூர் இறைவனுடைய காட்சி அவருக்கு வாய்த்தது

மீண்டும் புனித தலங்கள் பலவற்றுக்கும் சென்று வழிபட்டு இறைவனுடைய புகழ்களைப் பாடியவாறு சுந்தரர் திருப்பாச்சிலாச்சிரமத்திற்கு வந்து சேர்ந்தார். அங்கு இறைவனை வணங்கிப் பொற்காசு வேண்டினார். அவருக்கு உடனே கிடைக்கவில்லை. அவர் ஒரு பதிகம் பாடியவுடன் இறைவன் பொற்குவியலை வழங்கினார். சுந்தரருடைய பாடல்களைக் கேட்டு மகிழ இறைவனுக்கு மிகவும் விருப்பம் உண்டு.

பின்னர் சுந்தரர் விருத்தாசலத்திற்குச் செல்லப் புறப்பட்டார். வழியில் பல்வேறு புனித தலங்களைக் கண்டு வழிபட்டார். திருக்கூடலையாற்றூரை விட்டு விட்டார். எனவே இறைவன் அந்தண வடிவில் வரவும் சுந்தரர் அவரிடம் விருத்தாசலத்திற்குச் செல்ல வழி கேட்டார். அந்தணர் குறிப்பிட்ட ஓரிடம்வரைக்கும் உடன் வந்து உடனே மறைந்துவிட்டார். அந்த இடம் திருக்கூடலையாற்றூருக்கு மிகவும் அருகில் இருந்தது. சுந்தரர் அத்தலத்தை வழிபட்டு இறைவன் புகழ்பற்றிய பாடல் பாடினார்.

பின் சுந்தரர் விருத்தாசலத்திற்கு வந்தார். இறைவனை வழிபட்டுப் பொற்காசுகள் வேண்டி ஒரு பதிகம் பாடினார். இறைவன் 12,000 பொற்காசுகளை வழங்கினார். திருவாரூருக்கு இவற்றைச் சேர்ப்பிக்குமாறு சுந்தரர் இறைவனிடம் வேண்டினார். மணிமுத்தாறு என்ற நதியில் அவற்றை இட்டுத் திருவாரூர் கமலாலயம் என்ற குளத்தில் மூழ்கி அவற்றை எடுத்துக் கொள்ளுமாறு இறைவன் பணித்தார். சுந்தரர் அவ்வாறே செய்து, மாற்றறிவதற்காக ஒரு பொற்காசைத் தம்மிடம் வைத்துக்கொண்டார். திருவாரூருக்குத் திரும்பியதும் சுந்தரரும் பரவையாரும் அவற்றைத் திரும்பப் பெறுவதற்காகக் குளத்திற்குச் சென்றனர். குளத்தின் கிழக்குப் பகுதியைத் தமக்காகப் பிரித்துக்கொண்ட சுந்தரர் குளத்தில் ஏற்கனவே இட்டவரைப்போல அக் காசுகளைத் தேடினார். அவரால் கண்டெடுக்க முடியவில்லை. இதயம் வருந்தியவராய் ஒரு பாடல் பாடினார். இறைவன் விரும்பியதும் இதுவே. சுந்தரர் பொற்காசுகளைப் பெற்றார். அனைவரும் பெருவியப்படைந்தனர். ஆனால் பரிசோதித்த போது சுந்தரர் தாம் வைத்திருந்த பொற்காசைக் காட்டிலும் அவை மாற்றுக் குறைந்திருப்பதைக் கண்டார். ஒரு பாடல் பாடினார்; இறைவன் அவை முதலில் இருந்த அளவுக்கே மாற்றுயர்ந்த பொன்னைத் திருப்பித் தந்தார். சுந்தரரின் பாடல்களைக் கேட்பதில் இறைவன் மிகுந்த விருப்பங்கொண்டிருந்தார்.

சுந்தரர் இன்னொரு தலயாத்திரைக்காகப் புறப்பட்டார். வழியில் பசியாலும் தாகத்தாலும் வருந்தினார். நம் அனைவர் உள்ளங்களிலும் உறைகின்ற இறைவன் அந்தணர் வடிவில் வந்து ஒரு தண்ணீர்ப் பந்தலை அமைத்துச் சுந்தரர் வருகைக்காகக் காத்திருந்தார். சுந்தரரும் அடியார்களும் திருஐந்தெழுத்தைப் பாடிக்கொண்டு தண்ணீர்ப் பந்தலுக்குள் நுழைந்தனர். அந்தணர் சுந்தரருக்கு உணவும் தண்ணீரும் வழங்கிச் சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொள்ளுமாறு கூறினார். அனைவரும் உண்டு மகிழ்ந்த பின்னரும் அங்கிருந்த உணவுகளின் அளவு சிறிதும்

குறையவில்லை. உண்டபின் ஓய்வாக அவர்கள் சிறிதே கண்ணயர்ந்தபோது இறைவன் மறைந்து விட்டார். இறைவன் செயல் என்று பின்னரே அவர்கள் தெளிவாகத் தெரிந்துகொண்டார்கள். இதைக் குறித்து சுந்தரர் பாடல் பாடினர்.

இது நிகழ்ந்தபின், உடனே வேறொரு சமயம் திருக்கச்சூருக்குச் சென்ற சுந்தரர் கோயிலுக்குச் சென்று வழிபட்டபின் கோயிலுக்கு வெளியே ஓரிடத்தில் சுந்தரர் தங்கியபோது மிகவும் பசியால் வருந்தினர். யாவும் அறியும் இறைவன் அந்தண வடிவில் சுந்தரரிடம் வந்து, 'மிகவும் பசித்துள்ளீர், இங்கேயே காத்திருப்பீர். நான் உணவு கொண்டு வருகிறேன்' என்று கூறிவிட்டுக் கொளுத்தும் வெயிலில் புறப்பட்டு வீடுதோறும் உணவு யாசித்துப் பெற்ற அவ்வுணவை சுந்தரரிடம் கொண்டு வந்து வழங்கினர். சுந்தரரும் அடியார்களும் உண்ணும்போது அந்தணர் மறைந்துவிட்டார். இறைவனே இவ்வாறு செய்தார் என்று அனைவரும் தெரிந்துகொண்டார்கள். இறைவனுடைய பெருங் கருணையை வெளிப்படுத்தும் வகையில் இந்நிகழ்ச்சியைப் பற்றிச் சுந்தரர் பாடல் பாடினர்.

இதன் பின்னர், அவர் திருவொற்றியூருக்குச் சென்று இறைவனை வழிபட்டவராய்ச் சிறிது காலம் தங்கியிருந்தார். கைலையில் பார்வதி அம்மையாரின் மற்றொரு தோழியாகிய அநிந்திதையார், தாமும் மனிதப்பிறவி எடுத்து, தொண்டை நாட்டு ஞாயிறு ஊரில் சங்கிலியாராக வாழ்ந்து கொண்டிருந்தார். அவருடைய தந்தையார் ஞாயிறு கிழார் என்ற வேளாளர். அவரும் சிவபெருமானுடைய திடமான பக்தர். குழந்தைப் பருவத்திலிருந்தே சங்கிலியார் பார்வதி பிராட்டியாருக்குப் பணிவிடைகளைச் செய்து வந்தார். ஒரு முறை பெற்றோர்கள் அவரிடம் அவர் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று தெரிவித்தனர். ஆனல் ''திருமணம்'' என்ற சொல்லே அவரை மயக்கத்துடன் விழுமாறு செய்துவிட்டது.

நீண்ட நாள் கழித்து பெருமைவாய்ந்த வேளாள ரொருவர் அவரை மணக்க விரும்பினுர். பெண்ணின் தந்தையாரிடம் பெண் பேச அவர் சிலரை அனுப்பினுர். ஞாயிறுகிழார் இதைப்பற்றித் தம் பெண்ணிடம் சொல்லக்கூட விரும்பவில்லை. ஏதோ சாக்குச் சொல்லி அவர் அவர்களை திரும்பிப்போகச் செய்தார். உடனே சங்கிலியாரை மணக்க விரும்பிய பையனும் பெண் பேசச் சென்றவர்கள் அனைவரும் இறந்துபோய் விட்டார்கள். இதைக் கேள்வியுற்ற ஞாயிறுகிழார் தம் பெண்ணின் பெருமையைப் புரிந்து கொண்டார். அவர் சங்கிலியாரைத் திருவொற்றியூருக்கு அழைத்துச் சென்று அவர் தங்கியிருப்பதற்காக ஒரு சிறிய ஆசிரமத்தை நிறுவினுர்.

சங்கிலியார் பயின்று வந்த சாதனைகளில் ஒரு பகுதி கோயில் இறைவனுக்காக மலர் மாலை தொடுப்பதாகும். அவர் தவருமல் கோயிலுக்குச் சென்று இறைவனை வழி பட்டு வந்தார். ஒரு நாள் சுந்தரரும், அடியார்களும் கோயிலுக்குச் சென்றனர். வழிபாட்டை முடித்துக் கொண்டு அவர்கள் இறைவனுக்குப் பக்தர்கள் மலர் மாலைகளைத் தொடுத்துக்கொண்டிருந்த இடத்துக்கு வந்தனர். சங்கிலியாரும் அங்கு இருந்தார். பழைய சம்ஸ்காரங்கள் காரணமாகச் சுந்தரர் சங்கிலியாரின் அழகில் ஈடுபட்டார். அவரை மணந்துகொள்ள விரும்பி இறைவனிடம் தம் விருப்பத்தைத் தெரி வித்தார். அவருடைய விருப்பத்தை நிறைவேற்றுவ தாக இறைவன் உறுதி தந்தார்.

இறைவன் சங்கிலியாரின் கனவில் தோன்றி, 'நல்லாய்! உன் பக்தியால் மிகவும் மகிழ்ந்தேன். உன் நலம் கருதி ஒரு செய்தியைத் தெரிவிக்கின்றேன். சுந்தரர் உன்னை மணக்க விரும்புகின்ருர். அவர் என் தோழர். உன் திருமணத்தை ஏற்பாடு செய்ய என்னிடம் வேண்டினுர். எனவே அவரை மணந்து கொள். நீ மிகவும் மகிழ்ச்சியுடன் வாழ்வாய்!' என்று கூறினுர். சங்கிலியார் இறைவன் முன் பணிந்தெழுந்து 'எம்பெருமானே! தங்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து

அவரை மணப்பேன். ஆனால் ஏற்கனவே மணமாகி யிருக்கின்ற அவர் என்னைவிட்டுப் பிரிந்து செல்வார் என்று அஞ்சுகின்றேன்' என்று முறையிட்டார் 'எக் காரணத்தை முன்னிட்டும் பிரிந்து செல்ல மாட்டேன்' என்று சுந்தரரிடம் உறுதிமொழி பெற்றுக்கொள்ளு மாறு இறைவன் சங்கிலியாரிடம் தெரிவித்தார்.

பின் இறைவன் சுந்தரரின் முன் தோன்றிச் சங்கிலி யாரைவிட்டுப் பிரியாமலிருந்தால் மணந்துகொள்ள இசைந்திருப்பதாகத் தெரிவித்தார். சுந்தரர், 'பெருமானே! நான் எப்போதும் புனித தலங்களுக்கு யாத்திரை செய்தவாறு இருப்பதனால் இந்த நிபந் தனையை எவ்வாறு ஏற்றுக்கொள்வேன்? ஆனால் நான் அப்படிச் செய்ய வேண்டுமென்பது தங்கள் விருப்ப மாயின், தங்கள் திருவுருவத்தின் முன்னிலையில் நான் உறுதிமொழி தரும்போது தாங்கள் கோயிலில் இலிங்கத் திருமேனியில் எழுந்தருளியிராமல் பக்கத்தில் உள்ள மகிழ மரத்தடியில் எழுந்தருளியிருக்கவேண்டும்' என்று விண்ணப்பம் செய்தார். இறைவனும் இசைவு தெரிவித்து மறைந்தார்.

அவர் மீண்டும் சங்கிலியார்முன் தோன்றி, 'நல்லாய்! சுந்தரர் உன் நிபந்தனைக்கு இசைந்தார். ஆனால் உறுதி மொழியைக் கோயிலில் உள்ள இலிங்கத் திருமேனியின் முன்னிலையில் தராமல், பக்கத்தில் உள்ள மகிழ மரத்தின் முன்னிலையில் தருமாறு வேண்டிக்கொள்' என்று தெரிவித்தார்.

அடுத்த நாள் காலையில் சங்கிலியார் கோயிலுக்கு வந்தார். சுந்தரர் அங்கு காத்திருந்தார். சங்கிலி யாருடன் வந்தவர்கள் சுந்தரரிடம் உறுதிமொழியை மகிழ மரத்தடியின் முன்னால் தருமாறு மணப்பெண் விரும்புவதாகத் தெரிவித்தனர். சுந்தரர் அதிர்ச்சி யடைந்தார், எனினும் மறுக்க முடியாமல் அவ்வாறே உறுதிமொழி தந்தார். உடனே திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

திருவாரூரில் வசந்த உற்சவம் ஆண்டுதோறும் மிகப் பெரிய அளவில் பெரும் சிறப்புடன் கொண்டாடப்பட்டு வந்தது. அந்த நாள் நெருங்குவதை நினைத்து சுந்தரர் அங்கு செல்ல விரும்பினர். இறைவன் திருமுன்பு பரவையாரின் ஆடலும் பாடலும் நடைபெறுவதை அவர் நினைவு கூர்ந்தார். அதேசமயம் அவர் சங்கிலியாரை விட்டுப்பிரிய முடியாத நிலையும் இருந்தது. மாறுபட்ட இரு கடமைகளுக்கும் இடையே எதைச் செய்வதென்று முடிவு செய்ய முடியாதவராய் அவர் நீண்ட நேரம் தத்தளித்தார். இறுதியில் அவர் பிரிந்து செல்லத் துணிந்தார்.

திருவொற்றியூரின் எல்லையை அவர் தாண்டிய உடனே தம் கண் பார்வையை இழந்து தரையில் விழுந்துவிட்டார். தெய்வநீதிச் சட்டத்தை மீறுவோர் யாரும் அதன் தண்டனையிலிருந்து தப்ப முடியாது. சுந்தரர் மயங்கி விழுந்த நிலையிலிருந்து மெதுவாகத் தம் உணர்வைப் பெற்ருர். உடனே தம் பிழையை உணர்ந்து, மன்னிக்குமாறு இறைவனிடம் அழுது தொழுது முறையிட்டார்; தமக்குப் பார்வை தருமாறு வேண்டினர். 'பெருமானே! தங்களிடம் முற்றிலும் சரணடைகின்றேன். எப்போதும் தங்கள் திருப்பெயரையே ஓதி வருகின்றேன். பார்வை இழந்து வழுக்கி வீழினும் திருப்பெயரல்லால் அறியேன் மறுமாற்றம். மறவாதே நினைக்கின்றேன். மனத்தில் தங்களையே! கருணையங்கடலே! நாயனையேன் பிழை செய்யினும் தாயனைய தாங்கள் பொறுத்தருளுவதன்ருே கடன்! தயாநிதியே! அடியேனைக் காப்பாற்றுவீராக!' என்று இறைஞ்சினர்.

கண்ணிழந்த நிலையிலும் திருவாரூர் இறைவனுடைய கோலத்தைக் கண்ணுரக் கண்டு மகிழ வேண்டும் என்ற தாகம் அவருக்குத் தணியவில்லை. வழியில் இருந்த மக்கள் சிலரின் உதவியினுல் அவர் திருமுல்லைவாயில் என்ற தலத்துக்கு வந்து சேர்ந்தார். இங்கு இறைவனிடம் பார்வை தருமாறு மீண்டும் தொழுது வேண்டினர். திருவெண்பாக்கத்தில் மீண்டும்

இறைவனிடம் இவ்வாறே தம் குறையைத் தீர்க்குமாறு வேண்டினர். 'பெருமானே! தங்கள் அடியாருள் ஒருவனுக என்னை ஏற்றுக்கொண்டவரே! என் பணிவான வணக்கங்களையும் வழிபாடுகளையும் ஏற்று மகிழ்ந்தவரே! சாதுரியமான தந்திரத்தால் என்னை ஏமாற்றியவரே! கோயிலினுள்ளே இருக்கின்றீரா?' என்று புலம்பினர். 'உளோம் போகீர்' என்று இறைவன் இரக்கமின்றித் தெரிவித்துக் குருடன் பயன்படுத்தும் கழியொன்றை வழங்கினர். இறைவன் இவ்வாறு தம்மைப் புறக்கணித்ததனல் மனம் புண்பட்டுச் சுந்தரர் இறைவனுடைய கருணையை வேண்டி இரந்தார். 'கருணையங்கடலே! நான் தங்களை என் ஒரே ஆதரவாகக் கொண்டு தங்களிடம் அடைக்கலம் புகவில்லையா? பிழை பொறுப்பீர்கள் என்று கருதித் தவறு செய்து விட்டேன். பொதுமக்கள் கூறும் குறைகளையும் அலட்சியப்படுத்துகின்றீர்கள். உங்கள் அடியவன் தங்கள் திருவடிகளில் வீழ்ந்து தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு மன்னிப்பை வேண்டி ஏக்கத்துடன் மனதாரக் கண்ணீர் விட்டழுதால் அவனுடைய வேண்டுகோளைக் கேளாக் காதுடையவராகத் தாங்கள் இருந்தால் அனைவரும் உங்கள்மீது குற்றம் சுமத்தமாட்டார்களா? என் துயரம் தங்களுக்குப் புரியவில்லையா? தாயை நேசிக்கும் குழந்தை நீண்டநாள் பிரிவுக்குப்பின் தாயைத் தழுவிக்கொள்ள எவ்வளவு ஆவலுடன் வரும்! அக் குழந்தைபோல் நான் தங்களை நாடி வந்துள்ளேன்; ஆனல் தாங்கள் என்னை அந்நியன்போல நடத்து கிறீர்கள். நானே தங்களைச் சிறிது நேரம் மகிழ மரத் தடியில் தங்கியிருக்கச் சொன்னேன்; தாங்களோ என்னை ஏமாற்றுவதற்காகச் சங்கிலியாரிடம் மகிழ மரத்தடியில் உறுதிமொழி பெற்றுக்கொள்ளுமாறு தெரிவித்து விட்டீர்கள். சங்கிலியாரை எனக்குத்தந்து எல்லா இன்பங்களையும் வழங்கினீர்கள். ஆனல் தற்போதோ குருடன் கழியை என்னிடம் தந்து 'போகீர்' என்று சொல்லுகிறீர்கள். தங்கள் கருணைக்குப் பாத்திரம் ஆகும் தகுதியை நான் இழந்துவிட்டேனு? அருள்கூர்ந்து என் பிழை பொறுத்தருளும்! என் துயரங் களிலிருந்து என்னை விடுவித்தருளும்!' என்று இரந்தார்.

பின்னர் இறைவனிடம் தம்மை முற்றிலும் ஒப்படைத்தவராய், வழியில் பல்வேறு தலங்களையும் வழிபட்டவராய்ச் சுந்தரர் காஞ்சிபுரத்தை அடைந்தார். காமாட்சி அன்னையை வழிபட்டுத் தம் துயரங்களைத் தெரிவித்து அவற்றினின்றும் தம்மை விடுவிக்குமாறு வேண்டினர். ஏகாம்பர நாதரையும் தொழுதார். அவருடைய இடதுபாகத்தில் வீற்றிருக்கும் அருளன்னை ஏற்கனவே சுந்தரருடைய வேண்டுகோளால் மனம் நெகிழ்ந்தவராய்ச் சுந்தரர்மீது கருணை பொழியத் திருவுளங்கொண்டார். சிவபெருமானும் இதை அறிந்து கொண்டார். அவர் உடனே சுந்தரருக்கு இடது கண்ணின் பார்வையை மீட்டுத் தந்தார். அளவிறந்த மகிழ்ச்சியடைந்த சுந்தரர் நிலத்தில் விழுந்து புரண்டு அன்புக் கண்ணீரை ஆறுகப் பெருக்கினர்.

இறைவனுடைய புகழ்களைப் பாடியவாறு சில நாள் கழிந்த பின்னர் சுந்தரர் திருவாரூருக்குப் புறப்பட்டார். திருவாவடுதுறையில் இறைவனிடம் தம்மை மன்னிக்குமாறு மீண்டும் வேண்டித் தமக்கு மற்றொரு கண்ணையும் பார்வை பெறுமாறு செய்யும்படித் தொழுதார். பின் திருத்துருத்தியை அடைந்தார். அங்கு வடபால் உள்ள குளத்தில் மூழ்கி எழுமாறு இறைவன் அவரிடம் தெரிவித்தார். சுந்தரர் அவ்வாறே மூழ்கி வெளிப்பட்டார். அவருடைய உடல் பொன்போலும் நிறம் பெற்றுப் பொலிவுற்றதைக் கண்டு அனைவரும் வியந்தனர். இம்மாற்றத்தைக் கண்டு மக்கள் பெருந்திகைப்படைந்தனர். கோயிலுக்குச் சென்று சுந்தரர் இறைவனை வழிபட்டு மகிழ்ந்தார்.

சுந்தரர் திருவாரூரின் எல்லையை அடைந்தார். ஒரு கண்ணல் மட்டும் இறைவனுடைய திருக்காட்சி முழுவதையும் கண்டுகளிக்க முடியாதென்று வருந்தினர். கோபுரம் பார்வையில் பட்டவுடனே பரவசமடைந்தார். இறைவனுடைய அழகிய கோலம் தம் இரு கண்களுக்கும் விருந்தாக அமையவேண்டுமென்று விரும்பினர். எனவே தம் மற்றொரு கண்ணுக்கும் பார்வை தருமாறு இறைவனிடம் வேண்டித் தொழுதார்.

சுந்தரருடைய உயர்ந்த பக்தியும் கண்ணீரும் இறைவனுடைய உள்ளத்தை நெகிழச் செய்தன. உடனே அவர் மற்றொரு கண்ணையும் குணப்படுத்தினர். சுந்தரர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவர் இறைவனை வழிபட்டுத் தெய்வீகப் பேரின்பத்தில் முற்றிலும் மூழ்கியவராய்த் தம்மையும் மறந்தார்.

இதற்கிடையே, சுந்தரரை வரவேற்கவும், அவரைச் சந்திப்பதற்காகப் பரவையார் கொண்டுள்ள பேராவலைத் தெரிவிக்கவும் சென்றவர்கள், அவர் சங்கிலியாரை மணந்துகொண்ட செய்தியை அறியலாயினர். அவர்கள் திரும்பி வந்து பரவையாரிடம் தெரிவிக்கவும் அவர் ஆழ்ந்த வருத்தத்தில் மூழ்கினர். அவர் பெரிதும் சினமும் கொண்டார். பரவையாருடைய ஆட்கள், சுந்தரருடைய அடியார்களை வீட்டுக்குள் நுழையவும் விடவில்லை. இதையறிந்த சுந்தரர் மனம் புண்பட்டு வருந்தினர் பரவையாருடைய ஊடலைத் தீர்ப்பதற்காகச் சுந்தரர் மூத்த அடியார்கள் சிலரை அனுப்பினர். அவர்களுடைய முயற்சி தோல்வியடைந்தது. அடியார்கள் அனைவரும் உறங்கிக்கொண்டிருக்கும் நள்ளிரவு நேரத்தில் சுந்தரர் இறைவனை வணங்கிப் பரவையாருடைய மனம் சினம் நீங்குமாறு துணை செய்ய வேண்டினர். இறைவனும் தோன்றி உதவி செய்வதாக வாக்களித்தார். சுந்தரருடைய செய்தியைக் கொண்டு செல்லும் அர்ச்சக அந்தணராகக் கோலங்கொண்டு இறைவன் பரவையாருடைய இல்லம் சென்றார். அவர் சுந்தரருடைய வேண்டுகோளை எடுத்துச் சொல்லி ஊடல் நீங்குமாறு பரவையாரிடம் வேண்டினர். சுந்தரருடைய பிரிவினால் தாமும் வருந்தியபோதிலும் பரவையார் மறுத்துவிட்டார். சுந்தரர் இரண்டாவது திருமணம் செய்துகொண்டமையால் பரவையாருக்கிருந்த எரிச்சல் அந்த அளவுக்கு இருந்தது. இறைவனுடைய வருகையை ஆவலுடன் எதிர்நோக்கியிருந்த சுந்தரரிடம் அவர் அமைதியாகத் திரும்பி வந்தார் நிகழ்ந்தவற்றையெல்லாம் இறைவன் சுந்தரரிடம் தெரிவிக்கவும் அவர் தாங்கமுடியாத துயரத்தால் அடியற்ற மரம்போல் நிலத்தில் வீழ்ந்து, 'பெருமானே! தாங்கள் உதவி

செய்யாவிடில் நிச்சயம் உயிர் துறப்பேன்' என்று புலம்பினார். சுந்தரருடைய இரங்கத்தக்க நிலையைக் கண்ட இறைவன் உதவி செய்வதாக உறுதிமொழி தந்து மீண்டும் பரவையாருடைய இல்லம் சென்றார்.

இதற்கிடையில், பக்தி நிறைந்த பரவையார் அந்தணராக வந்தவர் வேறு யாரும் அல்ல, இறைவனே எனத் தெரிந்து கொண்டு, அவர் வந்தபோது நாம் தெரிந்து கொள்ளவில்லையே என்று மிகுந்த துயரம் அடைந்தார். இறைவன் திரும்பவும் வந்தபோது இறைவன் தம் உண்மையான வடிவத்தைக் காட்டினார். பரவையார் உடனே அவருடைய திருவடிகளில் வீழ்ந்து இறைஞ்சினார். இறைவன், 'பரவையாரே! சுந்தரருடைய வேண்டுகோளை எடுத்துச் சொல்லுவதற்காக அவர் என்னைத் திரும்பவும் அனுப்பியுள்ளார். இப்போது, இனியும் மறுக்க வேண்டாம். உன் பிரிவாற்றாமையால் அவர் தாங்க முடியாத துன்பம் அடைந்துள்ளார். ஊடல் தீர்ந்து அவரை ஏற்றுக் கொண்டு இங்கு வருவதற்கு இசைவு தருக!' என்று கூறினார். பரவையார் மீண்டும் அவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்து இருகரமும் கூப்பித் தொழுது, ''பெருமானே! அந்தணர் வடிவில் தாங்கள் முதலில் வந்தபோது தங்களை அறியாமற்போனேன். தாங்கள் மீண்டும் வந்து தங்கள் உண்மை வடிவைக் காட்டியருளினீர்கள். அந்தோ! தங்கள் பெருங் கருணைத் திறத்தை என்னென்பேன்! தாங்கள் வந்து என் குடிசையைப் பெருமைப்படுத்தினீர்கள். என்பால் பெருங் கருணை பொழிந்தீர்கள். தங்கள் தோழரின் பொருட்டு நள்ளிரவு நேரத்தில் இவ்வளவு பெரும் துன்பத்தை மேற்கொண்டீர்கள். தங்கள் விருப்பத்திற்கு மாறாக அடியாள் எப்படி நடப்பேன்? தங்கள் மேலான ஆணைக்குக் கீழ்ப்படிகின்றேன்; இசைவும் தெரிவிக்கின்றேன்' என்று கூறினார். இறைவன் இதைக் கேட்டுப் பெரு மகிழ்ச்சியடைந்தார். பரவையாருக்கு நல்லாசிகள் வழங்கிச் சுந்தரரிடம் திரும்பி வந்தார். பரவையாருடைய ஊடல் நீங்கிவிட்டதென்றும் இனி, அவர் பரவையாரிடம் செல்லலாம் என்றும் இறைவன்

சுந்தரரிடம் தெரிவித்தார். பின்னர் மறைந்துவிட்டார். சுந்தரர் மகிழ்ச்சியில் மூழ்கித் திளைத்தவராய் இறைவனுடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடினார்.

இதற்கிடையில், பரவையார் தம் இல்லத்தை அழகாக அலங்கரித்துத் தம் நாயகராகிய சுந்தரருடைய வருகையை ஆவலுடன் எதிர்நோக்கிக் காத்திருந்தார். சுந்தரர் தம் அடியார்களுடன் அவருடைய இல்லத்திற்கு வந்து சேர்ந்தார். பரவையார் அவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தார். இவ்வாறு அவர்கள் நீண்ட பிரிவின் பிறகு ஒன்று சேர்ந்தனர்.

எனினும் இத்துடன் யாவும் முற்றுப் பெறவில்லை. சுந்தரர் சிவபெருமானையே தம் தூதுவராக அனுப்பினார் என்னும் செய்தி பொன்னி நாட்டுத் திருப்பெருமங்கலத்தில் வாழ்ந்த ஏயர்கோன் கலிக்காம நாயனாருடைய செவிக்கு எட்டிற்று. அவர் சிவபெருமானுடைய மிக உயர்ந்த தொண்டர். குடும்பத் தகராறைத் தீர்ப்பதற்காகச் சிவபெருமானையே தூதுவராக அனுப்பிய சுந்தரர்மீது அடங்காத சினம் கொண்டார். கலிக்காம நாயனாருடைய வரலாற்றைப் பேசும்போது, நாம் சிவபெருமான், தம்மிடம் ஆழ்ந்த பக்தி கொண்டுள்ள இவ்விரு நாயன்மார்களிடையே எவ்வாறு அற்புதமான, மனித அறிவுக்கெட்டாத வகையில், சமாதானத்தை நிலை நாட்டுகிறார் என்பதைக் காண்போம்.

இறைவனுடைய மற்றொரு அரசத் தொண்டராகிய சேரமான் பெருமாள் நாயனாருக்கும், சுந்தரருக்கும் நட்பினால் பிணைப்பு ஏற்படுமாறு இறைவன் செய்வதும் இதுபோல் மிகவும் ஆவலைத் தூண்டுவதாகும். சேரமான் பெருமாள் நாயனாருடைய வரலாற்றில் நாம் இச் செய்தியை விரிவாகக் காண்போம்.

சேரமான் பெருமாள் நாயனாருடன் சுந்தரர் மதுரைக்குச் செல்லும் வழியில் திருநாகைக்காரோணத்தை வந்தடைந்தார். இங்கு சுந்தரர் இறைவனிடம் பாடிய பாடலில் பின்வரும் பொருள்களை

வழங்குமாறு வேண்டினார்:— முத்துமாலை, விலையுயர்ந்த மணிகள், கஸ்தூரி, மூக்குக் கண்ணாடி; சுகந்தம், உயர் வகை ஆடை, பொன் அணிகள், திருவாரூர்ச் செல்வத்தில் மூன்றில் ஒரு பகுதி, வாயுவேகத்தில் ஓடக் கூடிய குதிரைகள், தங்கத்தாலான மலர்கள், பல்லக்கு முதலியன. ஆண்டானுக்கும், அடிமைக்கும் இடையில் எவ்வளவு அற்புதமான உறவு! சுந்தரர் இறைவனைத் தம் தோழராகக் கருதினார். ஏனெனின் இறைவனும் அவ்வாறே விரும்பினார். அவர் இறைவனிடத்தில் சக்ய பாவனையைப் பாராட்டினார். (நெருங்கிய தோழருடைய மனப்பான்மை).

சேரமான் பெருமாளுடன் சேர்ந்து சுந்தரர் பல்வேறு தல யாத்திரைகள் சென்றார்; தென்னாட்டரசர்களையும் சந்தித்து மகிழ்ந்தார். ஒருமுறை அவர்கள் திருக்கண்டியூருக்குச் சென்றபோது, ஆற்றின் எதிர்க்கரையில் இருந்த திருவையாற்றைக் கண்டனர். ஆற்றில் வெள்ளப் பெருக்கு இருந்தமையால் அவர்களால் கடக்கமுடியாது போயிற்று. உதவிசெய்யுமாறு இறைவனிடம் சுந்தரர் தொழுது வேண்டினார். இறைவன் மனங்குளிருமாறு பாடல் பாடினார். உடனே ஆறு அவர்கள் நடந்து சென்று மறுகரையை அடையுமாறு பிரிந்து மணல் தரையைத் தோற்றுவித்தது. அவர்கள் மறுகரையில் ஏறியவுடனே ஆறு தன் பழைய வடிவத்துடன் சேர்ந்து காணப் பட்டது. இறைவனுடைய அற்புதச் செயலைக் கண்டு அவர்கள் பெருமகிழ்ச்சியடைந்தனர். இறைவனுடைய கட்டளையால் அவருடைய பக்தர்களுக்குப் பணிவிடை செய்ய ஐம்பெரும் பூதங்கள்கூடத் தயாராக உள்ளன.

பின்னர் சேரமான் சுந்தரரைத் தம்முடைய இடத்திற்கு மிகவும் பெருமையுடனும் ஆடம்பரத்துடனும் அழைத்துச் சென்றார். சுந்தரர் சேரமானுடன் சில காலம் தங்கியிருந்தார். திடீரென்று அவர் திருவாரூர் இறைவனைப்பற்றி நினைந்து உடனே அங்கு செல்ல விரும்பினார். சேரமான் தாமும் அவரோடு உடன் செல்ல முடியாமையால் பெரிதும் வருத்தமுற்றார்.

சுந்தரர் அவருக்கு ஆறுதல் கூறி அங்கேயே தங்கி யிருக்குமாறு வற்புறுத்தி நாட்டை விவேகத்துடனும் நீதியுடனும் ஆளுமாறு வேண்டினர். சேரமான் அவருக்கு அடிபணிந்து செல்வச் சிறப்புள்ள பரிசுகள் பலவும் வழங்கினர். அவற்றையெல்லாம் சுமந்துகொண்டு சுந்தரரோடு உடன் செல்லுமாறு தம் சொந்தப் பணி ஆட்களையே அனுப்பினர். இறைவனுடைய விருப்பமோ சுந்தரர் தம்மிடம் மட்டுமே பரிசுகள் பெறவேண்டும் என்று இருந்தது. அவருடைய தோழர் எவ்வாறு பிறரிடம் பரிசுகள் பெறலாம்? எனவே சேரமான் வழங்கிய பரிசுகளையெல்லாம் சுந்தரரிடமிருந்து பறித்துக்கொள்ள விரும்பினர். சுந்தரரும் அவருடைய பரிவாரங்களும் திருமுருகன்பூண்டி வழியாகக் கடந்து செல்லும்போது சுந்தரர் சேரமானிடம் பெற்ற செல்வங் களையெல்லாம் வழிப்பறி செய்யுமாறு இறைவன் தம் பூதகணங்களை அனுப்பினர். அவர்கள் வேடுவர்போல் கோலம்கொண்டு பரிசுகளைச் சுமந்துகொண்டு சென்ற கூட்டத்தாரைத் தாக்கினர்கள். கூட்டத்தார் அனைத்தையும் கீழே போட்டுவிட்டுத் தப்பியோடினர். அவர்கள் சுந்தரரை அணுகி நடந்தவற்றைத் தெரிவித் தார்கள். சுந்தரர் ஊரில் உள்ள கோயிலுக்குச் சென்று ஒரு பதிகம் பாடினர். அவர் கோயிலைவிட்டு வெளியே வந்தபோது கொள்ளையடிக்கப்பட்ட செல்வங்கள் யாவும் அங்கு இருப்பதைக் கண்டு வியப்புற்றார். இப்போது அவையெல்லாம் இறைவனே தந்த பரிசுகள்; எனவே தம்பிரான் தோழராகிய சுந்தரர் இனி அவற்றை ஏற்றுக் கொள்ளலாம். இறைவனுடைய திருவிளையாடல்கள் மிகவும் ஆச்சரியமானவை!

சிறிது காலங் கழிந்த பின்பு சுந்தரர் சேரமான் பெருமாளைக் காண மீண்டும் விரும்பினர். கொடுங் கோளூருக்குச் செல்லும் வழியில் அவர் திருப்புக்கொளி யூர் அவிநாசியை அடைந்தார். அவர் இந்த ஊரில் நுழைந்தவுடனேயே ஒரே நேரத்தில் எதிரெதிர் வீடு களில் இருந்து மங்கள ஒலியும் அழுகை ஒலியும் கேட்டார். விசாரித்தபொழுது அவர் அறிந்த செய்தி: அவ்விரு வீடுகளிலும் இருந்த ஒரே வயதுடைய அந்தணச்

சிறுவர் இருவர் நீராடி வருவதற்காகக் குளத்திற்குச் சென்றபோது ஒருவனை முதலை ஒன்று விழுங்கிற்று; மற்றொருவன் தெய்வாதீனமாகத் தப்பித் திரும்பினான். அவ்வாறு தப்பிய அச்சிறுவனுக்கு இன்று பூணூல் கலியாணம் நடைபெற்றது; எனவே அவனுடைய வீட்டில் மங்கள ஒலி கேட்டது. இறந்த சிறுவனுடைய வீட்டார் அவன் உயிருடன் இருந்திருந்தால் அவனுக்கும் பூணூல் கலியாணம் நடத்தியிருக்கலாமே என்ற ஏக்கத்தால் அவன் மறைவு குறித்து அழுதுகொண்டிருந்தார்கள். மகனை இழந்த பெற்றோருக்கு ஆறுதல் கூறச் சுந்தரர் விரும்பினார். சுந்தரர் வீட்டு வாசலை அடைந்த போது அவ்வீட்டார் அழுகையை நிறுத்திவிட்டுச் சுந்தரரை வரவேற்க வெளியில் வந்தனர். அவரைக் காணவேண்டுமென்று அவர்கள் நீண்ட நாட்களாக ஆவலுடன் காத்திருந்தனர். எனவே தம் வருத்தத்தை மறந்து அவரை வரவேற்க முன்வந்தனர். அவர்களுடைய அன்பு சுந்தரருடைய நெஞ்சை உருக்கியது. இறந்த சிறுவனை உயிர்ப்பிக்க வேண்டுமென்று இறைவன் திருவருளால் அவர் உள்ளத்தில் எண்ணம் உண்டாயிற்று. எனவே அவர் அதே குளத்தை அடைந்து அவிநாசி அப்பரைத் தொழுது அந்தச் சிறுவனை அவனுடைய பெற்றோருக்குத் திருப்பித் தருமாறு வேண்டிப் பதிகம் பாடினார். சுந்தரருடைய பாடலைக்கேட்டு மகிழ்ந்த இறைவன், முதலையின் வயிற்றினுள் புகுந்து ஏற்கனவே ஜீரணமாகியிருந்த சிறுவனுடைய உடலை மீண்டும் உருவாக்கினார். எமதருமராசனும் தன் பங்காகத் தன் பாதுகாப்பிலிருந்த, தான் முன்பு கவர்ந்து வந்த, சிறுவனுடைய உயிரை விடுவித்தான். இப்போது அந்த முதலை சிறுவனை வெளியே உமிழ்ந்தது. அனைவரும் இக்காட்சியைக் கண்டு பெருவியப்படைந்தனர். முன்னர் விபத்து நடந்த காலத்தில் இருந்ததைவிடச் சிறுவன் தற்போது மிகவும் அழகாக இருந்தான்; இவ்வளவு காலமும் உயிருடனிருந்திருந்தால் எவ்வளவு வளர்ச்சி பெற்றிருப்பானோ அதற்கேற்ற வளர்ச்சி காணப்பட்டது. சுந்தரர் செய்த இந்த அற்புதத்தைக்கண்டு அனைவரும் ஆச்சரியமடைந்தனர். சிறுவனுடைய பெற்றோர்கள் அளவு

கடந்த மகிழ்ச்சியடைந்தவர்களாய்ச் சுந்தரருடைய திருவடிகளில் பணிந்து வணங்கினார்கள். சுந்தரர் சிறுவனையழைத்துக்கொண்டு கோயிலுக்குச் சென்று இறைவன் அவிநாசியப்பரைத் தொழுதார். அவரே அச் சிறுவனுக்குப் பூணூலையணிவிக்கும் சடங்கினை நடத்தினார்.

கொடுங்கோளூரில் சேரமான் ஏற்கனவே, முதலை வாயினின்றும் சிறுவனை மீட்ட அற்புதத்தைக் கேள்வி யுற்றவர், முன்னிலும் பன்மடங்கு அன்புடனும் மதிப் புடனும் சுந்தரரை வரவேற்றார். சுந்தரர் அரசருடன் சிலநாள் தங்கியிருந்தார். ஒருநாள் சுந்தரர் தனியே கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டார். இறைவனைக் கண்ட காட்சியே அவரை மெய்மறக்கச் செய்தது. பக்திப் பெருக்கினால் நிலத்தில் புரண்டு கண்ணீர் சொரிந்தார். உடம்பெல்லாம் புளகாங்கித மாகி மயிர் சிலிர்த்து, மனமெல்லாம் ஆனந்தம் நிறைந் தது. நீண்ட நேரத்திற்குப் பின்னரே அவர் நினைவு பெற்றார். உலக வாழ்வில் சலிப்படைந்தார். எனவே தம்மைத் திருக்கைலைக்கு அழைத்துக்கொள்ளுமாறு இறைவனை வேண்டி ஒரு பதிகம் பாடினார்.

இறைவனும் சுந்தரரைத் தம்மிடத்தில் அழைத்துக் கொள்ள விரும்பி அவரை கைலைக்கு ஒரு வெள்ளை யானைமீது அழைத்து வருமாறு தேவகணங்களிடம் கட்டளையிட்டார். சுந்தரருக்கும் இதைத் தெரிவித்தார். சுந்தரர் கோயிலுக்கு வெளியில் வந்தார். சேரமான் பெருமானையும் தம்முடன் கைலாசத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்று மனதில் விரும்பினார். பின்னர் யானைமீதமர்ந்து கைலாசத்திற்குப் புறப்பட்டார்.

இந் நிகழ்ச்சியைப் பற்றிச் சுந்தரர் பாடியுள்ள பதிகத்தில் கைலாசத்திற்குச் செல்லுவது தம் பருஉடம்பால் அல்ல, தம் சூக்கும உடம்பினால் என்று தெரிவித்துள்ளார். பருவுடல் இவ்வுலகிலேயே களையப் பட்டு அவ்வுடல் உருவாவதற்குப் பயன்பட்ட ஆதார மூலங்களுடன், உடம்பின் கூறுகள் கறைந்து கலந்து விட்டன.

சுந்தரர் கைலாசத்திற்குச் சென்றதைச் சேரமான் தம் உள்ளுணர்வினால் தெரிந்துகொண்டார். உடனே ஒரு குதிரையின்மீதேறித் திருஅஞ்சைக்களத்துக்கு வந்தார். தெய்வீக யானைமீதமர்ந்து சுந்தரர் விண்ணில் செல்வதைக் கண்டார். உடனே சேரமான் குதிரையின் செவிகளில் திருஐந்தெழுத்து மந்திரத்தை ஓதினார். குதிரை உயரே பறந்து சுந்தரரை அடைந்தது. சேரமான் சுந்தரரைத் தொழுதார். இருவரும் தம் நுண் உடம்புகளுடன் கைலாசத்தை அடைந்தனர்.

கைலாசமலை வாசலில், உள்ளே செல்லச் சுந்தரர் அனுமதிக்கப்பட்டார்; சேரமானுக்கு அனுமதி கிடைக்கவில்லை. சுந்தரர் இறைவனையடைந்து அவருடைய கருணையைப் புகழ்ந்தார். 'கருணையங்கடலே! தாங்கள் என் குற்றங்களைப் பொறுத்துச் சம்சாரச் சேற்றிலிருந்து என்னை விடுவித்தீர்கள். தங்கள் குழுவில் என்னை மீண்டும் சேர்த்துக்கொண்டீர்கள். அழியாத பேரின்பத்தை எனக்கு வழங்கினீர்கள், தங்கள் பேரன்பையும் பெருங்கருணையையும் எவ்வாறு விளக்கிச் சொல்லுவேன்?' என்றார். பின்னர் இறைவனிடம் சுந்தரர், வாசலுக்கு வெளியே சேரமான் காத்துக்கொண்டிருப்பதைத் தெரிவித்தார். தம் தோழரை மகிழ்விப்பதற்காக இறைவன் சேரமானையும் அழைத்து வருமாறு தம் வாகனமாகிய நந்திகேசுவரரை அனுப்பினார். தம் அனுமதி இல்லாமல் கைலாசத்திற்கு எப்படி வரலாம் என்று இறைவன் சேரமானைக் கேட்டார். சுந்தரர் கைலாசத்திற்குப் புறப்பட்டதைக் கண்டவுடனே தாம் அவரைப் பிரிந்திருக்க முடியாதென்று கருதியே சேரமான் சுந்தரருடன் வர நேர்ந்ததாகத் தெரிவித்தார். தற்போது சுந்தரருடைய நல்லெண்ணங்கள் வாயிலாகத் தமக்கும் இறைவனுடைய திருவருள் வாய்த்து இறைவனிடம் இருக்க அனுமதிக்கப்பட்டதைத் தெரிவித்தார். இச்சொற்களில் சேரமான் மிகப்பெரிய உண்மையை வெளியிட்டார்; பக்தன் தகுதியற்றவனாக இருந்தாலும் குருவினிடம் ஆழ்ந்த பக்திபூண்டிருந்தால், குருவின் பரிந்துரையால்

இறைவனுடைய பேரின்ப நாட்டில் ஓர் இடத்தை அவனும் அடைவான் என்பதாகும்.

சுந்தரர் முன்புபோலவே இறைவனுக்கு அணுக்கத் தொண்டு செய்வதில் முழு உள்ளத்தோடும் உயிரோடும் ஈடுபட்டார். பரவையாரும் சங்கிலியாரும் தத்தம் கர்மங்களிலிருந்து விடுபட்டு அவர்களும் கைலாசத்தை அடைந்தனர். பார்வதி அன்னையாருக்கு அவர்கள் செய்துவந்த முன்னை கடமைகளை மீண்டும் தொடங்கிச் செய்து வரலாயினர்.

## 2. திருநீலகண்ட நாயனர்

சிதம்பரத்தில், ஒரு காலத்தில் சிவபெருமானிடம் ஆழ்ந்த பக்தி கொண்ட தொண்டர் ஒருவர் வாழ்ந்து வந்தார். பிறப்பாலும் தொழிலாலும் அவர் ஒரு குயவர். சிவபெருமானுடைய அடியார்களிடத்தும் அவர் பெருமதிப்பு வைத்திருந்தார். அவர்களுக்குப் பணிவிடை செய்வதில் அவருக்கு எப்போதும் பேராவல் இருந்தது. அவர் மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்குமாறு குடும்ப வாழ்வை நடத்தி வந்தார். யாசிப்பதற்குப் பயன்படும் அழகான மண் ஓடுகளைச் செய்து சிவபெருமானுடைய அடியார்களுக்குப் பெரும் மகிழ்ச்சியுடன் அவற்றை இலவசமாக வழங்கி வந்தார்.

நீலகண்டராகிய சிவபெருமான் அவருக்கு முழு ஆதரவாகவும் அடைக்கலமாகவும் இருந்தார். எனவே அவர் திருநீலகண்ட நாயனர் என்று அழைக்கப்பட்டார். அவர் எப்போதும் மற்றவர்களிடம், எவ்வாறு இறைவன் உலகத்தைப் பாதுகாப்பதற்காகக் கொடிய நஞ்சை உண்டார் என்பதைச் சொல்லுவார். அவர் தம் நண்பர்களிடம், சிவபெருமானுடைய திருவடிகளில் அடைக்கலம் புகுவோர் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டு இறுதியில் சிவபுரத்தை அடைவர் என்று வலியுறுத்திக் கூறுவார்.

நற்குணங்கள் பலவும் இருந்தும் அவர் ஒரு முறை காமத்திற்கு ஆளானார் ஒரு நாள் அவர் ஒரு பரத்தையின் இல்லத்திற்குச் சென்றார். அவர் வீட்டிற்குத் திரும்பியதும் கடமையுணர்வும் பக்தியுணர்வும் வாய்ந்த அவருடைய மனைவி இதைத் தெரிந்து கொண்டார். இதனால் அவர் சினமடைந்தார். எனினும் இதைக் காட்டிக்கொள்ளாமல், முன்போலவே அவருக்குப் பணிவிடை செய்து வந்தார். ஆனால் தம் கணவருடன் இனி உடலுறவு கொள்வதில்லை என்று முடிவு செய்து கொண்டார். நாயனாருக்குக் காரணத்தைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு நாள் அவர் தம் மனைவியைக் காமவுணர்வுடன் நெருங்கிய போது அந்த அம்மையார், 'நீலகண்டத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்லுகின்றேன். எம்மைத் தீண்டவேண்டா' என்று சூளுரைத்தார். அவர் தம்மைத்தான் தீண்டவேண்டாம் என்று குறிப்பிட்டார்.' ஆனால் 'எம்மை' என்று பன்மையில் கூறியமையாலும் அன்று தொட்டு இனி இவ்வுலகில் எந்தப் பெண்ணையும் தீண்டுவதில்லை என்று நாயனார் முடிவு செய்தார் (மனத்தாலும் தீண்டுவதில்லை என்று உறுதிபூண்டார்) இறைவனிடம் அவர் கொண்ட பக்தி அவ்வாறு நேர்மையாக இருந்தது. அவர்கள் எப்போதும் போல ஒன்றாக வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் தத்தம் உறுதிகளைப் பற்றி மற்றவர்கள் அறிய வெளிப்படுத்த விரும்பவில்லை. யாருக்கும் இதைப்பற்றிச் சிறிதும் தெரியாது. ஆண்டுகள் கடந்தன; அவர்களும் முதுமை அடைந்தனர்.

சிவபெருமான் தம் பக்தருடைய பெருமையை உலகறியச் செய்யவும் அவருடைய பெயர் அழியாப் புகழ் பெறச் செய்யவும் விரும்பினார். எனவே அவர் ஒரு சிவயோகி (யாசிக்கும் சைவத்துறவி) யின் கோலம் பூண்டு திருநீலகண்டரின் இல்லத்திற்கு வந்தார் திருநீலகண்டர் அவரைத் தொழுது வரவேற்றார். யோகி தம்பால் இருந்த மண் ஓட்டினை அவரிடம் தந்து 'பண்புடையீர்! தங்கள் பாதுகாப்பில் இதை நான் மீண்டும் வந்து கேட்கும் வரை வைத்திருங்கள்!' என்று தெரிவித்தார். எனக்கு இது விலைமதிக்க ஒண்ணாதது.

தன்னிடம் தொடர்பு கொள்ளும் எதையும் புனிதமாக்கும் அற்புதச் செல்வம் அதற்கு உண்டு. எனவே மிகுந்த கவனத்துடன் அருள் கூர்ந்து பாதுகாத்து வாருங்கள் என்றும் எச்சரிக்கை செய்தார். சிவயோகி விடைபெற்றுச் சென்ருர்; நீலகண்டர் தம் இல்லத்தில் மிகுந்த பாதுகாப்பான இடத்தில் ஓட்டினை வைத்தார்.

நீண்ட காலம் கழிந்தபின் சிவபெருமான் அதே சிவயோகியாக நீலகண்டருடைய இல்லத்திற்கு வந்து தம் ஓட்டினைத் திருப்பித் தருமாறு கேட்டார். இறைவன் தாமே தம் மாயையின் சக்தியால் அதை அவ் வீட்டிலிருந்து மறையச் செய்தார். நீலகண்டர் அதைத் தேடியும் காணமுடியவில்லை. அது அவருக்குப் புரியாத மர்மமாக இருந்தது. அவர் தம் நிலைகுறித்து நாணினர். அச்சத்தால் நடுங்கியவராய் யோகியின் காலடியில் விழுந்து தாம் அதைக் காண முடியவில்லை என்று தெரிவித்தார். இதனல் யோகி மிகவும் வெகுண்டு நீலகண்டரை வஞ்சகர் என்றும் திருடர் என்றும் குற்றம் சாட்டினர். நீலகண்டர் அதற்குப் பதிலான விலை உயர்ந்த தங்க ஓடு தர முன் வந்தார். ஆனல் யோகி அதற்கு இசையவில்லை.

நீலகண்டர் மீண்டும் மீண்டும் முறையிட்டுத் தாம் ஓட்டினைத் திருடிக்கொள்ளவில்லை என்றும் தம் வீட்டிலிருந்து அது காணமற் போனது புரியாத தேவ மாயையாக உள்ளது என்றும் தெரிவித்தார். அது உண்மையானல் நீலகண்டர் தம் மனைவியின் கைப்பிடித்தவராய் அவ்வுண்மையைச் சொல்லிச் சத்தியம் செய்ய வேண்டுமென்று யோகி வற்புறுத்தினர். யாரையும் தொடுவதில்லை என்று இறைவன் திருப்பெயரால் முடிவு செய்திருந்த நாயனர் இதை மறுத்தபோது, அவர் திருட்டுக் குற்றம் உள்ளவர் என்ற உண்மையினல் தான் இவ்வாறு செய்ய அவர் விரும்பவில்லை என்று யோகி இகழ்ந்தார். அவர்கள் வழக்கு மன்றத்துக்குச் சென்றனர். அந்தணர் இந்த வழக்கைக் கேட்டனர். யோகி விரும்பியவாறு வாக்குறுதி தருமாறு அவர்கள் நீலகண்டரிடம் தெரிவித்தனர். நீலகண்டர் தம் மனைவியுடன் குளத்தில் இறங்கினர்; அவர்கள் தங்கள்

கைகளில் ஒரு கழியை ஏந்தி அதன் விளிம்புகளைத் தனித் தனியே பற்றியிருந்தனர். யோகி இதற்கு மறுப்புத் தெரிவித்து நீலகண்டர் தம் கையால் தம் மனைவியின் கையைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்று தாம் விரும்புவதாகத் தெரிவித்தார். நீலகண்டர் தமக்கும் தம் மனைவிக்குமிடையே நிலவி வந்த இரகசியத்தை இனிமேலும் மறைக்கமுடியாதவராய் வழக்கு மன்றத்தினருக்கு முழு வரலாற்றையும் விளக்கிச் சொன்னார். நீலகண்டரும் அவருடைய மனைவியும் கழியின் எதிர் எதிர் முனைகளைப் பற்றியவர்களாகக் குளத்தில் மூழ்கி எழுந்தனர். ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அவர்கள் நீர்ப்பரப்பிலிருந்து மேலே தலை தூக்கியதும் அவர்கள் இளமையும் அழகும் வாய்ந்தவர்களாகப் பொலிவுற்று விளங்கினர். அவர்கள் நடுவிலிருந்த சிவயோகி மறைந்து விட்டார். சிவபெருமானும் பார்வதி அன்னையாரும் விண்ணில் தோன்றி அவர்கள் அனைவரையும் ஆசீர்வதித்தனர். 'புலனடக்கமும் பக்தியும் நிறைந்த வாழ்வை வாழ்ந்த தகுதியின் காரணமாக எந்நாளும் இளமையுடன் எமது பேரின்ப உலகில் வாழ்வீர்களாக!' என்று இறைவன் தெரிவித்தார். இறைவனிடம் மிகவும் உயர்ந்த பக்தி கொண்டிருந்த பெருமையால்தான் தம் மனைவி இறைவன் பெயரால் ஆணையிட்ட பின்னர் நீலகண்டர் காம எண்ணங்கள், செயல்கள், ஆகியவற்றிலிருந்து விடுபட்டிருக்க முடிந்தது என்ற பெருமையை இறைவன் இவ்வாறு வெளிப்படுத்தினர். ஆடம்பரமற்ற துறவிக்குரிய பண்புடன் பிரம்மச்சரிய வாழ்வை வாழ்ந்தால் என்றும் குன்ற இளமையைப் பெறலாம் என்றும் இதனல் அறிகின்றோம்.

## 3. இயற்பகை நாயனர்

'இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள'

என்று குறள் கூறுகின்றது.

இத்தகைய பண்பாளர்களில் முதல் வரிசையில் வைத்து எண்ணத்தக்கவர் இயற்பகை நாயனர். ஈகை

அவரிடம் ஊறியிருந்தது. சிவனடியார்களைத் தமது இல்லத்திற்கு அழைப்பதும், பணிவோடும், பக்தியோடும் அவர்களை வழிபடுவதும், அவர்கள் விரும்பியவற்றையெல்லாம் வழங்குவதும் அவருக்கு வழக்கமாக இருந்து வந்தது. சிவனடியார் எவரும் விரும்பியதை இல்லை என்று மறுக்காமல் இருப்பதை ஒரு விரதமாக அவர் பின்பற்றி வந்தார்.

இயற்பகையார் காவிரிப்பூம்பட்டிணத்தில் தோன்றியவர். வைசிய குலத்தில் பிறந்தவர். சிவனடியார்கள், அவருக்கு மானிடச் சட்டை தாங்கி வந்த சிவபெருமானுவார்கள்.

இந்த பக்தரைப் பற்றிச் சிவபெருமான் பெருமகிழ்ச்சியுற்ருர். அவருடைய உண்மையான பெருமையை உலகுக்கு வெளிப்படுத்த அவர் விரும்பினுர். எனவே இறைவன் அந்தணர் கோலத்தில் மேனி எங்கும் திருநீறு பூசியவராக, நாயனுருடைய இல்லத்திற்கு வந்தார். அந்தப் புண்ணிய சீலருடைய தோற்றத்தைக் கண்ட அளவிலேயே உணர்ச்சிவசப்பட்ட நாயனுர் பெரு மகிழ்ச்சியுடன் அவரை வரவேற்ருர். அந்தணர், 'அருளாளரே! உம்முடைய ஈகைப் பண்பினுல் சேய்மை இடங்களிலும் பரவியுள்ள புகழைப் பெற்றிருக்கிறீர்! உம் இல்லத்திலிருந்து வெறுங்கையுடன் திரும்பியவர் யாரும் இல்லை என்பதை அறிந்து உம்மிடம் ஒரு பரிசு பெற்றுச் செல்ல வந்துள்ளேன். நான் விரும்பியதைத் தருவதாக வாக்குறுதி தந்தால் அதை உம்மிடம் தெரிவிப்பேன்' என்று கூறினுர். 'அப்பொருள் என்னிடம் இருந்தால்' என்று சொல்லி, உடனே நாயனுர் இசைந்தார். அந்தணர் தாம் விரும்பியதை உடனே தெரிவித்தார். 'உம்முடைய மனைவியே நான் பெற விரும்பும் பரிசு'. இப்பரிசை வழங்குவதில் நாயனுருக்கு எந்தவிதமான தடையும் இருக்கவில்லை! சிவனடியாராகக் காணப்பட்டாலும் இத்தகைய தகாத விருப்பத்தைக் கொண்டிருந்த அந்தணருடைய நன்னடத்தைச் சான்றுகளை ஐயுறும் அளவுக்கு நாயனுர் இறங்கவில்லை; ஏனெனில்

இறைவனுடைய மிக உயர்ந்த தொண்டராக அவர் இருந்தார்; இவ்வாறு சிறிதும் ஐயுற்று வினவாத பண்பைக் கொண்டதே பக்தியாகும். அறத்திற்கு மாறுபட்டதென்ற காரணத்தைக் காட்டிச் சிவனடியாருடைய விருப்பத்தை நிறைவேற்ற நாயனர் தயங்கவும் இல்லை; ஏனெனில் (இறைவனே விருந்தினர்) விருந்தினரை வழிபடுவதே நல்லொழுக்க விதிகள் எல்லாவற்றைக் காட்டிலும் பெரிய விதியாகக் கொண்டவர் அவர்.

நாயனர் இல்லத்தினுள் சென்று தம் மனைவியாரிடத்தில் நிகழ்ந்ததெல்லாவற்றையும் தெரிவித்தார். முதலில் அவர் அதிர்ச்சியடைந்தார், ஆனல் விரைவில் தம் நிதானத்தை அடைந்தார். கற்புள்ள மனைவிக்குக் கணவனே கடவுள்; அவனிடும் ஆணை எதுவாயினும் அதுவே அவளுக்கு அறமும் விதியும் ஆகும். அந்தண விருந்தினரை அவருடைய மனைவியாகப் பின்தொடர்ந்து செல்ல அந்த அம்மையார் உடனே இசைந்தார். நாயனர் தம் மனைவியாருடன் வெளியே வந்து பரிசை ஏற்றுக்கொள்ளும்படி அந்தணரை வேண்டினர். அந்த அம்மையாருடைய சுற்றத்தார் சினங்கொள்வர் என்று அந்தணர் அச்சமுற்று விபத்தில்லாமல் ஆபத்தையும் ஊரையும் கடந்து செல்லும் வரை உடன் வருமாறு நாயனரை வேண்டினர். நாயனர் அவ்வாறே செய்ய இசைந்து அந்தணரைப் பாதுகாப்பதற்காகப் போர்க்கோலம் பூண்டார். பின்னர் அவர்கள் புறப்பட்டார்கள்.

இதற்கிடையில் நாயனருடைய மனைவியாரின் சுற்றத்தார் இவ்வரலாறு முழுவதையும் அறிந்து பெருஞ் சினம் கொண்டார்கள். அவர்கள் நாயனரையும் அவருடைய குழுவினரையும் பின் தொடர்ந்து சென்று அந்தணரை, அவர் தமது தகாத ஆசையை தவிர்க்கவில்லை என்ருல் கொன்றுவிடுவதாக அச்சுறுத்தினர். அஞ்சி நடுங்குவதுபோல் அந்தணர் பாசாங்கு செய்தார். அவர்கள் அனைவரையும் நாயனர் வெற்றிகொள்வாரென்று அந்த அம்மையார் உறுதி கூறினர். நாயனர்

அவர்களுடன் போரிடத் தயாரானார். இந்த நிகழ்ச்சி முழுவதும் அறத்திற்கு மாறுபட்டதென்று நாயனார் தெளிவுபெறச் சுற்றத்தார் முயன்றனர்; அது முடியாது போகவே, அவமானத்தை அடைவதைக்காட்டிலும் அவருடைய கையால் சாவதே மேல் என்று அவர்கள் துணிந்தார்கள். நாயனார் உடனே அவர்கள்மீது பாய்ந்து தாக்கி அவர்களுடைய தலைகளை வெட்டித் தள்ளினார். அனைவரும் மடிந்தனர்; சிவபெருமானுடைய அருளால், அவருடைய அடியாரை வழிபடுவதில் வெற்றிவாய்த்ததென்ற எண்ணத்தில் மகிழ்ந்து திளைத்தவராய் அந்தணரோடும் மனைவியாரோடும் மேற் செல்லலானார். திருச்சாய்க்காட்டுக் கோயிலை அடைந்தவுடன் அந்தணர் நாயனாரிடம் தங்களை விட்டுவிட்டுத் திரும்பிச் செல்லுமாறு பணித்தார். நாயனார் அந்தணருடைய திருவடிகளில் பணிந்தெழுந்து தம் இல்லம் நோக்கி நடக்கலானார்.

அவர் தம் இல்லம் நோக்கிச் சில அடிகள் செல்லு முன்பே அந்தணர் நாயனாரை உரத்த குரலில் அழைத்து ஓலமிட்டார். மீண்டும் யாரோ அவரைத் தாக்குவதாகக் கருதி நாயனார் அந்தணர் நின்ற இடத்தை நோக்கி விரைந்தார். ஆனால் அந்தணர் மறைந்து விட்டதையும் தம் மனைவியார் தனித்து நிற்பதையும் கண்டு அவர் பெருவியப்புற்றார். அந்தணரை அங்குமிங்கும் தேடினார்; அவர் காணப்படவில்லை என்பதனால் பெரிதும் கவலைப்பட்டார். ஆகா! என்ன ஆச்சரியம்! சிவபெருமானும் உமையம்மையும் விண்ணில் காட்சி தந்து நாயனாரையும் அவர் மனைவியாரையும் வாழ்த்தி, 'அருளாளர்களே! நீங்கள் என் பக்தர்களிடம் காட்டிய பக்தியினால் பெருமகிழ்வுற்றோம்! நீவிர் இருவரும் விரைவில் எம் சிவபுரத்தை அடைவீர்கள்' என்று வரம் வழங்கினார்.

இவ்வாறு சொல்லி இறைவன் மறைந்தார். நாயனாரும் அவர்தம் மனைவியாரும் சிவபுரம் அடைந்து களிப்புற்றனர். நாயனாருடைய கையால் மடிந்த அவருடைய சுற்றத்தார்கள் இறைவனுடைய தாமரைத் திருவடிகளை அடைந்தனர்.

சிறிதும் ஐயுறுமை என்ற பக்தியின் மிக உயர்ந்த பண்பை இறைவன் இவ்வாறு நிரூபித்துக் காட்டினுர். ஐயுருத பக்தி அறத்தின் விதிகளை மீறுவதன் விளைவு அன்று என்ற உண்மையையும் இறைவன் வெளிப் படுத்தினுர்.

இறைவன் புகழும் அடியார்களின் புகழும் எங்கும் நிறைக!

## 4. இளையான்குடி மாற நாயஞர்

இளையான்குடி மாற நாயஞர் ஒரு வேளாளர். அவருடைய பெயர் மாறஞர். இளையான்குடி என்ற சிற்றூரில் அவர் வாழ்ந்தார். சிவபெருமானிடத்தும் சிவனடியாரிடத்தும் மிகுந்த பக்தி பூண்ட தொண்டர் அவர். அவர்கட்குப் பணிவிடை செய்வதில் பேரின்பங் கண்டார். இந்தச் சாதனம் மகேசுவர பூசை (மகேசுவரர் அல்லது சிவபெருமானுடைய தொண்டர்களை வழி படுவது) என்று சொல்லப்படும். அதன் விளக்கம் பின்வருமாறு:

சிவபெருமானுடைய தொண்டர் ஒருவரை, அவருடைய புற அடையாளங்களாகிய திருநீறு, உருத்திராக்ஷம் முதலியவற்றுல் அறிந்து, அவரைக் கண்ட உடனே அவரைச் சிவபெருமாஞகவே பாவித்து, நல்வரவேற்று, அவருடைய திருவடிகளில் பணிந் தெழுந்து, அவருடைய திருக்கரங்களையும் திருவடிகளையும் நீராட்டி, அத்தண்ணீரை (சரணும்ருதம்)ப் பருகி, அவரைத் தக்க ஆசனத்தில் எழுந்தருளச் செய்து பூக்கள், தூப, தீப நைவேத்தியங்களால் அவரைத் தொழுது, இன்சொற்களால் மகிழ்வித்து, விருந்தோம்ப வாய்ப்பளித்தமைக்காக நன்றி நவின்று, விடைபெற்றுச் செல்லும்போது அவருடன் சிறிது தூரம் சென்று வழியனுப்புதல் - இவைகள் அடங்கியதே மகேசுவர பூசையாகும். இது சரியையிலும் (சைவ சமயத்தின் முக்கிய ஒழுக்கங்களில் ஒன்று) சேர்ந்தாகும்.

இறைவனுடைய அடியார்களுக்கு விருந்து படைப்பதனுல் அவருடைய உள்ளம் தூய்மை பெற்று இறைவனுடைய கருணைவந்து தங்குவதற்கு ஏற்ற பாத்திரமானுர். திருவள்ளுவர் குறள் நூலில் கூறியவாறு:

''அகனமர்ந்து செய்யா ளுறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்'''

நாயனுர் உலகியல் செல்வங்கள் எல்லாவற்றையும் இறைவன் திருவருளால் அடைந்தார். ஆனுல், அவரோ செல்வம் இறைவனுக்கே உரியது என்றும் அவருடைய தொண்டர்கள் நலத்துக்காகவே பயன்படுத்தவேண்டும் என்றும் கருதினுர்.

நாயனுருடைய பக்தியினுல் சிவபெருமான் பெரிதும் மகிழ்ந்தார். இறைவன் தம் தொண்டர் பெருந்துன்பம் உற்றகாலத்தும் கலங்காது நிற்பார் என்றும் தம் அறத்தில் வழுவாது நிற்பார் என்றும் உலகத்திற்கு உணர்த்த விரும்பினுர். செல்வம் அவரைவிட்டு நீங்கிற்று. ஆனுல் அறம் அவரைவிட்டு நீங்கவில்லை. மாருக அவர் இறைவனிடமும் தொண்டர்களிடமும் கொண்டிருந்த பக்தி மேன்மேல் தீவிரமாக வளர்ந்தது. நாயனுர் தம் சொத்துக்கள் எல்லாவற்றையும் விற்றுவிட்டார்; இறை அடியார்களுக்குப் பணிவிடை செய்வதற்காக அடிமை வேலையும் செய்துவந்தார்.

ஒருநாள் பெருமழை பிடித்துக்கொண்டது. நாயனுரும் அவருடைய மனைவியாரும் பட்டினி கிடந்தனர். அவர்களுக்கு உதவிசெய்ய யாரும் முன்வரவில்லை. முடிவில் அவர் கதவைத் தாழிட்டுவிட்டு உறங்கச் சென்ருர். அதே நேரம் கதவு தட்டப்படுவதைக் கேட்டார். திறந்தபோது சிவபக்தர் ஒருவர் மழையில் நனைந்தவாறு தம் வீட்டு முற்றத்தில் நிற்பதைக் கண்டார். நாயனுர் உடனே அவ்விருந்தினரை உள்ளே அழைத்துக்கொண்டார். உடம்பு முழுவதும் துவட்டிவிட்டார். அணிந்துகொள்ளுமாறு புதிய ஆடைகளைத் தந்தார். ''அடிகளே, சிறிது ஒய்வு கொள்ளுங்கள்; நான்

விரைவில் உணவு சமைத்துக் கொண்டுவந்து தங்கள் பசியைப் போக்குகின்றேன்'' என்று கூறினர். பின் தம் மனைவியாரிடத்தில் தம் மனக் குழப்பத்தை எடுத்துரைத்தார். ஏனெனில் இறையடியாருக்குப் படைக்க எதுவும் இருக்கவில்லை. ஆனால் பக்திமிகுந்த அவருடைய மனைவியார் நாயனரிடத்தில் நல்ல யோசனை தெரிவித்தார்; வீட்டின் பின்புறம் உள்ள நிலத்தில் அன்றுதான் விதைத்த விதை நெல்லைக் கொண்டுவந்தால் உணவு சமைக்கலாம் என்று கூறினர். நாயனர் இந்த நல்ல யோசனையை ஏற்றுக்கொண்டார். பெருமழை காரணமாக விதைத்த நெல் யாவும் தண்ணீரில் மிதந்துகொண்டிருந்தன; எனவே கூடையில் அள்ளி எடுப்பது எளிதாக இருந்தது. அவர் அவற்றைக் கொண்டுவந்த உடனே அவருடைய மனைவியார் அவற்றை வறுத்துப் புடைத்து உமியைப்பிரித்துச் சோறு சமைத்தார்; வீட்டின் பின்புறம் முளைத்த கீரையைக் கறியாகச் சமைத்தார்; இவ்வாறு விருந்ினருக்கு நல்ல உணவு தயாராயிற்று.

நாயனர் அளவுகடந்த மகிழ்ச்சியடைந்தார். விருந்தினரை எழுப்பச் சென்றவர் அவர் மறைந்துவிட்டதைக் கண்டறிந்தார். அதே நேரம் விண்ணில், விருந்தினர் வடிவில் வந்த சிவபெருமானையும் பார்வதி அன்னையாரையும் கண்டார்; அவர்கள் அவருக்கும் அவருடைய மனைவியாருக்கும் நல்லாசிகள் வழங்கினர்; இறைவன் கூறினர்; ''புண்ணியசீலரே! உம்முடைய பக்தியால் பெருமகிழ்ச்சியடைந்தேன்'', விரைவில் எம் சிவபுரம் அடைந்து என்றென்றும் நீடு வாழ்வீராக!.

## 5. மெய்ப்பொருள் நாயனர்

மெய்ப்பொருள் நாயனர் பக்தி மிகுந்த ஓர் அரசர். சேதிமலைவாழ் மக்களை ஆண்டு வந்தார். அவர் வீரமும் துணிவும் மிகுந்தவர். அவர் பல போர்களைச் சந்தித்தார்; யாவற்றிலும் வெற்றி கண்டார். அவருடைய நாட்டில் வளங்கள் நிறைந்திருந்தன; அமைதியும் நிறைந்திருந்தது. மக்கள் அவரைக் கண்கண்ட கடவுளாகப் போற்றி வணங்கினர்.

ஆகமங்களை அவர் கசடறக் கற்றிருந்தார். அவர் இறைவனிடம் ஆழ்ந்த அன்பு கொண்ட பக்தர். விரிசடையுடையவராய், உருத்திராட்சம் அணிந்தவராய், புனித நீறு பூசியவராய் விளங்கும் சிவபெருமானும், சிவனடியார்களும் அவருக்கு ஒரே உண்மையாக, நிலைத்த மெய்ப்பொருளாகக் காட்சி தந்தனர். எஞ்சிய உலகனைத்தும் பயனற்ற புல்லாகக் கருதினர். காணும் பொருளை எல்லாம் சிவமயமாகக் கண்டார். சிவனடியார்கள் அவருடைய நாட்டில் முழுச் சுதந்திரத்தையும் அனுபவித்தனர். அவர்கள் அரசரைப் போலவே மக்களாலும் நன்கு மதிக்கப்பட்டார்கள். அரசர் போல் அவர் நாட்டையாண்டாலும் அவருடைய மனம் எப்போதும் இறைவனுடைய திருவடிகளிலேயே லயித்திருந்தது. அவருடைய ஆட்சியில் நாள்தோறும் கோயில்களில் சிறப்பு வழிபாடுகளும் பண்டிகை விழாக்களும் நடைபெற்றன.

நாயனருடைய புகழ் விரைவில் பாரெங்கும் பரவியது. அருகில் உள்ள நாட்டை ஆண்ட முத்த நாதன் இதனால் பொறாமை கொண்டான். அவன் பெரும்படை திரட்டிக்கொண்டு வந்து பல முறை நாயனரைத் தாக்கினன்; ஒவ்வொரு தடவையும் தோல்வியுற்றன். எனவே முத்தநாதன், வஞ்சித்துக் கொல்ல முடிவு செய்தான். (நாயனர் சிவனடியார்களிடத்தில் அளவுகடந்த பக்தி கொண்டிருப்பதை அறிந்தவனதலால்) அவன் ஒரு நாள், ஒரு சிவயோகியைப்போல் கோலம் புனைந்து இரவில் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். வாயிற்காவலர் அவனைத் தடுக்காமல், யாரென்று வினவாமல், மேலே செல்ல வழி விட்டனர். நாயனரிடம் பணிசெய்து வந்த, அறிவு மிகுந்த, நம்பகமான தத்தன் அரசர் பள்ளிகொண்டிருந்த அறையினைக் காவல் காத்திருந்தான். சிவயோகி பள்ளியறையை அணுகியதும், அரசருடைய உறக்கத்திற்கு இடையூறு செய்யாதவாறு அவரை விலக்க முயன்றன்; ஆனல் சிவயோகி மறுத்து, 'இரகசியமான ஒரு சாத்திரத்தை அரசருக்கு நான் ஓத வேண்டும்; எனவே நான் காலந்தாழ்த்த முடியாது'

என்று கூறினர். தத்தனுக்கு அவர் மீது ஐயம் ஏற்பட்டாலும், வேறுவழியின்றி அவரைப் பள்ளியறையினுட் செல்ல அனுமதிக்க வேண்டியதாயிற்று. நாயனருடைய துணைவியார் எழுந்தார்; அறையில் சிவயோகி இருப்பதைக் கண்டார்; உடனே கணவரை எழுப்பினர். சிவயோகி அரசரிடம் சாத்திரம் மிகவும் இரகசியமானதென்றும் இறைவனல் சொல்லப்பட்டதென்றும் அரசர் மட்டுமே கேட்குந் தகுதியுடையார் என்றும் தெரிவித்தார். உடனே அரசர் அரசியாரை அனுப்பிவிட்டுச் சிவயோகியின் முன்னே பணிந்து இரகசியச் சாத்திரத்தைக் கேட்கச் சித்தமானர். மறுகணம் சிவயோகி — வேறுயாரும் அல்ல; பொருமை கொண்ட முத்தநாதனே — தான் ஒளித்து வைத்திருந்த குறுவாளால் நாயனரின் முதுகில் குத்தினன். அறிவுக் கூர்மையுள்ள தத்தன் அக்கணமே அறையில் நுழைந்தான்; அரசர் இரத்த வெள்ளத்தில் கிடப்பதையும் முத்தநாதன் கையில் குறுவாள் இருப்பதையும் கண்டான். முத்தநாதனை வீழ்த்த அவன் தயாரானன்; அப்போது உயிர் நீங்கும் தறுவாயிலிருந்த நாயனர், 'தத்தா! அவர் நம்மவர், அவர் சிவயோகியாகத் தோன்றுகிருர்; அவரை நாம் நன்கு மதிக்கவேண்டும். அவருக்குத் தீங்கு செய்யாதே. நம் நாட்டெல்லைவரைக்கும் அன்பு கூர்ந்து அழைத்துச் சென்று வழி அனுப்பி வா. யாரும் அவரைத் தாக்காதவாறு பார்த்துக்கொள்' என்று ஆணையிட்டார். அரசர் கட்டளைகளைத் தத்தன் நிறைவேற்றினன். அவன் முத்தநாதனை அழைத்துச் செல்கையில், நிகழ்ந்தவற்றைக்கேள்வியுற்ற மக்கள் முத்தநாதனைத் தாக்க முன் வந்தனர்; ஆனல் தத்தன் அவர்களிடம் அரசர் கட்டளைகளைத் தெரிவித்தவுடன், அவர்கள் பின் வாங்கினர்; தம் அரசருடைய உயர்ந்த பக்தியைப் புகழ்ந்தனர். இவ்வாறு முத்தநாதன் நாட்டெல்லைவரைக்கும் பாதுகாப்பாக அழைத்துச் செல்லப்பட்டான். அரண்மனையில் ஆவி நீங்கும் எல்லையிலிருந்த அரசரிடம் செய்தி தெரிவிக்கத் தத்தன் விரைந்து திரும்பினன். அரசர் அவனுக்காக ஆவலுடன் காத்திருந்தார்.

தத்தன் அரசரிடம் செய்தியைத் தெரிவித்தவுடனே நாயனார் அமைச்சர்களையும் உறவினர்களையும் தம் அருகே அழைத்து, சிவனடியார்களுக்குச் சேவை செய்வது நம் கடமையாகும், எல்லா நேரங்களிலும் எல்லாச் சூழ்நிலைகளிலும் அவர்களை நாம் நன்கு மதித்து வணங்க வேண்டும். சிவனடியார்களின் அடிச்சுவட்டில் நம் மக்கள் நடப்பார்களாக. நம் நாட்டில் சிவனடியார் களின் திருக்கூட்டம் வெள்ளம்போல் பெருகட்டும். அவர்களுடைய நல்லாசிகளால் நம் நாட்டில் செல்வமும் அமைதியும் கோல் ஓச்சட்டும்'' என்று தெரிவித்தார். இவ்வுரைகளுடன் அவர் தம் கண்களை மூடிச் சிவ பெருமானைத் தியானம் செய்தார்.

சிவபெருமான் உடனே காட்சிதந்து வாழ்த்தி, "என் அடியார்களிடம் நீ கொண்டுள்ள பக்தியினால் பெரிதும் மகிழ்ந்தோம். என் அடியார்களிடம் நீ கொண்டுள்ள பரந்த பேரன்பையும் மறுத்தல் இல்லாத பக்தியையும் கண்டு பெரிதும் மகிழ்ந்தோம். கொலை ஞனிடத்தும் நீ என்னையே கண்டாய். தேவர்களும் அணுக முடியாத மிக உயர்ந்த சிவபுரமாகிய பேரின்ப வீட்டை அடைய நீ தகுதி உள்ளவன். நீ விரைவில் என்னிடம் வருவாய்'' என்று கூறினார். இவ்வாறு சொல்லி இறைவன் மறைந்தார். (இறைவன் ஒருவரே மெய்ப் பொருள் என்ற உண்மையை விளக்கும் பெயரைக்கொண்ட) மெய்ப்பொருள் நாயனார் இறை வனுடைய பேரின்ப உலகை அடைந்தார்.

## 6. விறல்மிண்ட நாயனார்

விறல்மிண்ட நாயனார் மலைப்பாங்கான செங்குன்று என்னும் ஊரில் வேளாளர் குலத்தில் பிறந்தார்.

அவர் சிவபெருமானுடைய திடபக்தர். இறைவன் திருவருளால் அவர் அகங்கார மமகாரங்களிலிருந்து விடுபட்டிருந்தார். அவர்பால் சமநோக்கு நிலவியது.

அவர் இறைவனுடைய தொண்டர்களுக்குப் பணிவிடை செய்து மனத்தூய்மை பெற்ருர். சிவனடியார்களை வழிபடுவது சிவபெருமானையே வணங்குவதைக் காட்டிலும் உயர்ந்ததல்லயெனினும் சமம் என்பது அவர் கருத்து. முதலில் சிவனடியார்களை வழிபடாமல் யாரும் சிவபெருமானுடைய அருளைப் பெறமுடியாது என்றும், ஒருவன் சிவலிங்கத்தை முழுநம்பிக்கையுடனும், பக்தியுடனும் வழிபட்டாலும், சிவனடியார்களை இகழ்ந்தால் அவன் முக்திபெற முடியாது என்றும் அவர் உணர்ந்தார். நாள்தோறும் அவர் கோயிலுக்குச் சென்று வந்தார்.

அவர் செங்குன்றை விட்டுத் தலயாத்திரை சென்ருர்; திருவாரூருக்கு வந்தார். ஒருநாள் அவர் இறைவனை வழிபாடு செய்துகொண்டிருக்கும்போது சுந்தரமூர்த்தி நாயனுர் கோயிலுக்கு வந்தார். சுந்தரர் கோயிலினுள் இருந்த தொண்டர் கூட்டத்தைக் கவனியாமல் கடந்து சென்று நேரே இறைவனை வழிபடுவதற்காகப் புனிதக் கருவறையை அடைந்தார். இதைப் பார்த்துக்கொண்டிருந்த விறல்மிண்டர் கொதிப்படைந்தார். தொண்டர்களை அலட்சியம் செய்வதை அவரால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அவர் சுந்தரரிடம் கூறிஞர்: "நீவிர் தொண்டர்களைப் புறக்கணித்தீர். சிவனடியார்களின் புனிதப் பேரவையில் தங்கியிருக்கும் தகுதியை இதனுல் இழந்துவிட்டீர். எனவே, தொண்டர் கூட்டத்திலிருந்து நீவிர் தள்ளி வைக்கப் படுகிறீர்". அவர் மேலும் கூறிஞர்: "நும்முடைய முறையற்ற வழிபாட்டைச் சிறிதும் கருத்தின்றி ஏற்றுக்கொண்டமையால் சிவபெருமானையும் புனித தெய்வீகக் கூட்டத்திலிருந்து தள்ளி வைக்கிறேம்!" இறைவனையே கண்டிக்கும் அளவுக்கு அவர் தம் திடநம்பிக்கையில் உறுதியாக இருந்தார். தொண்டர்களிடம் சரியான அணுகுமுறையை மேற்கொள்ளவேண்டும் என்று பக்தர்களுக்கு அறிவிப்பதற்காக, உண்மையில் சிவபெருமானே அவர் வாயிலாகப் பேசினர்.

சுந்தரர் உடனே விறல்மிண்டர், தொண்டர்களிடமும் அதுபோலவே சிவபெருமானிடமும் கொண்டிருந்த மனோபாவனையை உணர்ந்தார்; அவருடைய திருவடிகளில் பணிந்தார். அவரைப் புகழ்ந்து ஒரு பதிகம் பாடினார். அப்பதிகம் விறல்மிண்டருடைய உள்ளத்தை மிகவும் உருகச் செய்தது; அவர் சுந்தரரைப் புகழ்ந்து கூறினார்: ''சிவனடியார்களுக்குச் செய்யும் பணிவிடையில் உங்கள் உள்ளம் ஆழ்ந்து நிலைபெற்றுள்ளது. அவர்களிடம் நீங்கள் நேர்மையான பக்தி பூண்டிருக்கிறீர்கள்.'' விறல்மிண்டர் சிவனடியார்களிடம் பக்தி செலுத்துவதில் கொண்டுள்ள பெரும் உறுதியைக் கண்டு சிவபெருமான் அளவு கடந்த மகிழ்ச்சியடைந்தார். தொண்டர்களின் மாண்புமிக்க பெருமையை இவ்வாறு இறைவன் வெளிப்படுத்தினார். விறல்மிண்டர் சிவபெருமானுடைய நல்லாசிகட்குரிய சிவகணங்களின் இடத்தை அடைகின்ற உயர்வைப்பெற்று, அக்கணங்களின் தலைவரும் ஆனார். இத்தகைய பக்தர்களின் புகழ் நீடூழி வாழ்க!

## 7. அமர்நீதி நாயனார்

அமர்நீதி நாயனார் வைசிய குலத்தில் பிறந்தார். சோழ நாட்டில் இருந்த பழையாறை, அவருடைய சொந்தவூர். எல்லாப் பக்கங்களிலும் பச்சைப் பசேல் என்றிருக்கும் வயல்களாலும் தோட்டங்களாலும் சூழப்பட்ட வளம் மிகுந்த இடம் பழையாறை. அக்காலத்தில் இது மிகவும் புகழ்பெற்று விளங்கியது.

அமர்நீதி நாயனார் வாணிகம் செய்துவந்த பொருள்கள் பொன்னும் வைரமணிகளும், பட்டுத் துணிகளும் பருத்தித் துணிகளும் ஆகும். அவர் வழக்கமாக இப்பொருள்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து நியாயமான விலைக்கு விற்றுவந்தார். அவர் உலகியல் நிகழ்ச்சிகளில் ஈடுபட்டிருந்தாலும் அவருடைய மனம் சிவபெருமானிடத்திலேயே நிலைத்திருந்தது. அவர் ஆர்வம் மிகுந்த சிவபக்தர். அவர் சிவனடியார்களைத்

தம் இல்லத்திற்கு வரவழைத்து அவர்களுக்கு வழிபாடு செய்வார். அவர் அவர்களுக்கு அறுசுவை விருந்து படைத்துப் பின்னர் கௌபீனம், உடை இன்னும் பிற பரிசுகளை வழங்கி மகிழ்வுடன் அவர்கள் செல்லுமாறு வழியனுப்புவார்.

அவர் வழக்கமாகப் பண்டிகை நாட்களில் புனிதம் மிகுந்த திருநல்லூர் கோயிலுக்குச் சென்று ஆழ்ந்த பக்தியுடன் வழிபட்டு நாள்தோறும் பாவனையுடன் பஞ்சாட்சர மந்திரத்தை ஓதிவந்தார். பண்டிகை நாட்களில் இவ்வாறு சென்று வருவதனல் மனநிறைவு பெருமல் அங்கேயே எப்போதும் நிலையாகத் தங்கி விடவும் எப்போதும் இறைவன் திருக்கோலத்தைக் கண்டு மகிழவும், சிவனடியார்களுக்கு அமுது படைக்கவும் விரும்பினர். எனவே அவர் பழையாறையை விட்டுத் தம் குடும்பத்தோடும் சுற்றத்தோடும் திருநல்லூரில் குடியேறினர். அங்கு கோயிலுக்கு வரும் சிவனடியார்கள் தங்குவதன் பொருட்டு அழகான மடம் ஒன்றைக் கட்டினர். வழக்கமாக அவர் நாள்தோறும் சிவனடியார்களை வரவழைத்துக் கோவணம் முதலியவற்றை வழங்கிவந்தார்.

அமர்நீதி நாயனர் அளவுகடந்த அன்புடன் சிவனடியார்களை வரவேற்றுக் கோவணக் கொடை வழங்கி வருவதுபற்றிச் சிவபெருமான் மிகப் பெரும் மகிழ்ச்சியடைந்தார். தம் பக்தருடைய பெருமையை உலகத்தாருக்கு உணர்த்தவும் அவர்பால் நல்லாசிகள் பொழியவும் இறைவன் விரும்பினர்.

எனவே ஒருநாள் சிவபெருமான் இளம் பிரம்மச் சாரியின் கோலத்தில், தலையில் அழகிய விரிசடையுடன், நெற்றியில் புனித நீறு பூசியவராய், தோளில் தண்டுடன், அமர்நீதி நாயனருடைய மடத்துக்கு வந்து சேர்ந்தார். தண்டின் ஒரு முனையில் இரண்டு கோவணங்களும், சிறிய திருநீற்றுப் பையும் கட்டப்பட்டிருந்தன. அவருடைய கண்கள் பொலிவுடன் ஒளிபெற்று விளங்கின. காண்போர் உள்ளங்களைக் கவர்ந்தவராய்

மடத்துக்குள் நுழைந்தார். அமர்நீதியார் அளவுகடந்த மகிழ்வுடன் அவரை வரவேற்று வழிபட்டார். பிரம்மச்சாரி கூறினார், "நண்பரே! நீங்கள் புனித உள்ளம் படைத்தவர், நீங்கள் வழங்கும் கோவணக்கொடையைப் பற்றி மக்கள் மிகவும் புகழ்கின்றனர். நான் உங்களைக் கண்டு மகிழவே வந்தேன்". அமுதுண்ணும்படியாக அவரை அமர்நீதியார் இரந்து வேண்டினார். அவர் உடனே இசைந்து இவ்வாறு கூறினார், "நான் ஆற்றுக்குச் சென்று குளித்துவிட்டு நித்திய கடமைகளை முடித்துக்கொண்ட பின் திரும்பி வருகின்றேன். எனவே அருள்கூர்ந்து உலர்ந்த இக்கோவணத்தை பாதுகாப்பாக வைத்திருங்கள்; நான் திரும்பி வந்ததும் அதைப் பெற்றுக்கொள்கிறேன். கோவணம் மிகவும் பெருமைவாய்ந்தது என்பதை நீங்கள் ஏற்கனவே நன்றாக அறிந்திருக்கிறீர்கள். எனவே அதை அருள் கூர்ந்து நன்கு பாதுகாத்து வைத்திருங்கள்."

பிரம்மச்சாரி விடைபெற்றுச் சென்றார்; அமர்நீதியார் கோவணத்தை வீட்டினுள் பாதுகாப்பாக வைத்திருந்தார். ஆனால் அது மறைந்துவிட வேண்டுமென்று இறைவன் விரும்பினார். குளியல் முதலியவற்றை முடித்துக்கொண்டு பிரம்மச்சாரி திரும்பி வந்தவுடனே உலர்ந்த அக்கோவணத்தைத் தருமாறு கேட்டார்; ஏனெனில் தண்டின் முனையில் வைத்திருந்த இன்னொரு கோவணம் மழையால் நனைந்துவிட்டது. அமர்நீதியார் அதைத் தேடி எடுக்க முடியவில்லை. அவர் ஆழ்ந்த பக்தியுடன் இறைவனை வேண்டினார். எனினும், அதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர் பிரம்மச்சாரியை நடுக்கத்துடன் அணுகி மற்றொரு கோவணம் தருவதாகச் சொல்லித் தமக்கு நேர்ந்த சங்கடத்தை விளக்கினார். ஆனால் பிரம்மச்சாரி அந்த விளக்கத்தை ஏற்றுக் கொள்ளும் நிலையில் இருக்கவில்லை. அமர்நீதியார் அதற்கு ஈடாகப் பெரும் செல்வத்தையும் வழங்க முன் வந்தார். ஆனால் பிரம்மச்சாரி கூறினார்; "இந்தச் செல்வத்தையெல்லாம் வைத்துக்கொண்டு நான் என்ன செய்ய முடியும்? இவற்றாலெல்லாம் எனக்குச் சிறிதும் பயன் இல்லை. எனக்கொரு கோவணம்தான் வேண்டும்."

இவ்வாறு சொன்னதனால் பிரம்மச்சாரிக் கோலத்தில் இருந்த இறைவன் மிகப்பெரும் உண்மையை வெளியிட்டார். அவர் தொடர்ந்தார், ''என்னிடம் மற்றொரு கோவணம் இருக்கிறது. அதன் எடைக்கு நிகரான மற்றொன்றை எனக்குத் தரலாம்.'' இதைக் கேட்டவுடன் அமர்நீதியார் பெரிதும் விடுபட்டதாகக் கருதினார். அவர் ஒரு தராசைக் கொண்டுவந்தார். அவர் ஒரு தட்டில் கோவணத்தை வைத்தார்; மற்றொரு தட்டில் ஒரு துண்டுத் துணியை வைத்தார். பிரம்மச்சாரியின் தட்டு கீழே தாழ்ந்தது. அமர்நீதியார் தம் தட்டில் எதை வைத்தாலும் பிரம்மச்சாரியின் தட்டே கனம் மிகுந்து காணப்பட்டது; அமர்நீதியார் பெரும் வியப்படைந்தார்; யாவும் இறைவன் திருவிளையாடல்தான் என்று தெளிவடைந்தார். அவருடைய செல்வங்கள் எல்லாம் சேர்ந்தும் பிரம்மச்சாரியின் கோவணத்துக்கு ஈடாக முடியவில்லை. இது எப்படி சாத்தியம் ஆகும்? ஏனெனில், சிவபெருமானுடைய கோவணம் என்பது வேதங்களே! கோவணத்தின் நூல் இழைகளெல்லாம் சாஸ்திரங்களே!

அமர்நீதியார் திகைப்பின் முனையில் நின்றார். அவர் பிரம்மச்சாரியின் திருவடிகளில் பணிந்து, தாமும், தம் மனைவியும், தம் குழந்தையும், பிரம்மச்சாரியின் கோவணத்துக்கு நிகராகத் தராசுத் தட்டில் எடை பார்க்கப்பட அனுமதி வேண்டினார். பிரம்மச்சாரி இசைவு தெரிவித்தார். அமர்நீதியார் தம் மனைவியோடும் குழந்தையோடும் தராசு தட்டிலமர்ந்து, ''நான் சிவனடியார்களுக்கு உண்மையான ஆர்வத்தோடும் நேர்மையோடும் பணி செய்திருந்தால் இத்தராசுத்தட்டு மற்றதற்குச் சமமாகட்டும்'' என்று கூறினார். உடனே இருதட்டுகளும் சமமாயின. சிவனடியார்களுக்கு அமர்நீதியார் செய்த தன்னலமற்ற சேவையின் தகுதி சிவபெருமானுடைய கோவணத்தின் தகுதிக்குச் சமமாயிற்று. இதைப் பார்த்துக்கொண்டிருந்த மக்கள் அனைவரும் பெரும் வியப்புக்குள்ளாயினர். அவர்கள் அமர்நீதியாரின் திருவடிகளில் பணிந்து அவரைப் புகழ்ந்தனர். விண்ணிலிருந்து தேவர்கள் பாரிஜாத

மலர்களைச் சொரிந்தனர். பிரம்மச்சாரி மறைந்தார்; இறைவன் பரமேசுவரனும் அன்னை பார்வதியும் ரிஷப வாகனத்தில் எழுந்தருளி அமர்நீதியாருக்கும் அவருடைய மனைவிக்கும் குழந்தைக்கும் காட்சிதந்தனர். இறைவன் நல்லாசிகள் வழங்கி, "முழுமனதோடும் நேர்மையோடும் என் பக்தர்களுக்கு நீ செய்த பணிவிடைகளால் நான் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தேன். உன் கோவணக் கொடையால் பெருங் களிப்படைந்தேன். நீங்கள் மூவரும் என் இருப்பிடம் அடைந்து என்றென்றும் மகிழ்வுடன் வாழ்வீர்களாக", என்று கூறினர். இறைவன் திருவருளால் தராசுத் தட்டே விண்ணுலகத் தேராக மாறி அதில் அமர்நீதியாரும் அவருடைய மனைவியும் குழந்தையும் அமர்ந்தபடிச் சிவபுரத்தை அடைந்தனர்.

## 8. எறிபத்த நாயனர்

சோழ நாட்டின் முக்கியத் தலைநகரங்களில் ஒன்றாகிய கருவூரில் எறிபத்த நாயனர் பிறந்தார். அமராவதி நதிக்கரையில் அமைந்த புனிதமான தலம் அது. நதியின் இரு கரையோரங்களிலும் ஞானிகளும் சாதுக்களும் தவம் புரிந்து வந்தனர். ஆன்மீக அலைகளையும் பரப்பி வந்தனர். அரசனிடத்தும் அவ்வாறே மக்களிடத்தும் கருணை பொழிந்து வந்த பசுபதீசுவரரின் புகழ்வாய்ந்த கோயிலும் அங்கிருந்தது. அனைவரும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தனர். மிகுந்த நம்பிக்கையோடும் பக்தியோடும் எறிபத்த நாயனர் நாள்தோறும் பசுபதீசுவரரை வழிபட்டு வந்தார். சிவனடியார்களுக்குச் சேவை செய்வதும் அவர்களுக்கு எல்லா வகையான பாதுகாப்பளிப்பதும் அவருடைய வாழ்வின் ஒரே குறிக்கோளாக இருந்து வந்தது. இதற்காக அவர் எப்போதும் மழுப்படை தாங்கி இருந்தார். சிவனடியார்களுக்குத் தீங்கு செய்ய முயலும் எவரையும் அவர் மழுப்படையால் தண்டித்து வந்தார். இறைவன் செய்ய வேண்டிய பணியையே அவர் இதனல் செய்து வந்தார்.

அந்நகரில் சிவகாமியாண்டார் என்ற பெயருள்ள சிவனடியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். நாள்தோறும் தவருமல் அவர் சிவபெருமானை வழிபட்டு வந்தார். பொழுது விடியும் காலை நேரம், அவரைப் பூந்தோட்டத்தில் குளித்து முடித்தவராய்ப் பூக்கள் எடுப்பதையும் மாலை தொடுப்பதையும் கண்டுதான் விடியும். தொடுத்த மாலைகளை அவர் கோயிலுக்கு எடுத்துச் சென்று இறைவனுக்கு வழங்குவார். இது அவருடைய அன்ருடக் கடமையாக இருந்தது.

மக்கள் அனைவரும் மகிழ்ச்சியாக இருந்த ஒரு மகா நவமி நாளன்று சிவகாமியாண்டார் வழக்கம்போல் பூக்குடலையுடன் கோயிலுக்கு வேகமாக சென்று கொண்டிருந்தார். அதே நேரத்தில் அரசனின் அன்புக்குரிய பட்டத்து யானை ஆற்றில் நீராடியபின் அரண்மனை நோக்கித் திரும்பி வந்து கொண்டிருந்தது. அதன் பிடரியில் மாவுத்தர் இருவர் அமர்ந்திருந்தனர்; மூவர் பக்கத்தில் இருந்து வழி நடத்தி வந்து கொண்டிருந்தனர். உடனே அது மதம்பிடித்து மக்களைத் துரத்தலாயிற்று. அவர்கள் இங்குமங்குமாக ஓடலாயினர். அது சிவகாமியாண்டாரை நோக்கி ஓடியது. அது அவரைத் துதிக்கையால் வளைத்தது; பூக்குடலையைப் பறித்தது; தரையில் வீசி எறிந்துவிட்டு ஓடிப் போயிற்று. பூக்களெல்லாம் தரையில் சிதறிக்கிடந்தன. சிவகாமியாண்டார் மிகுந்த அதிர்ச்சியடைந்தார். இறைவனுடைய வழிப்பாட்டுக்காக அவர் வைத்திருந்த பூக்களை எல்லாம் யானை அழித்து விட்டது. அவர் யானையைத் துரத்தினர். மூப்பின் காரணமாக அவர் களைப்புற்றுக் கீழே விழுந்து விட்டார். அவர் மிகுந்த வருத்தத்துடன் ஓலமிட்டு அலறினர். "சிவதா! சிவதா!" (வருத்தத்தைப் புலப்படுத்தும் ஓலம்). எறிபத்த நாயனர் தற்செயலாக அவ்வழியே வந்தார். அவர் சிவகாமியாண்டாரின் பரிதாபம் மிக்க ஓலத்தையும் அதன் காரணத்தையும் கேட்டார். 'அந்த யானை எங்குற்றது?' என்று எறிபத்தர் வினவிச் சிவகாமியாண்டார் சுட்டிக் காட்டிய திசையில் ஓடினர். விரைவில் அவர் யானையை மடக்கித் தம்

மழுப்படையை வீசி எறிந்து ஒரே வெட்டில் அதைக் கொன்று வீழ்த்தினர். பின்னர் அவர் மாவுத்தர்களின் மீதும் பாய்ந்து அவர்களையும் கொன்று வீழ்த்தினர்.

யானைக்கு நேர்ந்த கதியைப் பற்றிய செய்தி விரைவில் அரசனை எட்டியது; அவன் உடனே குதிரையின் மீதேறி அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தான்; புடைசூழப் படைவீரர்கள் இருந்தனர். யானையைக் கொன்றவர் எவரையும் அவனால் காண முடியவில்லை; ஏனெனில் சிவயோகி எறிபத்தர் அச்செயலை செய் திருக்க முடியாதென்று கருதினன். 'என் யானையைக் கொன்றது யார்?' என்று அவன் முழக்கமிட்டுக் கேட்க லானன். அங்கிருந்த யாரோ ஒருவர் எறிபத்தரைச் சுட்டிக் காட்டியவுடன் அரசனுடைய சினம் மறைந்தது. ஏனெனில் சிவயோகி அப்படிச் செய்திருந்தால் அதற்குத்தகுந்த காரணம் இருந்திருக்கும் என்று அவனுக்குத் தெரியும். தற்காப்புக்காகவே அவர் யானையைக் கொன்றிருக்க வேண்டும் என்று கருதிய அரசன் அவருக்கு எந்தவிதமான தீங்கும் ஏற்பட வில்லை என்பதுபற்றி மகிழ்ச்சியடைந்தான். அவன் எறிபத்தரை நோக்கிக் கூறினன். ''சுவாமிகளே! தாங்கள்தான் யானையைக் கொன்றீர்கள் என்பதை யான் அறியேன். நிச்சயமாக யானையும், மாவுத்தர் களும் தங்களுக்குத் தீங்கு ஏதும் இழைத்திருக்கக் கூடும்; தாங்கள் சரியானபடி தண்டித்து விட்டீர்கள்.'' நிகழ்ந்தன யாவற்றையும் அரசனுக்கு எறிபத்தர் எடுத்துரைத்து; யானையும் மாவுத்தர்களும் சிவ அபராதம் செய்தமையால் நான் கொன்றேன்' என்று தெரிவித்தார். சிவ அபராதம் (சிவபெருமானுக்குச் செய்யும் குற்றம்) என்ற சொல்லைக் கேட்டவுடனே அரசன் மிகுந்த மனத் துயரத்தை அடைந்தான். எறிபத்தரின் திருவடிகளில் பணிந்து, ''சுவாமிகளே! அவர்கள் செய்த குற்றத்திற்குத் தாங்கள் வழங்கிய தண்டனை போதாது, இத்தகைய யானையையும் மாவுத் தர்களையும் வைத்துக்கொண்டிருந்தமையால் நான் மிகப் பெரும் குற்றத்தைச் செய்துவிட்டேன். தங்கள் புனிதமான மழுப்படையினல் வீழ்த்தப்பட்டு இறக்கும்

தகுதி எனக்கு இல்லை. இதோ! என் வாளினைத் தருகிறேன். அருள்கூர்ந்து என் தலையை வெட்டி வீழ்த்துங்கள்,'' என்று வேண்டினான்.

இவ்வார்த்தைகளைக் கேட்டு எறிபத்தர் திகைப் படைந்தார். அவரே மிகுந்த துயரத்திற்காளானார். 'அரசனுக்கு எத்தகைய வருத்தத்தை உண்டாக்கி விட்டேன்! எத்தகைய பெருந்தன்மையுள்ள அரசன் இவன்! என்று எண்ணமிட்டார்; தவறினால் அரசன் தன்னைத்தானே தண்டித்துக் கொள்ளக்கூடும் என்று கருதி அரசனிடமிருந்து வாளை வாங்கிக்கொண்டார். அரசனுடைய மனத்துயரத்திற்குத் தாமே காரணம் என்று எறிபத்தர் உணர்ந்தார்; தம்மையே தண்டித்துக்கொள்ளும் பாங்கில் அவர் தம்முடைய கழுத்தில் வாளைப் பதித்துக்கொண்டார்; அரசன் அலறினான். இன்னொரு குற்றத்தையும் செய்த தவறு தன்னைச் சேரும் என்று கருதினான். உடனே அவ ருடைய கையிலிருந்த வாளைப் பற்றிப் பறித்துக் கொண்டு எறிபத்தர் தற்கொலை செய்து கொள்வதைத் தடுத்துவிட்டான்.

இறைவனுடைய திருவிளையாடல் முடிவுற்றது. விண்ணில் அசரீரி ஒலித்தது. ''நல்லோரே! இது பெருமான் பசுபதீசுவரருடைய திருவிளையாடல். தம் அடியாரின் நேர்மையான நம்பிக்கையான பணி விடையை அனைவரும் அறிய வேண்டும் என்பது அவருடைய விருப்பம்''. உடனே யானையும் மாவுத்தர் களும் உறக்கத்திலிருந்து விழித்தெழுதுவதுபோல், எழுந்தனர். சிவகாமியாண்டாருடைய பூக்குடலை பூக்களால் நிறைந்திருந்தது. அனைவரும் வியப்படைந்து இறைவன் பசுபதீசுவரருடைய புகழ்களைப் பாடினர். எறிபத்தர் வாளை அரசனுடைய திருவடிகளில் கிடத்தி பணிந்து வணங்கினார். அரசனும் எறிபத்தருடைய திருவடிகளில் விழுந்து பணிந்து வணங்கினான். இரு வரும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு பெரு மகிழ்ச்சியடைந்தனர். அரசன் யானைமீதேறி அமர வேண்டுமென்று எறிபத்தர் தம் விருப்பத்தைத் தெரி வித்தார். அரசனும் அவ்வாறே செய்தான்.

எறிபத்தர் தம் இருப்பிடத்துக்குத் திரும்பினார். சிவகாமியாண்டார் பூக்களுடன் கோயிலுக்குச் சென்றார்.

எறிபத்தர் சிவனடியார்களுக்குத் தொடர்ந்து பணிவிடை செய்துவந்தார். முடிவில் அவர் இம்மானிடச் சட்டையைக் களைத்தெறிந்துவிட்டுச் சிவபெருமானுடைய பேரின்ப உலகை அடைந்தார்.

## 9. ஏனாதிநாத நாயனார்

ஏனாதிநாத நாயனார் ஒரு சானார். (கள்ளிறக்குபவர்). சோழநாட்டு எயினனூரில் அவர் பிறந்தார். கும்பகோணத்திற்குத் தென்கிழக்கில், அரிசிலாற்றங் கரையில் அவ்வூர் இருந்தது. அங்கு செல்வமும் வளமும் நிறைந்திருந்தன.

ஏனாதிநாதர் சிவபெருமானிடத்தில் ஆழ்ந்த அன்பு கொண்ட பக்தர். மெய்ப்பொருள் நாயனாரைப்போல, அவரும் சிவபக்தியின் புறச்சின்னங்களிடம் ஆர்வம் மிகுந்த பக்தி பூண்டிருந்தார். ஏனாதிநாதருக்கு, விபூதி அல்லது புனித திருநீற்றின் முக்கீற்றுகள் ஒருவர் நெற்றியில் காணப்படின், அவருடைய உள்ளத்தில் வணக்கத்தை ஏற்படுத்த அதுவே போதியதாக இருந்தது.

சிவபக்தர்களின் நெற்றியில் காணப்படும் இவ்வடையாளத்தைப் பற்றி ஒரு வார்த்தை சொல்வது வேண்டா கூறலாகாது. இந்த அடையாளத்தின் வாயிலாக ஆன்மீக சாதகருக்குச் சிவபெருமான், மூவகையான மலங்களை அழிக்குமாறு மௌனமாகக் கற்பிக்கின்றார்; அவையாவன: ஆணவம் (நான் என்ற அகம்பாவம்); தன்மம் (தன்னலச் செயல்); மாயை (மயக்கம்); மூன்று ஆசைகள் அல்லது ஏஷணை—உலகியல் பொருளாசை; புத்திரபாசம்; மனைவிமீது மோகம்; மூன்று வாசனைகள் அல்லது நுண்ணிய மனச் சார்புகள்—உலக வாசனை (உலகியல் பற்று); சாஸ்திர

வாசனை (சமய வேதங்களிலும் வாக்குவாதங்களிலும் கண்மூடித்தனமான நம்பிக்கை); தேக வாசனை (உடற் பற்று); மூவகை உடலாசைகளைக் கடந்து நிற்றல் (தூல சரீரம், ஆவி சரீரம், காரண சரீரம்) மூவகை அவத்தைகள் - விழிப்புநிலை, கனவுநிலை, ஆழ்ந்த உறக்கநிலை, முடிவில் இறைவனோடு இரண்டறக் கலப்பதாகும். பஸ்மம் அல்லது புனிதநீறு தெய்வத் தன்மை வாய்ந்த பிணிநீக்கி என்று சாஸ்திரங்கள் உறுதி கூறுகின்றன. பிறப்பு, இறப்பு உட்பட எல்லா நோய்களையும் அது போக்குகின்றது; அதை அணிபவருக்கு இந்த நன்மையைச் செய்வதோடு மிக உயர்ந்த செல்வமாகிய முத்தியை வழங்குகிறது.

புனித திருநீற்றின் பெருமை இத்தகையதாகும்; எனவே நெற்றியில் நீறுபூசியவராய் யார் வந்தாலும் அவரை ஏனாதிநாதர் வழிபட்டதில் வியப்பில்லை. அத் தொண்டரிடத்தில் ஏனாதிநாதர் சிவபெருமானையே கண்டார். நீறுபூசிய தொண்டர் வேண்டி தம் உயிரை யும் அவருடைய திருவடிகளில் கொடுத்துவிடச் சித்த மாக இருந்தார்.

ஏனாதிநாதர் சிறந்த வாட்படை வீரர். இளவரசர் களுக்கு வாட்பயிற்சி தந்து வந்தார். இத்தொழில் அவருக்கு நல்ல வருவாய் தந்தது. தம் வருவாய் எல்லா வற்றையும் சிவனடியார்களுக்குப் பணிவிடை செய்வதி லேயே செலவழித்தார். அவர் மிகவும் புகழும் பெற்றார். இதே தொழில் செய்து வந்த அதிசூரன் என்பவனுக்கு இதனால் மிகுந்த பொறாமை ஏற்பட்டது. (பெரிய வீரன் என்று பொருள்படும்) தன் பெயருக்கு மாறாக, வாட் படை வலிமையோ அல்லது உடல் வலிமையோ அவனிடத்தில் இல்லை; ஏனெனில் அவன்பால் எல்லா வகையான தீய குணங்களும் நிரம்பி இருந்தன. எனினும் அவன் ஏனாதிநாதரை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற விரும்பினான்.

தன் சுற்றத்தோடும் படைக்கலங்களோடும் ஒரு நாள் அதிசூரன் — ஏனாதிநாதரின் வீட்டை நோக்கிப்

படை எடுத்துச் சென்றான். தன் சுற்றத்தாரின் உதவியால் ஏனாதிநாதரை வென்று விடலாம் என்று அவன் நம்பியிருந்தான். ஏனாதிநாதருடைய வீட்டு முற்றத்தில் நின்று கொண்டு அவரைப் போருக்கு வருமாறு அறை கூவி அழைத்தான். இது சிங்கத்தோடு போர் செய்ய அதன் குகைக்கே நரி வந்தது போலிருந்தது. ஏனாதி நாதர் அறைகூவலை ஏற்றுக்கொண்டு போர் செய்ய முன் வந்தார். அதிசூரன் நடுக்க மடைந்தான். தன்னோடு போர் செய்ய அருகில் உள்ள ஒரு காட்டுக்கு வருமாறு ஏனாதிநாதரை அவன் அழைத்தான். அங்கு அதிசூரனுடைய சுற்றத்தார் காத்துக்கொண்டிருந் தார்கள். இடை நேரத்தில் ஏனாதிநாதருடைய நண்பர் கள் வந்து அவரைச் சுற்றிலும் அணிவகுத்து நின்றார் கள். இரு அணிகளும் ஒன்றுடன் ஒன்று மோதின. நடைபெற்ற போரில் பலர் உயிரிழந்து வீழ்ந்தனர். அக்காட்டை விட்டு அதிசூரன் ஓடிவிட்டான். அவன் ஏனாதிநாதரை வெளிப்படையான போரில் (அது நிறை வேற முடியாதது) அல்லாமல் தந்திரத்தால் கொல்ல விரும்பினான்.

அடுத்தநாள் அவன் ஏனாதிநாதருக்குப் பின்வரும் செய்தி அனுப்பினான்; "பக்கத் துணையாக யாரும் இல்லாமல் இம்முறை தனிநின்று போர் செய்வோம்; நம் பகையால் அப்பாவி மக்களும் பலர் இறக்கின்றனர்; யாருக்கும் தெரியாமல் நாம் இருவர் மட்டும் தனிஇடம் சென்று போர் செய்வோம்." ஏனாதிநாதர் இதனை ஏற்றுக்கொண்டார். அடுத்தநாள் காலையில் ஏனாதி நாதர் அதிசூரன் குறிப்பிட்ட இடத்திற்கு ரகசியமாகச் சென்று அவனுடைய வருகைக்காகக் காத்திருந்தார். அதிசூரன் தன் நெற்றி எல்லாம் நீறுபூசிக்கொண்டு (கேடயத்தால் மறைத்தவாறு) நெருங்கினான். பெரும் கர்ச்சனை செய்தவராய் ஏனாதிநாதர் அவன் மீது பாய்ந்தார். மறுகணம் அதிசூரன் தன் கேடயத்தை அகற்றி நீறுபூசிய தோற்றத்தை வெளிப்படுத்தினான், ஏனாதிநாதர் உடனே தன் வாளைக் கீழே தாழ்த்திப் பின்வருமாறு நினைக்கலானார். "ஆ! எத்தகைய பாவம் செய்ய இருந்தேன்! இப்போது அவன் சிவபக்தனாகி

விட்டான்; அவனுக்கு நான் தீங்கு செய்யக்கூடாது. என்னைக் கொல்லவேண்டும் என்ற எண்ணத்தை அவன் நிறைவேற்றிக் கொள்ளட்டும்.'' ஏனுதிநாதர் வாளை வீசிஎறிய விரும்பியவர், கையிலேயே வைத்துக் கொண்டார். ஏனெனில் சிவபக்தராகிய தம் எதிரி ஆயுதமற்ற ஒருவரைக் கொன்ருர் என்ற பழியை வலிய அடையச் செய்யும் குற்றம் ஏற்படும். அவர் இவ்வாறு மௌனமாக நிற்கவும், அதிசூரன் அவரைக் கொன்ருன்.

திருநீற்றின் காரணமாக ஏனுதிநாதர் தம்மையே தியாகம் செய்த செயலால் சிவபெருமான் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். ஏனுதிநாதர் வீழ்ந்தவுடன் சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்து சிவபுரத்துக்கு அழைத்துக்கொண்டார்.

## 10. கண்ணப்ப நாயனுர்

நாகன், பொத்தப்பி நாட்டு உடுப்பூரில் வாழ்ந்த வேடுவர்களுக்கு அரசன். தத்தை, அவன் மனைவி. இருவரும், முருகபெருமானுடைய பெரும் பக்தர்கள். நீண்ட நாட்களுக்குப் பிறகு முருகனருளால் அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அது மிகவும் திண்மையாக இருந்தபடியால் திண்ணனுர் என்று பெயரிட்டனர்.

திருக்காளஹஸ்திப் புராணத்தின்படி, திண்ணனுர் முற்பிறப்பில் அருச்சுனனுக இருந்தார். பாசுபதாஸ்திரத்தைப் பெறச் சிவபெருமானை வழிபடச் சென்றபோது, வேட்டுவராக வந்த இறைவனை அருச்சுனன் கண்டு கொள்ள முடியவில்லை. எனவே இறுதி நிலையான முக்தியைப் பெறுவதற்கு முன்னர், அவன் மீண்டும் வேடுவனுகப் பிறந்து இறைவனை வழிபட வேண்டி நேர்ந்தது.

வேடர்குல வழக்கத்தின்படித் திண்ணனுருக்குக் கல்விப் பயிற்சி அளிக்கப்பட்டது. அவர் சிறந்த

வில்லாளியானர். அவர் இளைஞராக இருந்தபோதே அவர் தந்தை ஓய்வு பெற்றுத் தம் மைந்தனுக்கு முடி சூட்டி அரசராக்கினர். வேடுவராக இருந்து தம் குல தர்மத்தின்படி வேட்டையாடி வந்தாலும் திண்ணனர் அன்பு நிறைந்தவராய், விலங்குகளின் குட்டிகளையும், பெண் இனங்களையும், நோயுற்றவைகளையும் கொல்லாதவராய் வாழ்ந்தார். ஆன்மீகமாக அவர் ஏற்கனவே தம் உள்ளத்திலிருந்த காமம், குரோதம், ஆசை, அகந்தை முதலான விலங்குகளைக் கொன்றுவிட்டார்.

ஒரு நாள் திண்ணனர் வேட்டைக்குச் சென்றார். அவர் விரித்த வலையிலகப்பட்ட ஒரு பன்றி தப்பித்துக் கொண்டு ஓடிவிட்டது. திண்ணனர், நாணன் காடன் என்ற இருவர் தம்முடன் வர, அப்பன்றியைப் பின் தொடர்ந்தார். பன்றி மிகவும் களைத்துப்போய் ஒரு மரத்தினருகில் நின்றது. திண்ணனர் உடனே அதைக் கொன்றார். அவர்களும் மிகவும் களைத்துப்போய்த் தாகத்தினல் வருந்தினர். அவர்கள் பொன்முகலியாற்றை நோக்கிச் சென்றனர். திண்ணனர் அருகில் இருந்த மலைமீதேற விரும்பினர். நாணன் உடன்வர முன்வந்து காளஹஸ்தி என்ற அம்மலையில் குடுமித் தேவர் (குடுமியுடன் கூடிய இறைவன்) இருப்பதாகக் கூறினன். காடன் பன்றி இறைச்சியைச் சமைக்க முனைந்தான்.

முற்பிறவிச் சம்ஸ்காரங்களின் பயனுக, மலை ஏறத் தொடங்கியவுடனேயே திண்ணனரிடத்தில் உறுதியான மாறுதல் நிகழ்ந்தது. தம் தோள்களிலிருந்த மிகப் பெரிய சுமை கீழே இறக்கி வைக்கப் பட்டதுபோல அவர் உணர்ந்தார். உடல் உணர்வையும் அவர் இழக்கலானர். இறைவனைக் கண்டவுடனே அவருடைய உள்ளத்தில் உயர்ந்த அன்பின் அலைகள் கிளர்ந்தெழுவதை உணர்ந்தார். இலிங்கத்தைக் கட்டித்தழுவி முத்தமிட்டார்; ஆனந்தக்கண்ணீர் சொரியலானர். இறைவன் அங்கு தனித்திருப்பதாக உணர்ந்தார்; எனவே தாம் உடனிருக்க முடிவு செய்தார். இறைவன் பசியால் வருந்துவதாக ஓர்

எண்ணம் ஏற்பட்டது. இறைவனைத் தனியே விட்டுச் செல்ல மனம் விரும்பவில்லை; எனினும் இறைவனுக்கான உணவைக் கொண்டு செல்வதற்காக மலையிலிருந்து கீழே இறங்கி வந்தார். பன்றி இறைச்சியின் சிறந்த பகுதிகளைத் தேர்ந்தெடுத்துச் சுவை பார்த்து மிகவும் சுவையானவற்றை இறைவனுக்கென்று எடுத்து வைத்தார். இடையே நாணன்பாலிருந்து, இறைவனுக்கு உணவு படைக்கப்படுவதற்கு முன்பு, நாள்தோறும் அவர் நீராலும், மலராலும் வழிபடப்படுவார் என்று அறிந்திருந்தார். எனவே வழிபாட்டுக்குரிய பிற பொருள்களைத் திரட்டத் தொடங்கினார். பன்றி இறைச்சி, வில், கணை ஆகியவற்றை எடுத்துக் கொண்டு, இம்முறை தனியாக, மலைமீது ஏறிச் சென்றார்.

கோயிலில், திண்ணனார் இறை வழிபாட்டுக்காகத் தாம் கொண்டு வந்திருந்த நீரை வாயிலிருந்து உமிழ்ந்தார். இதுவே 'அபிஷேகம்'. தாமே தலையில் சுமந்து வந்த மலர்களைக் கொண்டு இலிங்கத்தை அலங்கரித்தார். இதுவே 'அருச்சனை'. பின்னர் இறைவன் முன்னால் பன்றி இறைச்சியைப் படைத்தார். வெளியே சென்று வாசலில் காவல் காத்து நின்றார். இல்லையெனில் கொடிய விலங்குகள் எவையேனும் உட்புகுந்து இறைவனைத் துன்புறுத்தக்கூடும். காலையில் மீண்டும் அவர் இறைவனுக்குப் புதிய உணவு படைப்பதற்காக வேட்டையாடச் சென்றார்.

இடையே, நாணனும் காடனும் திண்ணனாருக்கு நேர்ந்த இம்மாறுதல் பற்றி (அவர்கள், பைத்தியம் பிடித்துவிட்டதாகக் கருதினார்கள்) மிகவும் கவலை கொண்டனர். அவர்கள் சென்று திண்ணனாருடைய பெற்றோர்களுக்கு அறிவித்தார்கள். அவர்கள் வந்து அவரைத் தங்களுடன் திரும்பவும் அழைத்துச் செல்ல முயன்று தோல்வியுற்றுச் சென்றுவிட்டனர்.

காலையில் திண்ணனார் இறைவன் உணவுக்காகக் கோயிலைவிட்டுச் சென்றவுடன், கோயில் அர்ச்சகராகிய

சிவகோசரியார் வழக்கமாக வைதிக் முறைப்படி செய்யும் வழிபாட்டைச் செய்ய அங்கு வந்தார். முன்பின் தெரியாத யாரோ கோயிலில் செய்துள்ள அசுத்தங்களைக் கண்டு நடுங்கினர். ஆகமங்களில் (சிவ வழிபாட்டுச் சடங்குகளில்) அவர் முதிர்ந்த தேர்ச்சி பெற்றவர். புனிதமாக்குவதற்கான சடங்குகளைச் செய்து முடித்து நீராடி வந்து வழக்கமான வழிபாட்டைத் தொடங்கினர். தம் வாய் காற்றுப்பட்டாலும் தூய்மை கெடும் என்று கருதித் தம் வாயைத் துணியால் கட்டியவராகப் புனிதமான ஒரு குடத்தில் தண்ணீர் கொண்டு வந்தார். புனிதமான ஒரு கூடையில் புதியனவாகக் கொய்த மலர்களைக் கொண்டு வந்தார். பழங்களையும், யாரும் சுவைத்துப் பார்க்காத, தூய்மை கெடாத புதியனவாகச் செய்த பலகாரங்களையும் இறைவனுக்குப் படைப்பதற்காகக் கொண்டு வந்தார். வழிபாடு முடிந்த பின்னர் அவர் தம் இல்லத்திற்கு திரும்பினர்.

திண்ணனர் புதிய இறைச்சியுடன் திரும்பி வந்தார். அர்ச்சகர் செய்திருந்த அலங்காரங்களை எல்லாம் அப்புறப்படுத்தினர். தமக்கே உரிய வழியில் வழிபாடு செய்தார்; பின்னர் வழக்கம்போல வாசலில் காவல் காத்து நின்றார்.

இவ்வாறு ஐந்து நாட்கள் நடந்தன. புனித இடம் மாசுபடுவது கண்டு அர்ச்சகர் மிகவும் பதறிப்போனர். அதை நிறுத்துமாறு இறைவனிடம் முறையிட்டார். திண்ணனருடைய மிக உயர்ந்த பக்தியின் இயல்பைச் சிவபெருமான் சிவகோசரியாருக்கு காட்ட விரும்பினர். இறைவன் அவருடைய கனவில் தோன்றி, அடுத்தநாள் திண்ணனர் வழிபாடு செய்ய வரும்போது இலிங்கத்தின் பின்னல் மறைந்திருக்குமாறும் நடப்பதைக் கண்காணிக்குமாறும் கட்டளையிட்டருளினர்.

ஆருவது நாள் திண்ணனர் வழக்கமாக இறைவனுக்கான உணவு தேடிப் புறப்பட்டார். திரும்பிவரும்

வழியில் கெட்ட சகுனங்கள் பல நேர்ந்தன; இறைவனுக்கு ஏதோ தீங்கு நேர்ந்திருக்குமென்று அவர் உணர்ந்தார்; தமக்கே ஏதும் தீங்கு நேரக்கூடும் என்பதை எண்ணுதவராகத் தம்மையே மெய் மறந்தார். இறைவனிடம் ஓடிச் சென்ருர். இறைவனுடைய வலது கண்ணில் இரத்தம் வழிவதைக் கண்டு பெரிதும் வருந்திஞர். வழிபாட்டுக்காக அவர் கொண்டுவந்திருந்த பொருள்கள் யாவும் அவருடைய கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்தன. மனம் புண்பட்டவராக அழுதார். இறைவனுக்கு இத்தீங்கு செய்தவர் யாரென்று அவரால் காண முடியவில்லை. தமக்குத் தெரிந்த சில மூலிகைகளைக் கொண்டு இறைவனுடைய கண்ணுக்குச் சிகிச்சை செய்தார். இரத்தம் வழிவது இன்னும் நிற்கவில்லை. 'தசைக்குத் தசை' என்ற எளிய வழி அவருக்குப் புலப்பட்டது. உடனே தம்முடைய அம்பிஞல் தம் வலது கண்ணைப் பெயர்த்தெடுத்து இறைவனுடைய வலது கண்ணில் பொருத்தி வைத்தார். இரத்தம் கசிவது நின்று விட்டது. அவர் பெருமகிழ்ச்சி அடைந்தார். மகிழ்ச்சி மிகுந்து அவர் ஆனந்தக் கூத்தாடியபோது, இறைவனுடைய இடது கண்ணில் இரத்தம் வழிவதைக் கண்டார். ஆஞல் ஏற்கனவே அவர் அதற்கான மருந்தைக் கண்டிருந்தார். ஒரே ஒரு சிக்கல் இருந்தது; தம்முடைய மற்ருெரு கண்ணையும் பெயர்த்தெடுத்து விட்டால், இறைவனுடைய கண் இருக்குமிடத்தை எவ்வாறு கண்டறிவது? இலிங்கத்தில் இறைவனுடைய இடது கண் இருக்கும் இடத்தில் தம் பாதத்தை வைத்துக் கொண்டு, தம் அம்பிஞல் தம் இடது கண்ணைப் பெயர்த்தெடுக்கத் தொடங்கிஞர்.

உடனே சிவபெருமான் அவருடைய கையைப் பிடித்துக் கொண்டு தடுத்தவராக "என் அன்புக் குழந்தாய், கண்ணப்ப! உன் கண்ணைப் பெயர்க்கும் செயலை நிறுத்து" என்று கூறிஞர். 'கண்ணப்ப' என்ற பெயரை இறைவன் மும்முறை வழங்கிஞர். கண்ணப்பர் மும்முறை இறைவஞல் வாழ்த்தப்பட்டார். தம்முடைய கண்ணையே இறைவனுக்கு வழங்கியமையால் திண்ண

ஞர், கண்ணப்பராஞர். சிவபெருமான் தம் இரு கரங்களாலும் வாரி எடுத்து அவரைத் தம் வலது பக்கத்தில் அமரச் செய்தார். கண்ணப்பர் தம் பார்வையைத் திரும்பப் பெற்றுத் தெய்வமாக வாழ்ந்தார். சிவ கோசரியார் ஆழ்ந்த பக்தியின் உண்மையான தன்மையைப் புரிந்து கொண்டார்.

இவ்வரலாற்றில் ஓர் உட்பொருளும் உள்ளது. நாயஞர் தீயனயாவற்றையும் வென்ருர்; ஆனல் ஆணவ பலம் அல்லது அகம்பாவமும் அழிக்கப்பட வேண்டியிருந்தது. காட்டுப் பன்றி இதைக் குறிக்கின்றது. இது கொல்லப்பட்டவுடனே உயர்ந்த பக்தி உதயமாயிற்று. அதனே வேட்டையாடும்போது சாதகனுடன் நன்றும் - தீதும் உடன் வருகின்றன. (நாணன், காடன் ஆகிய இரு வேடுவர்). நாணன் ( நன்று ) இறைவனுடைய பெருமையை எடுத்துரைத்தான். காடன் (தீது) பின்ஞல் விட்டுவிடப்பட வேண்டியவன். நல்ல சம்ஸ்காரங்களேயுடைய சாதகன் இறைவனுடைய முன்னிலையில் செல்லுகின்ருன். ஆஞல் இறையுணர்வு பெறுவதற்கு இதையும் துறக்க வேண்டியுள்ளது. எனவே நாயஞர் இறைவழிபாட்டுக்குச் சென்றபோது தனித்தே சென்ருர். நாயஞருடைய பெற்ரேர் (உள்ளத்தில் மறைந்துள்ள நல்லனவும், உலகியல் ஆசைகளும் தீயனவும் ஆகிய மனச்சார்புகள்) இறைவனிடத்திலிருந்து அவரை அப்பாற் கொண்டு செல்ல முயன்று தோற்ருர்கள். இறைவன் சிவகோசரியாரைத் தம் பின்ஞல் மறைந்திருக்கும்படிக் கட்டளே இட்டார். ஆஞல் திண்ணஞர், அவருக்கு முன்ஞல் இருந்தார். இதன் கருத்து என்னவென்ருல், உண்மையான பக்தி வெறும் சடங்கைக் காட்டிலும் மிகவும் உயர்ந்தது என்பதாகும். இறைவனுக்காகத் திண்ணஞர் தம் கண்களேயே பெயர்த்தெடுக்கச் சித்தமாக இருந்தது முழுமையான சரணுகதி அல்லது ஆத்ம நிவேதனமாகும்; இதுவே பக்தியின் உயர்ந்த சிகரமாகும். இதுவே இறைவனுடைய பெருமையை உடனே புலப்படுத்துகிறது.

## 11. குங்கிலியக் கலய நாயனார்

சோழ நாட்டுத் திருக்கடவூரில் குங்கிலியக் கலய நாயனார் பிறந்தார். இத் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனின் பெயர் அமிர்த கடேசுவரர். ஒருமுறை தேவர்களும் அசுரர்களும் அமிர்தம் நிறைந்த கலசத்துடன் இங்கு வந்தனர். அவர்கள் நீராட விரும்பினர். எனவே அவர்கள் கலசத்தைத் தரையில் வைத்துவிட்டு ஆற்றுக்குச் சென்றனர். திரும்பி வந்தபிறகு, அவர்களால் கலசத்தைத் தூக்க முடியவில்லை. அக்கலசம் இலிங்கமாக உருமாறியது. எனவே இந்த லிங்கம் அமிர்தலிங்கம் எனப்படுவதாயிற்று. மார்க்கண்டேயர் இந்த லிங்கத்தை வழிபட்டு, என்றும் பதினாறுண்டாக வாழும் அமரத்வம் பெற்றார்.

இத்தலத்தில் உள்ள இறைவியின் பெயர் அபிராமி அம்மன். அன்னையின் மிகப்பெரிய பக்தர் அபிராமி பட்டர், அன்னையைப் புகழ்ந்து அழகிய பாடல்களைப் பாடியுள்ளார். இப்பாடல்களால் அகம் மிகமகிழ்ந்த அன்னை, அரசனுடைய சினத்திலிருந்து அவரைக் காப்பதன் பொருட்டு அமாவாசையை பௌர்ணமியாக மாற்றினாள்.

குங்கிலியக் கலய நாயனார் அந்தணர் குலத்தில் பிறந்தார். வாசனைத் தூபமிடும் கலயத்தை அவர் எப்போதும் கையில் வைத்திருந்ததனால் அவர் அப்பெயரைப் பெற்றார். இறைவன் முன்னிலையில் தூபமிடுவதை மிகவும் சிறந்த இறைபணியாக அவர் கருதினார். சிவபெருமான், நாயனாருடைய ஆழ்ந்த பக்தியினாலும் அற்புதமான இறைபணியாலும் நிறைந்த மகிழ்ச்சியுற்றார். இவருடைய உயர்ந்த பக்தியை அனைவரும் அறியச் செய்வதற்காக ஒரு பரிசோதனை செய்ய இறைவன் விரும்பினார்.

சிவபெருமானுடைய இச்சையின்படி, நாயனார் திடீரென்று வறியவரானார். அவர் தம்முடைய

சொத்துக்கள் எல்லாவற்றையும் விற்ருர். அவருடைய குடும்பத்தார் பட்டினி கிடந்தார்கள். இருப்பினும், அவர் இறைவன் முன்னிலையில் தூபமிடும் பணியைத் தொடர்ந்து செய்து வந்தார். கடமையுணர்வு மிகுந்த அவருடைய துணைவியார் ஒருநாள் பின்வருமாறு நினைத்தார். "எல்லாப் பொருள்களும் விற்கப்பட்டு விட்டன, இந்த மாங்கல்யம் (ஒவ்வொரு மணமகளும் கட்டாயம் தன் கழுத்தில் அணிந்திருக்க வேண்டிய பதக்கத்துடன் கூடிய புனிதக் கயிறு; கணவன் மடியும் வரை அணிந்திருந்து, கணவன் மடிந்தால் கழற்றப் படுவது) மட்டுமே எஞ்சியுள்ளது; என் கணவரிடம் இதைத் தருவேன்; அப்படிச் செய்வது அமங்கலமே! எனினும் தருவேன்; இதைவிற்று அவர் சிறிதளவு அரிசி பெற்று வந்தால் பட்டினி கிடக்கும் குழந்தைகளுக்கு உணவுபடைக்க முடியும்; இல்லையெனில் அவர்கள் பசியால் மடிவார்கள்." அவள் மாங்கல்யத்தைக் கழற்றிக் கணவரிடம் தந்தாள். அவர் மகிழ்வுடன் பெற்றுக்கொண்டார். அவர் அதை விற்பதற்காகக் கடைத்தெரு நோக்கிச் செல்கையில், சிவபெருமானே வியாபாரி வேடத்தில் அவர் முன்னே தோன்றித் தம்மிடம் மிக உயர்ந்த தூபப் பொருள்கள் உள்ளன என்று தெரிவித்தார். தூபம் என்ற சொல்லைக் கேட்ட உடனே நாயனர் தம் காரியத்தை அறவே மறந்தார். மாங்கல்யத்தை விற்றுத் தூபங்களை வாங்கிக்கொண்டு நேரே கோயிலுக்குச் சென்று இறைவன் முன்னிலையில் தூபமிடலானர்.

அவருடைய துணைவியார் அவருடைய வருகையை எதிர்நோக்கிப் பொறுமையுடன் காத்திருந்தார். இரவு நேரம் வந்தபின்னும் அவரைக் காணுமையால் குழந்தைகளை உறங்கச் செய்து இறைவனை வழிபட்டுக் கொண்டிருந்தார். இத்தகைய பண்பு நிறைந்த தம்பதியாரைக் கண்டு இறைவன் மிகவும் மகிழ்ந்தார். விசுவாசம் மிகுந்த மனைவி மிகவும் புனிதமான அணிகலத்தையும் தம் கணவர் இறைபணிக்காக இழக்கத் தயாரானர்.

''தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை''
என்று குறள் கூறுகின்றது.

அன்றிரவு சிவபெருமான் அந்த அம்மையாருடைய கனவில் தோன்றி எல்லாச் செல்வங்களும் பெறுமாறு வாழ்த்தினர்.

உறக்கத்திலிருந்து விழிப்புற்றெழுந்த அந்த அம்மையார் வீடுநிறையக் குவிந்திருந்த, எல்லா வகையான செல்வங்களையும் கண்டு வியப்படைந்தார்; அவர் இறைவனுடைய பெருமைகளை புகழ்ந்து பாடினர். உடனே சுவைமிகுந்த சமையலைச் செய்து தம் கணவருடைய வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தார்.

நாயனருடைய துணைவியாரை வாழ்த்தியபின், சிவபெருமான், கோயிலில் நாயனர் முன்னே தோன்றி இவ்வாறு கூறினர். ''அன்பரே! நும் ஆழ்ந்த பக்தியினல் பெரிதும் மகிழ்ந்தோம். நும் கடமையுணர்வு மிகுந்த மனைவியார் பாலும் உணவும் ஏந்தி நுமக்காக இல்லத்தில் கவலையுடன் காத்திருக்கின்ருர். உடனே இல்லத்திற்கு ஏகுவீராக!'' இதன் பின்னர்த்தான் நாயனருக்கு இவ்வுலக நினைவு ஏற்பட்டது. அவர் தம் இல்லத்திற்குத் திரும்பி வந்தபோது இறைவன் அருளால் அது சொர்க்கமாக மாற்றப்பட்டிருப்பதைக் கண்டார். சிவனடியார்களும் அங்கு பலராகக் கூடியிருந்தனர். அவர்கள் அனைவரும் இறைவனுடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடினர். நாயனர் இறைவன் தமக்கு வழங்கிய செல்வம் சிவனடியார்களுக்கு உரியதாகவே கருதி அவர்களுக்காகவே செலவிட்டார்; சேவை செய்தார்.

ஒருநாள் நாயனர் திருப்பனந்தாள் தலத்தில் உள்ள கோயிலைக்காண விரும்பினர். இங்குள்ள இறைவனின் பெயர் அருணசடேசர். அசுரன் ஒருவனுடைய மகளாகிய தாடகை மகப்பேற்றைவிரும்பி நாள்தோறும்

சிவ்லிங்கத்தை வழிபட்டு வந்தாள். ஒருநாள் வழிபாடு முடிந்தபின் லிங்கத்திற்கு மாலை அணிவிக்க அவள் விரும்பினாள். இருகரங்களாலும் மாலையை உயரத் தூக்கியபொழுது இடையிலிருந்து ஆடை நழுவிற்று. தன்னுடைய முழங்கையால் அதைத் தடுத்துக் கொண்டிருக்க நேர்ந்தது; எனவே மாலையை அணிவிக்கப் போதிய அளவு கையை உயர்த்த முடியவில்லை. அவளுக்கு உதவும் வகையில் இலிங்கம் ஒரு பக்கம் சாய்ந்து மாலையை ஏற்றுக்கொண்டது. மக்கள் பலர் இலிங்கத்தை இழுத்து நேராக்க முயன்றனர். ஆனால் முடியவில்லை. அரசன் இதனால் மிகவும் கவலைப் பட்டிருப்பதையும் இலிங்கத்தை நேராக்க விரும்பியிருப் பதையும் நாயனார் கேள்வியுற்றார். நாயனார் அரச னுக்கு உதவி செய்ய விரும்பினார். அவர் இலிங்கத் தைக் கட்டிய கயிற்றினால் தம் கழுத்தைப் பிணைத்தார்; (பக்திக் கயிறு) பின் மெதுவாக இழுத்தார். இலிங்கம் நேராயிற்று. தேவர்கள் விண்ணிலிருந்து மலர் மாரி பொழிந்தனர். அனைவரும் வியப்படைந்தனர்; நாயனாருடைய பெருமையையும், இறைவனிடம் அவர் கொண்டிருந்த உயர்ந்த பக்தியையும் உணர்ந்தனர்.

மேலும் சில காலம் சிவ பெருமானுக்கும், சிவனடி யார்களுக்கும் பணிவிடைகள் செய்து கொண்டிருந்த பின்னர் நாயனார் சிவபுரம் அடைந்தார்.

## 12 மானக்கஞ்சாற நாயனார்

சோழ நாட்டில் மிகவும் வளம் வாய்ந்த ஓர் இடம் கஞ்சாறூர். அங்கு வாழ்ந்த மக்களனைவரும் சிவ பக்தர்கள். அவர்களில் மானக்கஞ்சாறர் என்ற பெயருள்ள திடமான சிவபக்தர் ஒருவர். அவர் வேளாள குலத்தில் பிறந்தார். வழிவழியாக வரும் சேனாதிபதியாக அவர் இருந்தார். அவருடைய சுற்றத் தார் அவரிடம் மிகவும் உயர்ந்த மதிப்பு வைத்திருந் தனர். சுந்தரமூர்த்தி நாயனார் காலத்தில் அவர் வாழ்ந்து வந்தார். சிவபக்தர்களை வழிபடுவதே சிவ பெருமானுக்குச் செய்யும் மிகவும் உயரந்த வழிபாடாக

அவர் கருதி வந்தார். அவர் அவர்களுடைய பார்வையை பார்த்தே அவர்களின் மனத்தில் இருப்பதை தெரிந்து கொண்டு அவர்கள் ஏவாமலே அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தார்.

நீண்ட நாட்களாக அவருக்கு மகப்பேறு வாய்க்க வில்லை. சிவபெருமானை அவர் உறுதியோடும் பக்தி யோடும் வழிபட்டு ஒரு பெண் குழந்தையை பெறுகின்ற வரம் பெற்றார். நாயனர் இந்த தெய்வீகக் குழந்தை பிறந்த விழாவைக் கொண்டாடி, எண்ணற்ற அறங் களைச் செய்தார். நாளடைவில் அப்பெண், மணப் பருவத்தை அடைந்தாள். நேர்மையும் ஆர்வமும் மிகுந்த சிவபக்தரான ஏயர்கோன் கலிக்காமருக்கு மணம் முடிக்க நிச்சயம் செய்யப்பட்டது. திருமணத் திற்குரிய நாள் குறிக்கப்பட்டு, வேண்டிய ஏற்பாடுகள் யாவும் செய்யப்பட்டன.

இடையில் நாயனர் மீது தம் மிக உயர்ந்த அருளைப் பொழிய சிவபெருமான் விரும்பினர். அவர் ஒரு மகா விரதியின் (மிக உயர்ந்த விரதம் கொண்டவர்) வடிவில் வந்தார். மகா விரதி நெற்றியில் புனித நீறு பூசி யிருப்பார்; விரிந்த சடையுடன் எலும்பு மாலை அணிந் திருப்பார்; கூந்தலால் திரிக்கப் பெற்ற பூணூலை மார்பில் அணிந்திருப்பார். மானக்கஞ்சாறர் தம் முன்னே வருகைதந்த மகா விரதியாரை மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்ருர். அங்குள்ள விழாக் கோலத்தின் காரணத்தை அம்முனிவர் வினவவும், நாயனர் அன்று தம் மகளின் திருமண நாள் என்று விளக்கினர். அவர் தம் மகளை அழைத்து அம்முனிவரை வணங்கி வாழ்த்துக்களை பெறுமாறு கூறினர். அம் முனிவர் அவளுடைய அடர்த்தியான கூந்தலைப் பார்த்துப் பின்வருமாறு தெரிவித்தார். "அன்பரே! இவளுடைய கூந்தலைப் பார்த்து பெருமகிழ்ச்சியடை கின்றேன். இது பஞ்சவடிக்கு (மார்பில் அணியும் பூணூலாக) ஆகும்." உடனே நாயனர் அருகிலிருந்த வாளை எடுத்து, ஒரு கணமும் யோசியாமல், மகளின் தலையில் இருந்த கூந்தலை அறுத்து முனிவரிடம்

தந்தார். சிவயோகியிடம் அவர் கொண்டிருந்த எல்லை யற்ற பக்தியினால் தம் ஒரே மகளின் அழகைச் சிதைப் பதைப் பற்றியும் மணமகன் அவளை ஏற்றுக்கொள்ள மறுக்கக்கூடும் என்பதைப் பற்றியும் ஆன உண்மையை அவர் சிறிதும் நினைத்துப் பார்க்கவில்லை. முனிவர் வடிவில் இருந்த இறைவன் உடனே மறைந்தார். அன்னை பார்வதியுடன் கூடிய தம் காட்சியை அவர் நாயனாருக்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் வழங்கி நல்லாசிகளை வழங்கினார்.

ஏயர்கோன் கலிக்காமர் ஆகிய மாப்பிள்ளையும் அவருடைய குழுவினரும் அங்கு இதன் பின்னர், உடனே வந்தனர்; நிகழ்ந்தவற்றை எல்லாம் அறிய லாயினர். சற்று முன்னே வந்து இறைவனுடைய காட்சியைப் பெறவில்லையே என்று கருதி அவர் வருந்தினார். அழகை இழந்த மணமகளைப் பார்த்து அவளை ஏற்றுக்கொள்ள அவர் தயங்கியபோது, உள்ளத்தில் உறையும் சிவபெருமான் காரணத்தை அறிந்தவராய், அவளுடைய தலையில் கூந்தல் முழு அளவும் வளரச் செய்தார். நாயனாரும் அவருடைய குடும்பத்தாரும் மிக்க மகிழ்ச்சியடைந்து திருமணத்தை நிறைவேற்றலாயினர்.

## 13. அரிவாட்டாய நாயனார்

சோழ நாட்டில் கணமங்கலம் என்ற ஊரில் தாயனார் என்ற பெயருள்ள வேளாளச் செல்வன் ஒரு காலத்தில் வாழ்ந்து வந்தார்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்."

என்று திருவள்ளுவர் இல்லறத்தாரைப் புகழ்ந்து பாடி யுள்ளார். அத்தகைய சிறந்த கிருஹஸ்தராக (இல்லறத் தவர்) அவர் வாழ்க்கை நடத்தி வந்தார்.

தாயனார் சிவபெருமானுடைய பெரும் பக்தர். தம் பக்தியின் பயனாக அவர் இறைவனுக்கு நாள்தோறும்

செந்நெல் அமுதும் செங்கீரையும் மாவடுவும் உணவாகப் படைத்து வழிபட்டு வரலானார். இறைவன்பால் தாம் கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியைப் புலப்படுத்தும் செயலாக அவர் இதைக் கருதினார். தாயனாருடைய பக்தியினால் இறைவன் பெருமகிழ்ச்சியடைந்தார். உலகத்தாருக்கு இச்செயலின் முழுப்பெருமையையும் வெளிப்படுமாறு இறைவன் ஒரு சோதனை செய்ய விரும்பினார். இறைவன் திருவுள்ளம் கருதியவாறு, தாயனாரை வறுமை வாட்டியது. தாயனார் கூலிக்கு நெல்லறுத்துக் கூலியாக செந்நெல் பெற்றார். செந்நெல்லைத் தாம் பயன்படுத்தாமல் தம் உணவுக்காகத் தாழ்ந்த வகையான கார் நெல்லைப் பயன்படுத்தினார். இறைவன் இன்னும் சோதித்தார். எல்லா வயல்களிலும் செந்நெல் மட்டுமே விளைந்தது. ஆனால், தாயனார் செந்நெல்லைத் தமக்காகத் தொடவும் மாட்டார். அவருடைய மனைவியார் அவர்களின் வீட்டுத் தோட்டத்தில் முளைத்த கீரையைச் சமைத்து அவருக்குப் படைத்தார். தாயனார் அதுவே போதும் என்று மனநிறைவு பெற்றவராய் வழக்கம்போல் இறைவனுக்குப் படையல் படைத்து வந்தார். இறைவன் அவருக்கு இன்னும் கடுமையான சோதனைகளைச் செய்தார். கீரையும் தளிர்க்காமல் முற்றிலும் அழிந்துபோகவே உண்பதற்கு எதுவும் கிடைக்கவில்லை. தாயனார் சிறிதும் கவலைப்படவில்லை. அவர் வெறும் தண்ணீரைப் பருகி மகிழ்வுடன் வாழ்ந்தார்; அவருடைய மனம் முழுதும் இறைவழிப்பாட்டுப் பேரானந்தமே நிறைந்திருந்தது; எனவே அவர் பசியையும் உணரவில்லை; தாகத்தையும் உணரவில்லை. இதனால் உடல் இளைத்துப் பலவீனமடைந்த தாயனார் ஒருநாள் இறைவனுக்கு வழக்கமான படையல் வழங்குவதற்காகத் தம் மனைவியார் பின்தொடரச் சென்றார். வழியில் இடறிக் கீழே விழுந்தார். அவர் ஏந்தியிருந்த படையல் நழுவி நிலத்தில் சிதறியது. தாயனார் பெரிதும் தடுமாற்றமடைந்தார். அவர் கதறி அழத் தொடங்கினார். பின்வருமாறு ஓலமிட்டார். 'ஐயனே! தங்களுக்காகக் கொண்டு வந்த உணவு நிலத்தில் சிந்தி விட்டது. இப்படி நிகழ நான் என்ன பெரும் பாவம் செய்தேன்? அருள் கூர்ந்து என்னை

மன்னித்தருளும், தாங்கள் எல்லாம் வல்லவர்; எல்லாம் அறிந்தவர்; எங்கும் நிறைந்தவர் என்பது உண்மை யானுல், தாங்கள் இந்த இடத்திலும் இருக்கவேண்டும். அன்புடன் வந்து இப்படையலை ஏற்றுக்கொள்ளும். தாங்கள் இதை உண்ணவில்லையென்ருல் நான் உயிரை விட்டுவிடுவேன்.' இவ்வாறு சொல்லித் தம் ஊட்டியை அரிவாள் கொண்டு அறுக்கலானுர். எனவே அரிவாள் தாய நாயனுர் என்று பெயர் பெற்ருர்.

சிவபெருமான் அவருடைய பக்தியைக் கண்டு பெரு மகிழ்ச்சியடைந்தார். அவருடைய திருவிளையாடல் முடிந்தது. அவர் உடனே தம் கையை நீட்டித் நாயனு ருடைய கையை இறுகப்பற்றி அவர் தம் தொண்டையை அறுப்பதைத் தடுத்தார். அதேசமயம் மாவடுவைக் கடிக்கும் ஒலியும் கேட்டது. இறைவனுடைய திருவிளை யாடலை அவர் புரிந்து கொண்டு இறைவனுடைய புகழ்களைப்பாடி ஆனந்தக் கூத்தாடினுர். பார்வதி அன்னையுடன் இறைவன் அவருக்குக் காட்சிதந்து நல்லாசிகள் வழங்கிப் பின்வருமாறு கூறினுர். "அன்பரே! நும் பக்தியால் அளவு கடந்த மகிழ்ச்சி யடைந்தோம். நீரும் நும் கற்புடைய மனைவியாரும் விரைவில் சிவபுரம் வந்து மகிழ்வுடன் வாழ்வீராக!"

## 14. ஆனுய நாயனுர்

மழ நாட்டில் (திருச்சி மாவட்டம்) திருமங்கலம் மிகவும் முக்கியமான யாத்திரைத் தலமாகும். இங்கு கோயில் கொண்டுள்ள இறைவன் பெயர் சாமவேதீசு வரர், இந்த இறைவனே, பரசுராமர் தம் அன்னையைக் கொலை செய்த பாவத்திலிருந்து விடுபட்டுப் புனித மடையுமாறு செய்தார்; கோடரியையும் தந்தார்.

இத்தகைய வசீகரம் மிகுந்த இடத்தில் ஆனுயர் என்ற இடையர் இருந்தார். ஆனினங்களைப் பேணி வந்தமை யால் அவர் அப்பெயர் பெற்ருர். இறைவனிடம்

மிகவும் உறுதி வாய்ந்த பக்தர் அவர். திருநீறிடும், சிவனடியார்கள் அவர்கள் எக்குலத்தவராயினும் அவர்களிடம் ஆழ்ந்த பக்தி கொண்டுள்ளவர். இறைவனிடம் அவர் கொண்டிருந்த பக்தியினால் அவர் குழலிசையில் சிவபெருமானுடைய புனித பஞ்சாக்கர மந்திரத்தை இசைத்து வந்தார். இம்மந்திரத்தின் வாயிலாக அவர் இறைவனை உணர்ந்து கொள்ள விரும்பினார்.

ஒருநாள் அவர் கொன்றை மரத்தினடியில் (சிவபெருமானுக்கு மிகவும் பிரியமானது) தம்முடைய தெய்வீக இசைக்கருவியில் இம்மந்திரத்தை இசைத்துக் கொண்டிருந்தார். இந்த இசை பசுக்களையும் கன்றுகளையும் கவர்ந்தது. பறவைகளும் மரங்களில் அமர்ந்தபடியே மௌனமாக அசைவற்றுப் பரவசப்படுத்தும் குழலிசையைக் கேட்டன. இசையின் தாளத்துக்கு ஏற்ப மயில்கள் மகிழ்ச்சியால் தோகை விரித்தாடின. இசைகேட்ட விலங்குகளும் அசையாமல் நின்றன. மான்கள், பாம்புகள், சிங்கங்கள், யானைகள், புலிகள் முதலியனவும் இசைக்குத் தம் மனங்களைப் பறிகொடுத்தன. பாம்பும், மயிலும், சிங்கமும், யானையும் தத்தம் பகைமை தவிர்த்து ஒன்றுபட்டு மகிழ்வுடன் வாழ்ந்தன. ஆறுகள் முன்நோக்கிப் பாயாமல் நின்று விட்டன. கடல் அலைகளும் ஆனாயரின் இசையைக் கேட்பதற்காக அசைவற்று நின்று விட்டன. விண்ணுலகில் வாழ்வோரும் இசை கேட்டு மகிழ (வித்தியாதரர்கள், கின்னரர்கள், தேவர்கள்) விண்ணில் இயங்கும் தேர்களில் வந்திறங்கினர்.

இறைவன் ஆனாயருடைய நேர்மையான பக்தியினால் பெரிதும் மகிழ்ந்தார். குழலிசையின் இனிமையும், பஞ்சாக்கர மந்திரத்தின் பயனும் இறைவன் உள்ளத்தை உருக்கின. அன்னை பார்வதியுடன் இறைவன் நாயனாருக்குக் காட்சி தந்து நல்லாசிகள் வழங்கி கைலைக்கு அழைத்துக்கொண்டார்.

# 15. மூர்த்தி நாயனர்

சிவபெருமானை வழிபடுவதற்காகச் சந்தனக் குழம்பை லிங்கம் முழுவதும் அணிந்து செய்யும் வழிபாடு மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. இத்தகைய வழிபாட்டைச் செய்தவர் மூர்த்தி நாயனர். பாண்டிய நாட்டில் மதுரையில் அவர் பிறந்தார். பிறப்பால் அவர் வைசியர். சிவபெருமானுடைய பெரும் பக்தர் அவர். நாள் தோறும் இறைவனுக்குச் சந்தனக் காப்பு அணிவது அவருடைய வழக்கம்.

அந்நாளில் ஒரு கர்நாடக மன்னன் மதுரையின் மீது படை எடுத்து வந்தான். நடைபெற்ற போரில் பாண்டிய மன்னன் தோல்வியுற்றன். கர்நாடக மன்னன் பாண்டிய நாட்டை ஆளத் தொடங்கினன். அவன் ஜைன சமயத்தவன். அவன் சைவ சமயத்தை வேரறுத்துத் தன்னுடைய சமயத்தைப் பரப்ப விரும்பினன். அவன் சைவர்களைத் துன்புறுத்தத் தொடங்கினன். மூர்த்தி நாயனரும் பல துன்பங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டியிருந்தது. ஆனல் அவர் மனந்தளரவில்லை. அவர் இறைவனுக்குச் சந்தனக் காப்பு வழிபாட்டைத் தொடர்ந்து செய்து வந்தார்.

மூர்த்தி நாயனரைப் பலவந்தமாகச் ஜைன சமயத்துக்கு மாற்றும் மனப்பான்மையுடன், அரசன், மதுரையில் யாருக்கும் சந்தனக்கட்டை கிடைக்காதவாறு செய்தான். இதனல் நாயனர் மிகவும் தடுமாற்றம் அடைந்தார். அவர் இறைவனிடம் பின்வருமாறு முறையிட்டார். ''கருணையங் கடலே! இந்த நாடு ஒரு கொடியவனல் ஆளப்படுகிறது. அவன் தங்களுடைய அடியார்களை அழிக்கத் தீர்மானித்திருக்கிறன். தங்கள் அடியவராகிய ஓர் அரசரை நாங்கள் பெறும் புண்ணியம் எப்போது வாய்க்கும்?'' ஆளும் அரசனுக்கு அஞ்சியும், அவனுடைய பிரியத்தைப் பெறுவதற்காகவும் மக்கள் அவனையே பின்பற்றுவார்கள் என்பது அவருக்குத் தெரியும். எனவே அவர் ஒரு சைவ மன்னனை விரும்பினர்.

அவர் இறை வழிபாட்டுக்காக ஒரு சிறிய சந்தனக் கட்டையாவது கிடைக்காதா என்று நாள் முழுதும் தேடினுர். அவருக்கு எதுவும் கிடைக்கவில்லை. உடைந்த மனத்துடன் அவர் கோயிலுக்குச் சென்ருர். அங்கு அவருக்கு ஓர் அற்புதமான எண்ணம் உதித்தது. சந்தனக்கட்டைக்குப் பதிலாகச் சந்தனக் கல்லில் அவர் தம்முடைய முழங்கையைத் தேய்க்கத் தொடங்கினுர். முழங்கையிலிருந்து இரத்தப் பெருக்கு தாராளமாக ஏற்பட்டது. சிவபெருமான் அவருடைய பக்தியினுல் பெரு மகிழ்ச்சியடைந்தார். அசரீரி பின்வருமாறு கூறியது. "அன்பரே! நும் பக்தியினுல் பெரிதும் மகிழ்ந்தோம். முழங்கையைத் தேய்ப்பதை அருள் கூர்ந்து நிறுத்திக்கொள்ளும். நும் துன்பங்கள் யாவும் முற்றிலும் தணியும். ஆட்சிப் பொறுப்பை அன்புடன் ஏற்றுக்கொள்ளும். நீண்ட காலம் நாட்டை நேர்மையாகவும், விவேகத்துடனும் ஆட்சி செய்த பின்பு நம் சிவபுரத்துக்கு வந்து சேரும்!" நாயனுர் இதைக் கேட்டும், தம்முடைய முழங்கை முன்னைய நிலையை அடையக் கண்டும் பெரும் வியப்படைந்தார்.

மூர்த்தி நாயனுர் ஆட்சியை அடைய விரும்பவில்லை; ஆனுல் அது இறைவனுடைய விருப்பமாக இருந்தது. அன்றிரவு அக் கொடிய அரசன் மாண்டான். அடுத்த நாள், அமைச்சர்கள் தொன்று தொட்டு அங்கு நிலவிய வழக்கத்தின்படி அரசனைத் தேர்ந்தெடுக்கப் பட்டத்து யானையை அனுப்பினர். யானை கோயிலை நோக்கிப் புறப்பட்டது. மூர்த்தி நாயனுர் வழிபாடு செய்வதற்காக அங்கு வந்தார். யானை அவர் முன்னுல் மண்டியிட்டு வணங்கி அவரைத் தம் முதுகில் ஏற்றிக்கொண்டு அரண்மனைக்குத் திரும்பியது.

அமைச்சர்கள் நாயனுரை அரசேற்கும்படி மன்ருடி வேண்டினர். நாயனுர் பின்வரும் நிபந்தனை விதித்தார். "நான் அரசனுல் பகட்டான அபிஷேகம் மேற்கொள்ளமாட்டேன். திருநீற்றினுல்தான் அபிஷேகம் செய்துகொள்வேன். நான் அணியும் அணிகலன் ருத்திராட்சம்தான். என் சடைமுடியே மணிமுடி. அனைவர்

உள்ளங்களிலும் சிவபெருமானுடைய அன்பை அரியாசனம் ஏற்றப்பாடுபடுவேன்.''

அமைச்சர்கள் இந்த நிபந்தனைகளைப் பெரு மகிழ்வுடனும், மன நிறைவுடனும் ஏற்றுக்கொண்டார்கள்.

நாயனார் நீண்ட காலம் நாட்டை நேர்மையுடனும், விவேகத்துடனும் ஆட்சி செய்த பின்னர், முடிவில் சிவபுரத்தை அடைந்தார்.

## 16. முருக நாயனார்

சிவ ஆகமங்களில் சொல்லியுள்ளவாறு மலர்களைக் கொண்டு அருச்சனை செய்வதும், இறைவனுக்கு மலர் மாலைகளை அணிவிப்பதும், பஞ்சாட்சர மந்திரம் ஓதுவதும் சீரிய வழிபாடாகும். யஜுர் வேதத்தின் நடுக் காண்டத்தில் நடுப் பகுதியில் உள்ள திரு ருத்திரத்தின் நடுவில் இடம் பெறுவதால் பஞ்சாட்சர மந்திரம் மகா மந்திரமாகக் கருதப்படுகிறது. இம்மந்திரத்தை ஜெபம் செய்பவர் உடனே பிறப்பு இறப்புப் பிணியிலிருந்து விடுவிக்கப்படுகிறார்.

இவ்வழிபாட்டில் முருகநாயனார் தன்னிகரற்று விளங்கினார். அவர் திருப்புகலூரில் பிறந்தார். அடியார்கள் பலராலும் இத்தலம் புகழ்பெற்று விளங்கியது. நாள்தோறும் அவர் கதிரவன் உதயத்திற்கு மிகவும் முன்னதாகத் துயில் நீத்தெழுந்து, நீராடி, புனிதத் திருநீற்றை நெற்றியில் அணிந்து நித்திய கர்மங்களை முடித்து, தோட்டத்திற்குக் கூடையுடன் செல்வார். பஞ்சாட்சர மந்திரத்தை ஓதியவாறே சிவ ஆகமங்களில் சொல்லியுள்ளவாறு தக்க மலர்களைப் பறித்தெடுத்து, வண்ண மலர் மாலைகளைத் தொடுத்து இறைவனுக்குச் சாத்துவார்.

ஒருநாள் ஞானசம்பந்தப் பெருமான் அங்கு வந்தார். முருகநாயனார் அவரை வரவேற்று வழிபட்டு அவருடைய பேரன்பைப் பெற்றார். சம்பந்தர் அவரைத் தம்முடைய

நெருங்கிய நண்பராகப் பாராட்டினூர். முருக நாயனூர், சம்பந்தருடைய திருமண விழாவுக்குச் சென்று, மண மகளும் ஏனைய அடியார்களும் (முருக நாயனூர் உட்பட) இறைவனுடைய தெய்வீகப் பேரொளியில் ஐக்கிய மாகின்ற நற்பேறு பெற்றூர். எனவே,

"அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

என்று குறள் கூறும் கருத்து மிகவும் பொருத்தமான தாகும். முருக நாயனூருடைய பக்தியால் சம்பந்தருடைய நட்பு அவருக்கு ஏற்பட்டது; அதன் வாயிலாக அவர் இறைவனை அடையும் பேறு பெற்றூர்.

## 17. உருத்திர பசுபதி நாயனூர்

யஜுர் வேதத்தில் ஏழு காண்டங்கள் உள்ளன; இவை சிவபெருமானுடைய சிரமாகக் கருதப்படு கின்றன. யஜுர் வேதத்தின் நடுக் காண்டத்தின் நடுவில் திருஉருத்திரம் அமைந்துள்ளது. அதனை ஓதுவதனுல் மலங்கள் அகன்று முழுத் தூய்மை பெறலாம். அது இறைவனுடைய அற்புதமான உருவங்களை விளக்கு கிறது. ஆற்றில் நின்று இப்புனித வேதத்தை ஓதினுல் தனிச்சிறப்புவாய்ந்த பலன்கள் ஏற்படும் என்று கருதப் படுகிறது; ஓதும் அடியவர் வீடு பேறு அடையச் செய்கிறது.

சிவபெருமானுடைய மிகப்பெரும் பக்தரான உருத்திர பசுபதி நாயனூர் இந்தச் சாதனையைப் பின் பற்றிவந்தார். ஆற்றில் கழுத்தளவு நீரில் நின்று திருஉருத்திரம் ஓதுவது அவருடைய வழக்கம். எனவே இறைவன் திருவருளால் வீடுபேறடையும் நற்பேறு பெற்றூர்.

## 18. திருநாளைப் போவார் நாயனூர்

நந்தனூர், பறையர் (தீண்டாதார்) குலத்தில் பிறந்தார். அவர் சோழ நாட்டில் ஆதனூரில் பிறந்தார்.

அவர் பணிவு, பக்தி என்னும் பண்புகளின் உருவாக விளங்கினார். சிவபெருமான் அவருக்கு ஒரே புகலிடம். அவர் அடிக்கடி தலயாத்திரை மேற்கொண்டு புனித தலங்களுக்குச் செல்வார்; கோயில்களுக்குத் தோலால் அமைந்த முரசங்களையும் பிற இன்னிசைக் கருவிகளையும் வழங்குவார். அவர் கோயில்களுக்கு அருகே செல்லும்போது, எப்போதும் வெளியில் தங்கியிருந்து இறைவனை மனத்தால் வழிபடுவார்.

ஒருமுறை அவர் திருப்புன்கூர் இறைவனைக் கண்ணாரக் கண்டு தரிசனம் செய்து மகிழ விரும்பினார். அங்குள்ள இறைவனுக்கு ஏதேனும் திருப்பணிவிடை செய்யவும் அவர் பேராவல் கொண்டார். அவர் திருப்புன்கூருக்குச் சென்று கோயிலின் முன்னே நின்றார். இறைவன் முன்னால் எப்போதும் வலதுபுறம் இருக்கும் நந்தி இறைவனைக் காணமுடியாதவாறு மறைத்துக் கொண்டிருந்தமையால் அவர் வருத்தமுற்றார். அவர் மிகுந்த கனிவுடன் முறையிட்டார். அவருடைய பக்தியினால் இறைவன் மகிழ்ச்சியுற்று, நந்தனார் தம்மைக் கண்டு தரிசிக்குமாறு, நந்தியை சற்றே விலகச் சொன்னார். இன்றும், திருப்புன்கூரில், நந்தி ஒருபுறம் சாய்ந்து உள்ளது. நந்தனார் இறைவனைத் தரிசித்துப் பெரும் மகிழ்ச்சியுற்றார். கோயிலருகே ஒரு குளத்தைத் தோண்டிய பிறகு ஆதனூருக்குத் திரும்பினார்.

இப்போது அவருடைய உள்ளத்தில் சிதம்பரத்திற்குச் சென்று நடராசப் பெருமானைக் கண்டு தரிசிக்க வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. இறைவன்பால் அவர் கொண்டிருந்த அன்பு வளர்ந்து முதிர்ந்த காரணத்தால் அவர் அன்புக் கண்ணீர் சொரிந்து தம் நண்பர்களிடம் பின்வருமாறு கூறுவார். "நான் நிச்சயம் நாளைக்குச் சிதம்பரத்திற்குச் செல்லுவேன்!" இக்கூற்று அவருக்குத் திருநாளைப் போவார் (நாளைக்குச் செல்பவர்) என்ற பெயரை ஏற்படுத்திற்று. ஒருநாள் அவர் உண்மையாகவே தம் ஊரை விட்டுப் புறப்பட்டுச் சிதம்பரத்திற்குச் சென்றார். அவர் அவ்வூரைச் சுற்றி

வந்தார். தம் பிறப்பை நினைத்து கோயிலுக்குள் அவர் நுழையவில்லை. அவர் பின்வருமாறு முறையிட்டார். "ஆண்டவனே! நாட்டிய சபையில் நீ செய்யும் தெய்வீக நடனத்தை நேரில் காண விரும்புகிறேன். ஆனால் நான் எப்படிக் காணமுடியும்? என்னுடைய தாழ்ந்த குலப் பிறப்பால் என்னைக் கோயிலுக்குள் நுழைய விட மாட்டார்களே!" பல நாட்களாக அவர் இவ்வாறு முறையிட்டுக்கொண்டிருந்தார். அவருடைய பக்தியினால் மகிழ்ச்சியடைந்த இறைவன் அவருடைய கனவில் தோன்றி, "அன்பரே! வருந்த வேண்டாம். நீவிர் என்னருகே வருவீர்! நெருப்பில் குளித்தெழுந்து, அந்தணர்களுடன் என்னுடைய கனக சபைக்கு வருக!" என்று தெரிவித்தார். நந்தனார் விழித்தெழுந்து பெரு மகிழ்ச்சி கொண்டார். அதே நேரம், இறைவன் தில்லை அந்தணர்களின் முன்னும் அவர்களின் கனவில் தோன்றி, "அந்தணர்களே! என் அன்புக்குரிய பக்தர் திருநாளைப் போவார் தில்லைக்கு வந்துள்ளார். புனித வேள்வித் தீ வளர்ப்பீர்களாக! நந்தனார் அதில் குளித்தெழுந்து என்னிடம் வருவார்," என்று தெரிவித்தார்.

அடுத்த நாள் அந்தணர்கள் புனித வேள்வித் தீயை வளர்த்தார்கள். அவர்கள் நந்தனாரை அணுகி அவருடைய கால்களில் பணிந்து கனவைப் பற்றித் தெரிவித்தார்கள். நந்தனார் வேள்வித் தீயை வலம்வந்து இறைவனுடைய திருநாமத்தை உச்சரித்தவராய், இறைவனுடைய பாத தாமரைகளில் தம் மனத்தை நிலை நிறுத்தியவராய் நெருப்பில் பாய்ந்தார். அவர் புனித உடம்புடன், எங்கும் திருநீறு பூசியவராய், பூணூல் அணிந்து விரிசடையுடன் நெருப்பிலிருந்து வெளிப் பட்டார். கோயிலுக்குள் அவரை அழைத்துச் சென்றார்கள். கனகசபையில் அவர் இறைவனை வழிபட்டார். அவர் தெய்வீக ஆனந்தக் களிப்பின் எல்லையை அடைந்து இறைவனுடைய கூத்தைக் கண்டு தம்மை முற்றிலும் மெய்மறந்தார். அங்கு கண் கூசத் தக்க பேரொளி தோன்றியது; நந்தனார் மறைந்தார். அவர் நடராசப் பெருமானுடன் ஒன்றாக ஐக்கியமாகிவிட்டார்.

## 19. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

தொண்டை மண்டலம் செல்வச் செழிப்புமிகுந்த நாடு. அதன் தலைநகரம் காஞ்சிபுரம். இங்கு அன்னை பார்வதியார். சிவபெருமானை ஆகம நெறியின்படி வழி பட்டார். இங்குள்ள இறைவன் பெயர் ஏகாம்பர நாதர்.

இங்கு திருத்தொண்டர் பிறந்தார். அவர் வண்ணார். அவர் சிவபெருமானிடம் திடமான பக்தி கொண்டிருந்தார். அவர் சிவனடியார்களின் தேவைகளை அவர்களுடைய முகக் குறிப்பிலிருந்தே தெரிந்து கொண்டு அவர்களுக்குப் பணிவிடை செய்தார். எனவே திருக்குறிப்புத் தொண்ட நாயனார் என்று பெயர் பெற்றார். சிவனடியார்களின் உடைகளைத் துவைப்பது அவருடைய முக்கியமான பணிவிடையாக இருந்தது. சிவபெருமான் இந்த பக்தருக்கு அருள் வழங்க விரும் பினார். வழக்கம்போல், அதற்கு முன்பு ஒரு கடுமை யான சோதனை இடம் பெற்றது.

ஒரு ஏழை மனிதனுடைய வடிவில், கழுத்தில் உருத் திராட்சம் அணிந்து மேனி முழுதும் திருநீறுடன் அழுக்குமிகுந்த கந்தலாடையுடன் இறைவன் திருத் தொண்டர் முன்னே தோன்றினார். சிவ பக்தரைக் கண்ணில் கண்ட மாத்திரத்தில் நாயனார் பரவசமடைந் தார். அவரை வழிபட்டார். தொண்டர் பின்வருமாறு கூறினார். "தங்கள் வருகையால் என்னுடைய இல்லம் புனிதமடைந்தது. தாங்கள் ஏன் இளைத்துவிட்டீர்கள்? தங்கள் ஆடை அவசியம் துவைக்கப்பட வேண்டும். தங்களுக்கு இந்தப் பணிவிடை செய்ய அருள்கூர்ந்து அனுமதி தாருங்கள்." சிவபக்தர் ஒரு நிபந்தனையின் மேல் இணங்கினார். ஆடையை மாலை நேரத்திற்குள் துவைத்துக் காய வைத்துத் திருப்பித் தரவேண்டும்; இல்லை எனில் அவருடைய மெலிந்த உடம்பு குளிரைத் தாங்க முடியாமல் உயிர் நீங்கிவிடும்.

தொண்டர் பணியை ஏற்றுக்கொண்டபோது நல்ல வெயில் காய்ந்தது. அவர் துணியைத் துவைத்தவுடனே பெருமழை பெய்யத் தொடங்கியது. ஆடை காயக் கூடிய நம்பிக்கைக்குச் சிறிதும் இடம் இல்லை. தொண்டர் பெரிதும் தடுமாறினர். சிவபக்தருக்கு உதவி செய்வதற்குப் பதிலாக அவருக்குப் பெரும் துன்பத்தை விளைத்துவிட்டார். இப்பாவத்தை நினைத்துத் தொண்டர் துவைக்கும் பாறையில் தம் தலையை மோதி முறையிட்டு அழத் தொடங்கினர்.

சிவபெருமான் அவர் முன்னே தோன்றி அவருடைய கையைப் பற்றிக்கொண்டு, 'அன்பரே! நும் நேர்மை யான பக்தியைக் கண்டு மிகவும் மகிழ்ந்தோம். விரைவில் எம் சிவபுரத்திற்கு வந்து என்றென்றும் மகிழ்ச்சியாக வாழ்வீர்!' என்று கூறினர்.

திருக்குறிப்புத் தொண்டர் இறைவனுடைய திரு வடிகளில் விழுந்து பணிந்து பெருமானுடைய புகழ் களைப் பாடினர்.

## 20. சண்டேசுவர நாயனர்

வேதம் ஓதுதல், தவம், சிவபக்தி ஆகியவற்றுல் புகழ்வாய்ந்த திருசேய்ஞ்ஞலூரில் விசாரசருமர் (பின்னர் சண்டேசுவர நாயனர் என்று புகழ் பெற்றவர்) பிறந்தார். அவர் ஒரு மேதை. முற்பிறவி சம்ஸ் காரங்களின் காரணமாக அவர் ஐந்து வயதிலேயே வேதங்களையும் எல்லா ஆகமங்களையும் கற்றுணர்ந்தார். உபநயனத்தின் (புனிதமான பூணூல் அணியும் சடங்கு) பின்னர் அவர் ஒரு குருவின்கீழ் வேதங்களைப் பயின்ருர். ஆனல் சிடரின் விவேகம் குருவுக்குப் பெரும் வியப்பைத் தந்தது. அவர் இப்பிறப்பிலேயே இறுதி முக்தி நிலையை அடைந்துவிட விரும்பினர்.

ஒருநாள் விசாரசருமர் தம் நண்பர்களுடன் சாலை யில் நடந்துபோய்க்கொண்டிருந்தார். அப்போது வழி

யில் ஒரு இடையன் தன்னைக் கொம்பினால் மெதுவாக முட்டிய பசுவைக் கடுமையாக அடித்துத் துன்புறுத்துவதைக் கண்டார். விசாரசருமரால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவர் மனம் மிகவும் நெகிழ்ந்தவராக இடையனிடம், ''அறிவில்லாத மூடனே! பசு தெய்வீகம் வாய்ந்ததும், வணங்கத்தக்கதும் ஆகும் என்று உனக்குத் தெரியாதா? தேவர்களனைவரும் பசுவின் உடலில் குடிகொண்டுள்ளனர். சமயச் சடங்குகள் எல்லாவற்றுக்கும் அதன் உதவி இன்றியமையாதது. பசுக்களை அன்புடன் பேணிக்காப்பது நம் புனிதமான கடமையாகும். பசுவைத் துன்புறுத்துபவன் யாராக இருந்தாலும் நரகத்தில் எறியப்படுகிறான். பசுவை வணங்கி வழிபாடு செய்பவன் விண்ணுலகில் அல்லது சிவபுரத்தில் இடம்பெறுகின்றான். இன்று நீ பெரிய பாவத்தைச் செய்துவிட்டாய், இனிமேல் நீ பசுக்களை மேய்க்கவேண்டாம்; நானே செய்வேன்'' என்று கூறினார். விசாரசருமர் அன்றுமுதல் அப்பணியை மேற்கொண்டார்.

பசுக்கள் நல்ல உடல்நலம் பெற்றன. அவை விசாரசருமரை மிகவும் நேசித்தன. மிகுந்த அளவு பால் பெற்ற அந்தணர்கள் தங்கள் சமயக் கடமைகளை மிகவும் நன்றாக நிறைவேற்ற முடிந்தது; அவர்கள் விசாரசருமர் பற்றி மிகவும் மகிழ்ச்சியடைந்தனர். இப்போதெல்லாம் பால் மிகுந்த அளவு மீந்து நின்றது; எனவே சிவபெருமானிடம் அன்பு செலுத்துவதையும், அவருக்கு வழிபாடு செய்வதையும் எப்போதும் விரும்பும் விசாரசருமர் சிவபெருமானுக்குப் பாலபிடேகம் செய்ய விரும்பினார். ஆற்றின் கரையில் உள்ள ஓர் அத்தி மரத்தினடியில் அமர்ந்து மணலால் கோயில் நிறுவி, மணலால் சிவலிங்கம் அமைத்து வழிபாடு செய்து பாலபிடேகத்தால் லிங்கத்தைப் புனித நீராட்டுவது அவரது வழக்கம். பின்னர் அத்தி மலர்களைக் கொண்டு அருச்சனை செய்வார். பசுக்கள் விசாரசருமருக்கும் அந்தணர்களுக்கும் தாராளமாக மிகுந்த பால் கொடுத்துவந்தன.

ஒரு நாள் விசாரசருமர் இவ்வாறு பூஜை செய்து கொண்டிருந்தபோது அவ்வழியாக வர நேர்ந்த அவ் வூரைச் சேர்ந்த ஒருவன், இவை எல்லாவற்றையும் கவனித்தான். அவன் பசுக்களின் சொந்தக்காரர் களிடம் இதை அறிவித்து விசாரசருமர் மிகவும் விலை மதிப்புள்ள பாலை மண்கட்டி மேலும் ஆற்று மணற் கரையிலும் ஊற்றிவிடுவதாகக் குறை கூறினன். இந்த அந்தணர்கள் உடனே விசாரசருமரின் தந்தையாகிய எச்சதத்தனை வரவழைத்து மிகக் கடுமையான சொற் களால் இந்தப் புகாரைத் தெரிவித்தனர். தந்தை இயற்கையாக அதிர்ச்சியடைந்தார். அவர் இல்லத் திற்குத் திரும்பினர்; ஆனல் விசாரசருமரிடம் எதுவும் பேசவில்லை. உண்மையைத் தாமே கண்டறிய விரும் பினர். எனவே, அடுத்த நாளே விசாரசருமருக்குத் தெரியாமல், அவருக்குப் பின்னல் சற்று தூரத்தில். பின் தொடர்ந்து சென்ருர். விசாரசருமர் முன் முயற்சி மிகுதியும் இன்றி அமைந்த சிவலிங்கத்தின்மீது பாலைச் சொரியத் தொடங்கியதும், மகனுடைய அற்புதமான பக்தியை அறியாமல், தந்தை ஒரு கழியால் அவரை நையப் புடைத்தார். அடிபட்ட வலிகூடச் சிறிதும் உணராத அளவுக்கு மகன் பூஜையில் ஆழ்ந்திருந்தார். இதனல் சினம் இன்னும் மிகுந்த தந்தை பாற்குடத்தைக் காலால் இடறினர். இப்போதுதான் விசாரசருமர் தம் தந்தை தம்முடைய வழிபாட்டில் குறுக்கிட்டதையும் சிவபெருமானுக்குப் பொறுக்க முடியாத குற்றத்தை (சிவ அபராதம்) இழைத்துவிட்டதையும் உணர்ந்தார். உடனே அவர் அருகே கிடந்த ஒரு கோலை எடுத்துத் தந்தையின் கால்மீது வீசினன்; இறைவன் திருவருளால் அது கோடாரியாக மாறியது. மேலும் இறைவன் திருவருளால் தந்தை இறந்தார். விசார சருமருடைய பக்தியின் ஆழத்தைக் காண ஏற்பட்ட சோதனை அது. வழிபாட்டில் அவர் தம்மையும் மறந் திருந்த காரணத்தால் என்ன நிகழ்ந்தது என்பதைக் கவனியாதவராகத் தம் வழிப்பாட்டைத் தொடர்ந்தார்.

சிவபெருமான், விசாரசருமருடைய தீவிரமான பக்தியினல் அளவற்ற மகிழ்ச்சியடைந்து, பார்வதி

அன்னையுடன் அவர் முன்னே காட்சி தந்தார். விசார சருமர் இறைவனுடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தார். சிவபெருமான் விசாரசருமரை ஆரத் தழுவித் தாயன்பு பாராட்டிச் சீராட்டினர். அதே கணத்தில் விசாரசருமர் சிவபெருமானுடைய ரூபம் பெற்ருர். சிவபெருமான் தம் கழுத்தில் இருந்த ஒரு கொன்றை மாலையைக் கழற்றி விசாரசருமருடைய கழுத்தில் அணிவித்தார். அவர் சாரூப்பிய முக்தி (இறைவனுடைய உருவம் பெறும் பேரின்ப வீடாகிய பேறு) பெற்ருர். இறைவன், 'குழந்தாய்! என் பொருட்டு உன் தந்தையின் காலை வெட்டினய். இனி, உனக்குத் தந்தை நாமே! சண்டிகேசுவர பதவியை நீ விரைவில் அடைவாய்! நீ எமக்கு உணவு படைத்தாய்! உடையும் மலர் மாலைகளும் அணிவித்தாய்! இவ்வாறு எம்மை வழிபட்ட நீயும் இவ்வாறே வழிபாடு பெறுவாய்! என்று திருவாய் மலர்ந்தருளினர். இறைவன் மறைந் தார். விசாரசருமரும் சண்டிகேசுவர பதவியை அடைந்தார். இறைவனிடம் மிக உயர்ந்த பக்திபூண் டிருந்த காரணத்தால், தம் தந்தையைக் கொன்ற தால், எந்த ஒரு பாவமும் அவரைச் சேரவில்லை. தந்தையும், இததகைய பெரும் பக்தரால் கொல்லப் பட்ட காரணத்தால் வழிபாட்டில் குறுக்கிட்ட பாவத் தினின்றும் விடுபட்டுச் சிவபுரத்தை அடைந்து நற்பேறு பெற்ருர்.

## 21. திருநாவுக்கரசர் நாயனர்

அப்பர் அல்லது திருநாவுக்கரசர் கி. பி. ஏழாம் நூற்ருண்டில் புகழ்பெற்று விளங்கினர். அவர் சைவ சமய ஆசாரியர் நால்வருள் ஒருவர். (சைவ சமய குரு மார்கள்). திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் அவர் பிறந்தார். அவருடைய தந்தை புகழனர்; தாயார் மாதினியார். அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந் தது; திலகவதி என்று பெயரிட்டனர். சில ஆண்டு களுக்குப் பின் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றனர்; இருளை அல்லது அறியாமையைப் போக்குபவர் என்று பொருள்படும்படி மருள்நீக்கியார் என்று பெயரிட்டனர்.

இளம் பிராயத்திலேயே அவர் சாஸ்திரங்கள் யாவும் கற்றுத் தேர்ந்தார்.

திலகவதியார் பன்னீராண்டு அடைந்தவுடன் கலிப் பகையாருக்கு மணம் முடிக்க நிச்சயம் செய்யப்பட்டது; அவர் பல்லவ மன்னன் படையில் படைத்தலைவராக இருந்தார். திருமணத்திற்கு முன்பு பகையரசனோடு போர்செய்ய அரசனால் அனுப்பப்பட்டார்; போர்களத்தில் அவர் உயிர் துறந்தார்.

புகழனார் கடுமையான நோயுற்று இறந்தார். மாதினியார் சதி என்ற உடன்கட்டை ஏறும் சடங்கைச் செய்து உடன் மடிந்தார். குழந்தைகள் இந்த அதிர்ச்சியிலிருந்து விடுபடும் நிலையில் கலிப்பகையார் இறந்த செய்தி எட்டியது. திருமணம் நிச்சயிக்கப்பட்ட காரணத்தால் திலகவதியார் அவரையே தம் கணவராகக் கருதியிருந்தார்; எனவே தாமும் சதிச் சடங்கை மேற்கொள்ள விரும்பினார். மருள்நீக்கியார் அவரிடம் தற்போது அவரே தமக்குத் தாயார் என்று நினைவூட்டி இறக்க வேண்டாம் என்று மன்றாடினார். அவர் தம் மனத்தை மாற்றிக் கொண்டு வாழ முற்படாவிட்டால் தாம் இறந்து போவதாக அச்சுறுத்தினார். இளவலாகிய தம்பியின் பொருட்டுத் திலகவதியார் தம் மனத்தை மாற்றிக்கொண்டார். அவர் இளமைப் பருவத்தினராக இருந்தும் துறவுக்கோல வாழ்வை மேற்கொண்டார். சிவபெருமானிடம் மிகவும் ஆழ்ந்த பக்தி பூண்டிருந்தார். அவருடைய பெருமை மிக்க துறவு வாழ்வைச் சேக்கிழார், பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரிய புராணத்தில் புகழ்ந்து பாடியுள்ளார். திலகவதியார் அப்பருக்குத் தாயாக இருந்தார்.

மருள்நீக்கியார் இளம் வயதினராயினும் உலகின் நிலையாமையை உணர்ந்து கொண்டார். எல்லா வகையான அறச் செயல்களிலும் ஈடுபட்டார். சிறந்த மதம் எது என்பதைக் கண்டறிந்து அதைப் பின்பற்றவும் ஆர்வம் கொண்டார். சைனசமயத்தைப் பற்றியும் அதன் அற்புதமான அகிம்சைக் கொள்கைபற்றியும்

கேள்வியுற்றார். சமண சமயம் தமக்கு வீடுபேறு அளிக்கும் என்று நம்பி மதம் மாறினார். (தென் ஆற்காடு மாவட்டத்தில் உள்ள) பாடலி புத்திரத்திற்கும் அவர் சென்று அங்கிருந்த சமணப் பள்ளியில் சேர்ந்தார். சமண சமய நூல்கள் யாவும் கற்றுத் தேர்ச்சி பெற்றார்.

தம்பியின் இந்த மாறுதலால் திலகவதியார் மனம் உடைந்தார். தம் ஊரைவிட்டு நீங்கித் திருவதிகை விராட்டனத் தலத்தில் ஒரு மடம் நிறுவி அங்கு தங்கினார். தம் தம்பியைக் காப்பாற்றி அவரிடம் கருணை பொழியுமாறு விராட்டனேசுவரரை மிகுந்த ஆர்வத்துடன் வழிபட்டு வேண்டினார். இறைவன் ஒருநாள் அம்மையாரின் கனவில் தோன்றி, ''குழந்தாய்! என்னை அடையவேண்டும் என்று விரும்பி உன் தம்பி ஏற்கனவே கடுந்தவம் செய்துள்ளான். கொடிய சூலை நோயால் வருந்தச் செய்து நிச்சயம் அவனுடைய மனத்தைமாற்றி என் அடியவர் கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளுவேன்!'' என்று தெரிவித்தார்.

மருள்நீக்கியார் கொடிய சூலை நோய்க்கு ஆளானார். அவரால் வலியைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. சமணர் தம்மால் முடிந்த அனைத்தும் செய்துபார்த்தனர்; ஆனால் நோய் தணியவில்லை. தம் கண்ணைத் திறந்து விடும் ஓர் அனுபவமாக அவர் தம் உள்ளுணர்வால் உணர்ந்தார். சமண சமய நம்பிக்கையை அவர் இழந்தார். தம் தமக்கையை அவர் நினைத்தார். சமண சமயக் கோலத்தை அவர் உதறி எறிந்தார்; யாருக்கும் தெரிவிக்காமலே அவர் தம் தமக்கையிடம் வந்து சேர்ந்தார். அம்மையாரின் திருவடிகளில் பணிந்து தம்மைக் காப்பாற்றுமாறு வேண்டினார். இறைவன் திருவிளையாடலே இது என்றறிந்த அம்மையார், சிவபெருமான் திருவருளால் அவர் விரைவில் குணமடைவார் என்று கூறினார். தம்பியின் நெற்றியில் திருநீறு பூசி பஞ்சாட்சர மந்திரம் உச்சரித்தார். தம்பியின் அறியாமை அகன்றது. அம்மையார் அவரை விராட்டனேசுவரர் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். தம்பி இறைவனை வணங்கித் திருப்பாடல் பாடினார்!

எம்பெருமானே! நான் தங்களையும் தங்கள் மதத்தையும் இகழ்ந்தேன், கொடுமை பல செய்தேன். ஒரு முறை கோதாவரியின் கரையில் சாதுக்களிடம் வாக்குவாதம் செய்து சமண சமயத்தின் உயர்வை நிலை நாட்டினேன். இக் குற்றங்களால் கூற்றுவனே சூலை நோய் வடிவில்வந்து சித்திரவதை செய்கிறான், ஆண்டவனே! தாங்களே என் ஒரே புகலிடம் என்னைக் காப்பாற்றுங்கள். தங்கள் தாமரை போன்ற திருவடிகளை எப்போதும் என் இதயத்தில் வைத்துப் போற்றுவேன்!'' அவர் பாடலை முடிக்கும்போது நோய் மறைந்து விட்டது. ஆசரீரி, ''இன்று முதல் சொல்லுக்கு அரசர் என்று பொருள்பட நீ திருநாவுக்கரசர் என்று அழைக்கப்படுவாய். உன் புகழ் எங்கும் பரவும்.'' என்று ஒலித்தது. இவ்வாறு சிவபெருமானுடைய திருவருளால் அவர் சைவ சமய நம்பிக்கையைத் திரும்பவும் பெற்றார்.

திலகவதியார் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார். திருநாவுக்கரசர் சிவபெருமானுடைய திடபக்தராகிப் பஞ்சாட்சர மந்திரம் உச்சரித்துக்கொண்டு இறைவன் பேரின்பத்தில் திளைத்தார்.

பாடலிபுத்திரத்தில் இருந்த சமணர்கள், திருநாவுக்கரசர் (அவர்களிட்ட பெயர் தருமசேனர்) உற்ற நோயை அவர்களால் தீர்க்க முடியவில்லை என்றும், அதனால் அவர் அவர்களை விட்டு நீங்கிச் சைவ சமயத்துக்குத் திரும்பினார் என்றும் அரசன் அறிய நேர்ந்தால் தங்களைத் தண்டிப்பான் என்று கருதி அஞ்சினர். எனவே அவர்கள் ஒரு புதிய கதையைக் கற்பித்து, திருநாவுக்கரசர் அரசனுக்கும், அரச மதமாகிய சமணத்துக்கும் எதிராகச் சதி செய்தார் என்று காட்டினர். அரசன், திருநாவுக்கரசரைத் தன் முன்னால் கொண்டுவந்து நிறுத்துமாறு தன் அமைச்சர்களிடம் கட்டளையிட்டான். அவர்கள் ஒரு படையுடன் திருவதிகை நோக்கிச் சென்றனர். தம்மீது சாட்டப்பட்டுள்ள குற்றச்சாட்டைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசர், ''அமைச்சர்காள்! நும் அரசனுடைய குடியல்லோம், நாம்! எல்லா உயிர்களையும் காக்கின்றவனும், பாவங்கள் எல்லாவற்றையும் போக்குகின்றவனும், தேவர்களுக்கெல்லாம் தேவனும்,

இறவாமை நல்கி என்றென்றும் பேரின்பத்தில் வாழச் செய்பவனும் ஆகிய சிவபெருமானுக்கே நாம் ஆளானேம், அரசனுக்குக் கீழ்ப்படியாமை என்ற குற்றம் மற்ற மக்களைச் சாரலாம்; என்னைச் சாராது; நான் இறைவனுடைய பாதுகாப்பில் இருப்பவன். தன் பக்தனைக் காப்பாற்றுவதற்காக எமனையே உதைத் தருளியவருடைய பாதுகாப்பில் யாம் இருப்பதனல், அஞ்சுவது எதுவுமில்லை,'' என்று கூறினர். அமைச்சர் கள் அவருடைய பெருமையை உணர்ந்துகொண்டார் கள்; ஆனல் அவர் இல்லாமல் திரும்பிச்செல்ல அஞ்சினர். எனவே அவர்கள், அவர் தங்களுடன் வரவேண்டும் என்று மன்ருடி இறைஞ்சினர்; தம்முடைய மிக உயர்ந்த கருணை காரணமாகவும், சைவ சமயத்தின் பெருமையை நிலைநாட்டுவதற்காகவும் திருநாவுக்கரசர் அவர்களுடன் சென்ருர்.

திருநாவுக்கரசரைப் பார்த்த மாத்திரத்திலே அரசனு டைய சினம் பெருகியது; அவருக்குத் தரப்படவேண்டிய தண்டனை யாது என்று முடிவு செய்யுமாறு அவன் சமண சமய குருமார்களைக் கேட்டான். கொதிக்கின்ற சுண்ணும்பு நீற்றறையில் அவரை எறியவேண்டும் என்று அவர்கள் கருத்துத் தெரிவித்தனர். அதன்படி அவர் நீற்றறையில் ஏழுநாள் சிறை வைக்கப்பட்டார். அவர் தம்முடைய மனத்தை இறைவன்பால் பதித்தும் இறை வனுடையே திருநாமத்தையே ஜெபித்துக்கொண்டிருந் தார். இறைவன் திருவருளால் நீற்றறையின் வெப்பம் குளிர்ச்சி மிகுந்த தென்றலாக மாறியது. ஏழு நாட்கள் முடிவுற்ற பின்பு, திருநாவுக்கரசர் உயிருடன் இருப் பதையும், தியானத்தில் மெய்மறந்திருப்பதையும் கண்டு சமணர் பெரும் வியப்படைந்தனர். அவர் சமண சமயத்தில் இருந்தபோது பெற்ற சக்தியால்தான் இவ்வாறு இருப்பதாகக்கூறி அரசனிடம் அவருக்கு நஞ்சூட்டுமாறு தெரிவித்தனர். மீண்டும், சிவபெருமானு டைய திருவருளால் நஞ்சு, அமிழ்தமாக மாறியது. திருநாவுக்கரசர் அவர்களிடம் இருந்தபோது கற்றுக் கொண்ட சமண மந்திரங்களின் நலத்தால் அவர் தீங்கற் றிருப்பதாகத் தெரிவித்து அவரை யானையின் காலில்

மிதியுண்ணுமாறு செய்யும்படி அரசனிடம் ஆலோசனை கூறினர். திருநாவுக்கரசர் மிகுந்த துணிவுடன் யானையை எதிரேற்று இறைவன் புகழ் பற்றிப் பாடல் பாடினர். திருநாவுக்கரசருடைய அன்பு நோக்கு யானையின் இயல்பை மாற்றிவிட்டது; அது அவரை வலம் வந்து அவர் முன்னல் பணிந்து வணங்கியது. மாவுத்தர்கள் அதைத் தூண்டிவிட்டார்கள்; ஆனால் அது சினமுற்று மாவுத்தர்களையும் சமணர்களையும் தாக்கிச் சிலரைக் கொன்றுவிட்டது. உயிர் தப்பிப்பிழைத்தவர்கள் ஓடிச் சென்று அரசனுடைய காலடியில் வீழ்ந்தனர். இது பெருத்த அவமானமாகிவிட்டது.

அரசன் மிகவும் கவலை கொண்டான், திருநாவுக்கரசரை கல்லில் பிணித்துக் கடலில் எறியுமாறு சமணர், அரசனிடம் முடிவில் யோசனை கூறினர். இதன்படியே அரசனுடைய ஆணைப்படி நிறைவேற்றப்பட்டது. திருநாவுக்கரசர் சிவபெருமான் மீது மனத்தைப் பதித்துப் பஞ்சாக்ஷர மந்திரத்தை தொடர்ந்து உச்சரித்துக் கொண்டிருந்தார். பஞ்சாக்ஷரத்தின் பெருமைகளைப் புகழ்ந்து நமச்சிவாயப் பதிகம் பாடினர். இறுதிப் பாடலை முடித்தவுடனே கல்லானது தெப்பம்போல் மிதக்கத் தொடங்கியது. திருநாவுக்கரசர் கல்லில் அமர்ந்திருந்தார்; அவருக்கு மகிழ்ச்சியையூட்டியவாறு அலைகள் அவரை சுமந்துகொண்டு திருப்பாதிரிப்புலியூர்க் கரையில் கொண்டுவந்து சுகமாகச் சேர்த்தன. இவ்வாறு இறைவன் தம்முடைய பக்தரைக் காப்பாற்றினர்.

திருப்பாதிரிப்புலியூரில் சிவபக்தர்களின் பெருங் கூட்டம் அவரை நல்வரவேற்கக் காத்திருந்தது. அவர் இறைவனை வழிபட்டுப் புகழ்ப் பாடல்கள் பாடினர். "எம்பெருமானே! தோன்றுத் துணையே! தாங்களே என் தலைவர்; புகலிடம்? எனக்கு ஈன்ருளுமாய், எந்தையுமாய், உடன் தோன்றினராய், எனக்கு எல்லாமாகவும் இருக்கிறீர்கள். கருணையங்கடலே! எல்லா ஆபத்துக்களிலிருந்தும் என்னைக் காப்பாற்றினீர்கள்! தங்கள் கருணையாலும், அன்பாலும் தான் நான் உயிர் பிழைத்திருக்கின்றேன்" என்று போற்றினர். அவர்

தம் மனத்தை நோக்கி, "நெஞ்சே! அஞ்சல்! நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையை முழுதும் சரணாக அடைந்த பின், எதற்கு அஞ்சவேண்டும்?" மண் பாதலம்புக்கு மால் கடல் மூடிமற் றேழுலகும், விண்பால் திசை கெட்டிரு சுடர் வீழினும், நெஞ்சே! அஞ்சல்!" என்று உறுதி கூறினார். மீண்டும் இறைவனிடம், கருணைத் தெய்வமே! பிறவா வரம் வேண்டுகின்றேன். முன்வினைப் பயனாகப் பிறக்க நேர்ந்தால் உன் நாமத்தை என்றும் மறவா வரம் தருவாய்! "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா: உன்னடி யென்மனத்தே வழுவாதிருக்க வரந் தர வேண்டும்!" "திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறு அணிந்து மகிழும்பேறு என்றென்றும் அருள் வாய்!" என்று வேண்டினார்.

பின்னர், திருநாவுக்கரசர் திருவதிகைக்குத் திரும் பினார்; வழியில் புனித தலங்கள் பலவற்றையும் வழி பட்டார். அவருக்குக் கொடிய தண்டனைகளை விதித்துத் துன்புறுத்திய பல்லவ மன்னன் இதைப்பற்றி அறிந்து கொண்டபோது, அவரிடம் தான் கண்ட பல அற்புதங் களையும் நினைவுகூர்ந்து சைவ சமயத்தின் உயர்வை மனத்தில் ஒப்புக்கொண்டான். அவன் திருவதிகை சென்று திருநாவுக்கரசரின் காலடியில் விழுந்து பணிந்து தன்னை மன்னித்தருளுமாறு வேண்டினான். திருநாவுக் கரசர் மிகுந்த நேசத்தோடும், பாசத்தோடும் அரசனைத் தழுவிக் கொண்டார். அரசன் சைவ சமயத்தைத் தழுவினான்; திருவதிகையில் குணபரவீச்சுரம் என்ற பெயர் கொண்ட சிவபெருமான் கோயிலை மிகப் பெரிய அளவில் கட்டி முடித்தான்.

திருநாவுக்கரசர் இறைவனை வழிபடுவதிலும், பல் வேறு வகையான தொண்டுகளை இறைவனுக்குச் செய் வதிலும் தம் வாழ் நாட்களைக் கழித்தார. அடியார் களுக்கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினார். உலகில் ஆன்மீக விழிப்பிலிருந்து சிறிது நழுவினாலும் மாயைக்கு இரையாக நேரிடும் என்று அவர்களுக்கு எச்சரிக்கை செய்தார். மற்றவர்களுக்கு வழி காட்டும் முறையில் அடியார்கள் எளிய பணிவுள்ள பக்தன்

வாழ்வை இலட்சிய வாழ்வாக மேற்கொள்ளுமாறு அவர் அறிவித்தார். புனித தலங்கள் பலவற்றுக்கும் சென்று வழிபட்டுத் தலயாத்திரையின் பெருமையை அவர் வலியுறுத்தினர்.

சமணர்களுடன் சில காலம் தங்கியிருந்து அவர்களுடைய உணவை உண்டு அவர்களுடன் கலந்து பழகிய நினைவு திருநாவுக்கரசர் தம் உடம்பு இன்னும் தூய்மை அடையவில்லை என்றும் சிவபெருமானை அதனால் வழிபடல் தகாதென்றும் எண்ணச் செய்தது. சிவபெருமானிடம், "தூய்மையற்ற இவ்வுடலில் இனியும் அடியேன் வாழ விரும்பவில்லை. தங்கள் திரிசூல முத்திரையும் இடப முத்திரையும் என் உடம்பில் இட்டால் தங்களை வழிபடும் தகுதியை என் உடம்பு பெற்றதாகக் கருதுவேன்! என்று முறையிட்டார். உடனே சிவபெருமானுடைய பூதகணங்களில் ஒன்று யாரும் அறியாமல் திருநாவுக்கரசரை அணுகிச் சிவபெருமானுடைய திரிசூலம், நந்தி ஆகிய இலச்சிணங்களை (அது ஆகமங்களின்படிச் செய்யும் சைவ சமய தீக்ஷைக்கான சடங்குகளில் ஒன்று) அவருடைய தோள்களில் பொறித்தது. உடனே அவர் மிக உயர்ந்த பேரின்ப அனுபவம் அடைந்தார்.

பின்னர் திருநாவுக்கரசர் சிதம்பரத்திற்குச் சென்றார். கோயிலின் கோபுரத் தோற்றம் கண்ணில் பட்டவுடனே பரவசமடைந்தார். உணர்ச்சிமிக்க பாடல்களைப் பாடி அவர் வழிபட்டார். "தங்களுக்குப் பணிவிடை செய்வேனாக. சிவபக்தர்கள் வேண்டுவதும் ஒன்றில்லை; அஞ்சுவதும் இல்லை; எமனும் அவர்களை அணுகத் துணியான். பாவம் எதுவும் அணுக முடியாத தங்கள் சிவபுரத்திற்கு நான் வந்துவிட்டேன். தங்கள் அடைக்கலம். அடியேன்! தங்கள் தாமரை மலரடிகள் என் நெஞ்சில் கோயில் கொண்டன" என்று தெரிவித்தார்.

சிதம்பரத்தில் இருந்தபோது அவர் திருஞானசம்பந்தரின் பெருமையையும் பார்வதி அன்னையார்

அவருக்குச் செய்த அருட்செயலையும் கேள்வியுற்றார். சீர்காழியில் இருந்த அப்பெருந்தகை அடியவரைக் காணப் பெரும் ஆவல் கொண்டார். சீர்காழியை நோக்கித் திருநாவுக்கரசர் வந்துகொண்டிருக்கையில், சம்பந்தரும் அவரைச் சந்திக்க மகிழ்ச்சியுடன், ஆவலுடன் சந்திப்பை எதிர்நோக்கியிருந்தார். சீர்காழி எல்லையைத் திருநாவுக்கரசர் அடைந்தபோது சம்பந்தர் அவரை வரவேற்க முன்னே சென்றார். இருவரும் ஒருவர் காலடியில் ஒருவர் விழுந்து பணிந்து அடியார்களின் பண்புக்கு எடுத்துக்காட்டாக விளங்கினர். இறைவன் கோயிலுக்குச் சென்று இருவரும் வழிபட்டனர். சம்பந்தரின் வேண்டுகோளுக்கிணங்கித் திருநாவுக்கரசர் ஒரு பதிகம் பாடினார். "உலகனைத்தும் பிரளய காலத்தில் மூழ்கிவிட்டபோது தோணியப்பர் இடது பாகத்தில் உமையன்னையுடன் பிரணவ (ஓம்) ஓடத்தில் எல்லாப் பக்கங்களிலும் பறவைகளின் வடிவில் தேவர்கள் சூழ்ந்திருக்க, வீற்றிருந்தார்" என்று தெரிவித்தார். இன்றும் தோணியப்பரின் கோயில் படகு வடிவில் உள்ளது. இறைவனுடைய திருவடிகளைப் பற்றினோர் பாதுகாக்கப் படுகிறார்கள்.

சம்பந்தருடன் திருநாவுக்கரசர் திருக்கோலக்கா கோயிலுக்குச் சென்றார். சம்பந்தரிடம் விடை பெற்றுக்கொண்டு அவருடைய ஆசிரமத்தை விட்டுப் புறப்பட்டு வழியில் பல தலங்களையும் வழிபட்டுத் திருவாவடுதுறையை அடைந்தார். உறுதியான வைராக்கியத்தைப் புலப்படுத்தும் பதிகம் பாடினார். "எம்பெருமானே! பிறப்பு, இறப்பு என்னும் சக்கரத்தில் அகப்பட்டுக்கொண்டேன். இதனால் நான் களைத்துப் போய்விட்டேன். அதிலிருந்து விடுபட எனக்கொரு வழியைக்காட்டுங்கள்" என்று முறையிட்டார்.

பின்னர் அவர் சக்திமுற்றத்திற்கு வந்தார். இறைவனிடம், "எம்பெருமானே! நான் இவ்வுடலை விட்டு நீங்கும் முன்னே தங்கள் பாத தாமரைகளை என் முடிமீது பதியுங்கள்" என்று வேண்டினார். இறைவன், "திருநல்லூருக்கு வருக! அங்கு நும் விருப்பத்தை

நிறைவேற்றுவோம்'' என்று கூறினர். அவ்வாறே திருநாவுக்கரசர் திருநல்லூருக்குச் சென்று இறைவனை வழிபட்டார்; இறைவன் தம் பாதங்களை அப்பரின் முடி மீது பதித்தார். அவர், ''பெருமானே! மண்ணுலக மாந்தரும் விண்ணுலகத் தேவரும் தங்கள் புனித பாதங்களை வணங்குகின்றனர். பெருந் தவ முனிவர்களும் அவர்கள் பக்தியில் கறை சிறிதேனும் இருப்பின், தங்கள் திருப்பாதங்களைத் தொடவும் முடியாது. ஆனால் நம்பிக்கையோடும் பக்தியோடும் தங்களுக்குப் பணிவிடை செய்யும் உண்மையான பக்தர்களுக்கு அவை மிகவும் எளிதில் கிடைக்கின்றன. பாமர மக்கள் தங்கள் தெய்வீகப் பாதங்களின் புனிதப் பணியை அறியார். அமரத்துவத்தையும் அனைத்துச் செல்வங்களையும் அவை வழங்குவனவாகும்'' என்று மகிழ்ச்சியுடன் பாடினர்.

மேலும் பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருநாவுக்கரசர் திங்களூருக்கு வந்தார். அங்கு அவர் ஒரு அற்புதம் நிகழ்த்தி அடியார் அப்பூதி அடிகளின் செல்வனை உயிர்ப்பித்தார்; அப்பூதி அடிகளின் வரலாற்றில் நாம் இந்தச் செய்தியைக் காண்போம்.

திருவாரூரில் சிவ பக்தர்கள் அவருக்குப் பலத்த வரவேற்பு வழங்கினர். அவர் அங்கு இறைவனுடைய காட்சிபெற்று மகிழ்ந்தார். அவருடைய உள்ளம் பக்தியால் நிறைந்து ததும்பியது. அவர் அன்புக் கண்ணீர் சொரிந்தார். ஆனந்தக் கூத்தாடினர். பேரின்பத்தில் மூழ்கினர். சமண சமயத்தைச் சார்ந்த தம் தவற்றைக் குறித்து வருத்தம் தெரிவிக்கும் பாடல்களைப் பாடினர். சைவ சமயத்திலேயே இருந்திருந்தால் நீண்ட நாட்களுக்கு முன்பே இறைவனுடைய காட்சி தமக்கு கிடைத்திருக்கும் என்று உணர்ந்தார். இத்தலத்தில் நமிநந்தி அடிகள் விளக்கெரிக்க எண்ணெய் கிடைக்காத காரணத்தால் தண்ணீரால் விளக்கெரித்தார்; அவருடைய பெருமையையும் நேர்மையான பக்தியையும் புகழ்ந்து பதிகம் பாடினர்.

பின்னர் திருநாவுக்கரசர் வழியில் பல தலங்களையும் வழிபட்டுத் திருபுகலூரைச் சென்றடைந்தார். திருஞானசம்பந்தரும் அங்கு இருந்தார். அடியார்களாகிய அவ்விருவரும் இரண்டாம் முறையாக ஒருவரையொருவர் சந்தித்தனர். அப்பரின் வேண்டுகோளின் படி ஞானசம்பந்தர் திருவாரூருக்குச் சென்று இறைவனுடைய தரிசனம் பெற்றார். அடியார்களாகிய அவ்விருவரும் திருப்புகலூரில் சிலகாலம் தங்கியிருந்தார்கள்; இந்தப் பொன்னான வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு வேறுபல அடியார்கள் ஒருங்கிருந்த இவ்விருபெரும் ஆசாரியர்களை (ஆன்மீக ஆசிரியர்கள்) நேரில் தரிசித்து மகிழ்ந்தனர். திருநீலநக்கர், சிறுத்தொண்டர், முருக நாயனார் மற்றும் பலரும் திருப்புகலூருக்கு வந்து தங்கினர்; இருபெரும் ஆசாரியர்கள் தங்கியிருந்த இடம் தெய்வீக உலகமாக மாறியது.

பின்னர் அடியார்கள் இருவரும் திருவீழிமிழலைக்குச் சென்றனர். அச்சமயம் அங்கு பஞ்சம் தாண்டவமாடியது. அப்பரும் (திருநாவுக்கரசரின் மற்றொரு பெயர்) சம்பந்தரும் மக்களின் துன்பங்களைக் கண்டு மிகவும் மனம் நெகிழ்ந்து, இறைவனிடம், உதவி செய்யுமாறு முறையிட்டனர். அவ்விருவருக்கும் தனித்தனியே ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பொற்காசு வழங்குவதாகவும் அதைக்கொண்டு அவர்கள் மக்களுக்கு உணவு வழங்கலாம் என்றும் இறைவன் வாக்களித்தார். சிவபெருமான், கோயிலின் மேற்கு வாசலில் ஒரு பொற்காசும், கிழக்கு வாசலில் ஒரு பொற்காசும் வைத்தார். அடியார்கள் இருவரும் படிக்காசுகள் பெற்று மக்களின் பசித்துன்பத்தைப் போக்கினார்கள். பஞ்சம் உடனே முடிந்தது. அடியார்கள் இருவரும் இறைவனுடைய புகழைப் புகழ்ந்து பாடி அத்தலத்தை விட்டுப் புறப்பட்டனர்.

பின்னர் இருவரும் தற்காலத்தில் வேதாரண்யம் என்று சொல்லப்படும் திருமறைக்காட்டுக்கு வந்தனர். பழங்காலத்தில் வேதங்களே இறைவனை அங்கு வந்து வழிபடுவது வழக்கம். மக்கள் வேதம் ஓதும் பழக்கத்தை

தவிர்த்தபோது, இது நின்றுவிட்டது. அன்று முதல், வேதங்கள் வழக்கமாக நுழைந்த கோயிலின் வாசல் கதவு அடைக்கப்பட்டுவிட்டது. அங்கிருந்த பிறிதொரு கதவின் வழியாகவே மக்கள் சென்று வழிபட்டனர். அப்பரும் சம்பந்தரும் அங்கு வந்தபோது இதைக் கேள்வியுற்றனர். அடைக்கப்பட்டிருந்த கதவின் வழியாகச் செல்ல வேண்டுமென்று சம்பந்தர் விரும்பினார். கதவு திறக்க பாடுமாறு சம்பந்தர் அப்பரை வேண்டினார். இறைவன் திருவருளால் கதவுகள் தாமாகத் திறந்துகொண்டன. உள்ளே சென்று அவர்கள் இறைவனை வழிபட்டனர். அவர்கள் வாசலருகே திரும்பி வந்தபோது கதவு அடைத்துக்கொள்ளும்படியாகப் பாடுமாறு அப்பர் சம்பந்தரை வேண்டினார். சம்பந்தர் பாடியதும் கதவு மீண்டும் அடைத்துக்கொண்டது. ஒருநாள் சிவபெருமான் அப்பரின் கனவில் தோன்றி திருவாய்மூருக்கு வருமாறு கட்டளையிட்டார். இறைவன் அவர் முன்னால் தோன்றி நடந்து சென்றார். அப்பர் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்; ஆனால் நெருங்க முடியவில்லை. உடனே இறைவன் அங்குள்ள கோயிலுக்குள் நுழைந்து மறைந்துவிட்டார். அப்பர் கோயிலுக்குள் சென்றார்; ஆனால் இறைவனைக் காணவில்லை. அப்பர் இவ்வாறு சென்றதை அறிந்த சம்பந்தர், தாமும் பின் தொடர்ந்து கோயிலுக்கு வந்து சேர்ந்தார். அப்பர் சம்பந்தருக்குக் காட்சி கொடுத்தருளுமாறு இறைவனிடம் வேண்டினார். அவருடைய விருப்பத்தை இறைவன் நிறைவேற்றினார். பின்னர் அவர்கள் திருவாய்மூருக்குச் சென்று அங்கிருந்து திருமறைக் காட்டுக்குத் திரும்பி வந்தனர்.

பாண்டி நாட்டு மன்னனின் அரசி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறை நாயனாரும் சம்பந்தரிடம் சிலரை அனுப்பி, மதுரையில் சமணர் தீங்கு நெறி பரப்புவதை முறையிட்டு, உடனே சம்பந்தர் வருகை தர வேண்டுமென்று விருப்பந் தெரிவித்தனர், சம்பந்தர் உடனே செல்ல விரும்பினார். இடையே, அப்பர் சமணரால் தமக்கு நேர்ந்த அனுபவங்களையெல்லாம் எடுத்துச் சொல்லிச் சம்பந்தர் போகவேண்டாம் என்று,

தடுத்து நிறுத்த முயன்றார். ஆனால் அதையும் கடந்து செல்லும் அளவுக்குச் சம்பந்தர் இறைவனுக்குப் பணி செய்யக் கொண்டிருந்த வேட்கை இருந்தது.

திருநாவுக்கரசர் பிறகு, திருவாவடுதுறையை வழிபட்டுப் பழையாறைக்கு வந்து சேர்ந்தார். இங்கு அவர் வடதளி கோயிலுக்கு வெளியில் இருந்தவாறே இறைவனை வழிபட்டார். சமணர்கள் இதைச் சமண ஆலயமாக மாற்றி அங்கிருந்த சிவலிங்கத்தை யாரும் அறியாத ஓரிடத்தில் மறைத்துவிட்டதாக அப்பர் அறிந்தார். அவர் இறைவனிடம், 'பெருமானே! சமணர் இங்கிருந்து நீக்கி, யாரும் அறியாத இடத்தில் வைத்துள்ள தங்கள் உருவத்தைக் கண்டு வழிபடாமல் நான் இந்த இடத்தைவிட்டு ஓரடியும் எடுத்து வைக்க மாட்டேன்' என்று முறையிட்டார். இறைவன் அரசனுடைய கனவில் தோன்றி, "மன்னா! என் பக்தர் திருநாவுக்கரசர் என் காட்சியைக் காண வேண்டுமென்று உணவையும் துறந்து காத்திருக்கின்றார். உடனே சென்று சமணரை விரட்டித் திருநாவுக்கரசர் கோயிலுக்குள் நுழைந்து என் காட்சியைக் காணுமாறு செய்" என்று பணித்தார்; சிவலிங்கம் மறைத்து வைக்கப்பட்டுள்ள இடத்தையும் அரசனுக்குத் தெரிவித்தார்.

அரசன் விழித்தெழுந்து அமைச்சர்களை உடனே வரவழைத்தான். அவன் கோயிலுக்குச் சென்று சமணரை விரட்டித் திருநாவுக்கரசரின் கால்களில் விழுந்து பணிந்தான். அக்கோயில் மீண்டும் சிவபெருமானின் கோயிலாக மாற்றப்பட்டு, மீண்டும் சிவலிங்கம் நிலை நாட்டப்பட்டது. திருநாவுக்கரசர் இறைவனை வழிபட்டு மகிழ்ந்தார்.

மற்றொரு தலயாத்திரையின்போது திருப்பைஞ்ஞீலியை அணுகும் தருவாயில் திருநாவுக்கரசர் பசித்துன்பத்தை உணர்ந்தார். சிவபெருமான் அவருடைய பசியையும் தாகத்தையும் தணிக்க விரும்பினார். வழியில் குளமும் பூந்தோட்டமும் தோற்றுவித்தார்;

திருநாவுக்கரசர் தாகம் தணித்துக்கொண்டு நிழலில் ஓய்வுகொள்ளச் செய்தார். இறைவன் தாமே ஓர் அந்தணர் கோலந்தாங்கி வந்து காத்திருந்து கையில் பொதி சோறு வைத்திருந்து, திருநாவுக்கரசர் அங்கு வந்தவுடனே அவருக்கு வழங்கினர். அப்பர் அந்த உணவை உண்டு, தண்ணீர் பருகி ஓய்வு கொண்டார். அவர் எங்கு சென்றுக்கொண்டிருக்கிறர் என்று அந்தணர் வினவினர். அவர், தாம் திருப்பைஞ்ஞீலிக்குச் செல்வதாகத் தெரிவித்தார். இருவரும் நடக்கத் தொடங்கினர்கள். ஊரை நெருங்கியதும் அந்தணர் திடீரென்று மறைந்துவிட்டார். அப்படி வந்தவர் இறைவனே, வேறு யாருமில்லை என்று அப்பர் தெரிந்து கொண்டார். முன்னதாகவே அவரைப் புரிந்து கொள்ளாமைக்கு வருந்தித் தேம்பித் தேம்பி அழுது அவரைப் பிரிந்தமைக்காக நிலத்தில் புரண்டு வருந்தினர்.

திருவண்ணமலை, காஞ்சீபுரம் முதலிய தலங்களை வழிபட்டுத் திருநாவுக்கரசர் காளஹஸ்திக்கு வந்து கண்ணப்பரின் புகழ்களைப் பற்றிப் பாடினர். பின்னர் கைலாசத்திற்குச் செல்ல வேண்டும் என்று விரும்பினர். காசிக்குச் சென்று விசுவநாதப் பெருமானை வழிபட்டார். வடக்கு நோக்கிச் சென்று கொடிய விலங்குகள் வாழும் அடர்ந்த காடுகள் பலவற்றைக் கடந்தார். இரவுப் பகலும் நடந்தார். பாதங்கள் புண்பட்டன. பின்னர் தம் கைகளால் தவழ்ந்து ஊர்ந்தார். முழங்கைகளில் இரத்தப்பெருக்கு ஏற்பட்டது. பின்னர் நிலத்தில் படுத்தவாறு மார்பினல் ஊர்ந்தார். மார்பிலும் இரத்தப் பெருக்கு எடுத்தது; விலா எலும்புகளும் முறியத் தொடங்கின. இதன் பின்னும் அப்பர் சிறிதும் சளைக் காமல் கைலாச யாத்திரையைத் தொடர்ந்தார்; நிலத்தில் உருண்டு புரண்டவாறு சென்றார். அப்பர் கைலாசத்திற்குச் செல்ல விரும்பினர்; ஆனல் இறை வனே அவர் இன்னும் பல்லாண்டு நிலவுலகில் வாழ்ந்து தம் புகழ்களைப் பாடவேண்டுமென்று விரும்பினர். அங்கு அருகே ஒரு குளத்தைத் தோற்றுவித்து இறைவன் விரிசடையுடன் ருத்ராக்ஷமும் திருநீறும்

அணிந்த அடியார் வடிவில் அப்பர் முன்னே தோன்றினர். அப்பர் கைலாசம் நோக்கிச் செல்கிருர் என்பதை அவ ரால் அறிந்து, 'அன்பரே! கைலாய இறைவனை மக்கள் யாரும் காண்பது முடியாது, எனவே திரும்பிச் செல்க! என்று அறிவுரை கூறினர். அப்பர், 'ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்' என மறுத்தார், மேலே தம் பயணத்தைத் தொடங்குவதற்கு முன்பு அந்த அடியாருக்கு வணக்கம் செலுத்த அவர் பக்கம் திரும்பிப் பார்த்தார், ஆனல் அந்த அடியார் அங்கு காணப்படவில்லை. இறைவனே அங்கு வந்ததாக அப்பர் அறிந்து கொண்டார். இறைவன் பின்னர் அவருக்குத் தோன்ருத் துணையாக இருந்து அவ்வப் போது ஊக்குவிக்கும் உரைகளை வழங்கினர். அப்பர் தம் உள்ளத்தில் இறைவனிடம், 'பெருமானே! எனக்குப் புதிய உடல் தாரும்; அப்போது நான் என் பயணத்தைத் தொடரமுடியும்' என்று வேண்டினர். அருகே இருந்த குளத்தில் மூழ்குமாறு சொல்லி இறை வன், 'திருவையாற்றில் என்னையும் சிவபுரத்தையும் கைலாசத்தையும் காண்க!' என்று பணித்தார். அப்பர் பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு குளத்தில் மூழ்கினர் அவர் குளத்தைவிட்டு வெளியேற நினைக்கும்போது, தென்திசையில் நூற்றுக்கணக்கான மைல் தொலைவில் உள்ள திருவையாற்றுத் தலத்தில் உள்ள குளத்தில் தாம் இருப்பதைக் கண்டார்! அவர் வெளியில் வந்ததும் எங்கும் சிவமும் சக்தியும் இருக்கக் கண்டார். கோயிலுக்குள் நுழைந்து சென்று அங்கு கைலாச மலையைக் கண்டார். அங்கு சிவபெருமான் அன்னை பார்வதியுடன் வீற்றிருக்கவும், தேவர்கள் புடைசூழ்ந்திருக்கவும், பூதகணங்கள் இறைவனுடைய புகழ்களைப் பாடிக்கொண்டிருக்கவும் கண்டார். அவர் பரவசமடைந்து இறைவனுடைய புகழ்களைப் பாடி ஆனந்தக் கூத்தாடினர்.

பின்னர், அப்பர் திருப்பூந்துருத்தியில் ஒரு மடத்தை நிறுவி அங்கு தங்கியிருந்தார். அதற்கிடை யில், சம்பந்தர் மதுரையில் சமணர்களை வெற்றி

கொண்டு திருப்பூந்துருத்திக்கு வந்து கொண்டிருந்தார். அப்பர் அவரை வரவேற்க முன்னே சென்ருர். சம்பந்தருக்குத் தெரியாமல் அவருடைய சிவிகையைத் தாங்கி வருபவர்களில் ஒருவராக அப்பர் சேர்ந்து கொண்டார். திருப்பூந்துருத்தியை அடைந்ததும் சம்பந்தர், 'எங்குற்ருர் அப்பர்?' என வினவவும், அப்பர் சிவிகையின் கீழிருந்து அமைதியாக, "உம் அடியேன் உம் அடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு வந்தெய்தப்பெற்று இங்குற்றேன்" என்று விடை தரவும், அதுகேட்ட சம்பந்தர் உடனே சிவிகையிலிருந்து கீழே குதித்து இறங்கிப் பதை பதைத்து அப்பரின் திருவடிகளில் விழுந்து பணிந்தார். பணிவு மிகுந்த அடியாருக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர் அப்பர். இருவரும் ஒருவரையொருவர் ஆரத் தழுவிக்கொண்டு அன்புக் கண்ணீர் பொழிந்தனர். (அப்பர் வயது முதிர்ந்தவர் என்பதையும் சம்பந்தர் ஏழு வயதுதான் நிரம்பிய பிள்ளை என்பதையும் நாம் கருத்தில்கொண்டு இந்த நிகழ்ச்சியை நினைவில்கொண்டு போற்ற வேண்டும்.)

பின்னர், திருநாவுக்கரசர் சைவ சமயத்தின் நிலை, பாண்டிய நாட்டில் எவ்வாறு உள்ளது என்பதைத் தாமே சென்றுபார்க்க விரும்பி மதுரைக்குப் புறப் பட்டார். மன்னன் நிறைசீர் நெடுமாற நாயனரும் அரசி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறை நாயனரும் பக்தியுடன் அவரை வரவேற்றனர். அப்பர் அங்கு சிலநாள் தங்கி இறைவனை வழிபட்டார். அங்கிருந்து இராமேசுவரத்துக்குச் சென்ருர்; திருப் புகலூருக்குத் திரும்புவதன் முன்னம் இன்னும் பல வேறு புனித தலங்களை வழிபட்டார்.

சிவபெருமான் இங்கு அவரைச் சோதனை செய்ய விரும்பினர். அப்பர் கோயிலில் உழவாரப் பணிசெய்து கொண்டிருக்கும்போது தரை முழுதும் தங்கமும் வைரங் களும் சிதறிக் கிடக்குமாறு செய்தார். அப்பருக்குப் பொன்னும் மணியும் புல்லும் கல்லுமாக இருந்தன. அவர் அவற்றையெல்லாம் தம் உழவாரத்தில் ஏந்தி

அருகிலிருந்த குளத்தில் எறிந்தார். மீண்டும் இறைவன், விண்ணுலக மகளிர் அவர் முன்னே தோன்றி ஆடிப்பாடி அவரை மயக்கும்படிச் செய்தார். அப்பர் சித்தநிலை திரியாது தம் பணியில் நிலைநின்றார். அவருடைய இதயமும் நினைவும் இறைவனுடைய தாமரை போன்ற திருவடிகளில் மையங்கொண்டிருந்தன.

அப்பர் எஞ்சிய வாழ்நாள் முழுதும் அங்கேயே தங்கியிருந்து தம் எண்பத்தொன்றும் வயதில் சிவபெருமானுடன் இரண்டறக் கலந்தார்.

## 22. குலச்சிறை நாயனார்

சிவனடியார்களிடம் பக்தி செலுத்துவதில், குலச்சிறை நாயனார் மேம்பட்டு விளங்கினார். பாண்டிய நாட்டில் மணமேற்குடி என்னும் ஊரில் அவர் பிறந்தார். அவ்வூருக்கு சிவனடியார்கள் அடிக்கடி வருகை தந்து அருள்பாலித்தனர். குலச்சிறை நாயனார் மக்களின் தலைவராகவும் புரவலராகவும் இருந்தார். அவர் சிவனடியார்களுக்குச் செய்யும் வழிபாட்டைச் சிவபெருமானுக்குச் செய்யும் வழிபாட்டுக்குச் சமமாகக் கருதி வந்தார். அவர் சிவபெருமானுக்கும் சிவனடியார்களுக்கும் ஒரு வேறுபாட்டையும் காணவில்லை. அவர் பாண்டிய மன்னரின் முதலமைச்சராக இருந்தார். எனினும் அவர் தம்மைச் சிவனடியார்களின் அடித் தொண்டராகக் கருதி வந்தார். தம் ஊரில் அவரே மிகப் பெருஞ் செல்வராக விளங்கினார்; எனினும் செல்வம் அவருக்குத் தூசாக இருந்தது. அவருக்கென்று எதுவும் சொந்தமில்லை; யாவும் சிவனடியார்களின் சொத்து ஆகும். சம்பந்தரும் அவருடைய உயர்ந்த குணநலன்களைப் பற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார்.

நாயனார் சிறந்த போர் வீரராகவும் நிர்வாகியாகவும் இருந்தார். எனினும் அவருடைய மனம் எப்போதும் இறைவனிடமே லயித்திருந்தது. சமண சமயத்தின் தீய செல்வாக்காகிய அலை ஓய்ந்து போகும் பணியில் அவர் அரசியாருக்கு உதவியாக

இருந்தார். மதுரையில் இத் தீங்கு நெறியைப் பொருதழிக்க நாயனர் சம்பந்தரை வரவழைத்தார். சம்பந்தருடைய மடத்திற்குச் சமணர் தீயிட்டனர். சம்பந்தர் ஒரு பதிகம் பாடினர். நெருப்பு அணைந்து போயிற்று. பாண்டிய மன்னன் கடும் சுரத்தால் வருந்தினன்; சமணர்களால் குணப்படுத்த முடிய வில்லை. சம்பந்தர் புனிதத் திருநீற்றை அவனுக்கு அணி வித்துக் குணப்படுத்தினர். சம்பந்தர் சமணர்களுடன் வாதிட்டு வெற்றிகண்டார். குலச்சிறையார் தோற்ற சமணர்களைக் கழுவேறச் செய்தார். அவர் சிவனடியார் களுக்குப் பணிவிடை செய்து இறுதியில் சிவபுரத்தை அடைந்தார்.

## 23. பெருமிழலைக்குறும்ப நாயனர்

குருவே தெய்வம். நம்மை என்றும் பிரியாதவரும், நம்மை ஆதரிப்பவராகவும், பாதுகாப்பவராகவும் இருக்கும் இறைவனே நாம் கண்ணல் காணக்கூடிய குருவடிவில் தோன்றுகிருர். குருவை உறுதியோடும் பக்தியோடும் வழிபடுபவர் எல்லாச் சித்திகளையும் (மறை சக்திகளையும்) அழிவற்ற பேரின்பத்தையும் பெறுவார். குருபக்தியில் பெருமிழலைக்குறும்ப நாயனர் மிகவும் மேம்பட்டு விளங்கினர். அவர் சிவபெருமானிடத் தும், சிவனடியார்களிடத்தும் ஆழ்ந்த பக்தி பூண்டிருந் தார். அவர் சுந்தரமூர்த்தி நாயனருடைய பெருமையைக் கேள்வியுற்று அவரை மானசீக குருவாக ஏற்றுக் கொண்டார். சுந்தரரே ஒரே அடைக்கலம் ஆக அவருக்கு ஆனர். அவர் குருவை மன, மொழி, மெய் களால் வழிபட்டார். குருவின் அருளால் அவர் சித்திகள் யாவும் கைவரப் பெற்ருர். அவர் சிவபக்தியிலும் குரு பக்தியிலும் மூழ்கியிருந்தார்.

இடையில், சுந்தரர் திருவஞ்சைக்களத்திற்கு வந்து அங்கிருந்து அவர் சிவபுரத்திற்கு—இறைவன் இருப்பிடத் திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். குறும்ப நாயனர் தம்முடைய யோக சக்தியினல் இப்படி நிகழும் என்பதை அறிந்தார். குருவுக்குப் பிறகு, இவ்வுலகில்

வாழ்ந்திருக்க அவர் விரும்பவில்லை; ஆதலால் சிவயோக நெறியினால், நாயனார் அழியும் தம் உடலைச் களைந்தெறிந்தார்; சுந்தரர் புறப்படுவதற்கு ஒருநாள் முன்னதாகவே அவர் சிவபுரம் சென்றடைந்தார்.

## 24. காரைக்கால் அம்மையார்

காரைக்கால் அம்மையார் என்று புகழ்ப்பெற்ற புனிதவதியார் ஒரு வணிகர் குடியில் தோன்றினார். அவருடைய தந்தை தனதத்தன். அவர் செல்வ வளம் மிகுந்த வணிகர். அவர் அறநெறியிலும் சிறந்தவர். அவரும் அவருடைய கடமையுணர்வு மிகுந்த மனைவியாரும் குழந்தை வரத்தை இறைவனிடம் வேண்டினர். இறைவன் திருவருளால் பிறந்த குழந்தைக்குப் புனிதவதி என்று பெயரிட்டனர். குழந்தைப் பருவத்திலிருந்தே புனிதவதிக்குச் சிவபெருமானிடமும் சிவனடியார்களிடமும் ஆழ்ந்த பக்தி இருந்தது. செல்வம் மிகுந்த வணிகனாகிய பரமதத்தனுக்கு அவள் மணம் முடிக்கப்பட்டது. இருவரும் இல்வாழ்க்கை நடத்துவோருக்கு எடுத்துக்காட்டான நல்வாழ்வு வாழ்ந்தனர்.

ஒருநாள் பரமதத்தன் இரண்டு மாங்கனிகளைத் தன் வீட்டுக்கு அனுப்பிவைத்தான். கணவன் நண்பகல் உணவுக்கு வரும்போது பரிமாறக் கருதிப் புனிதவதி அவற்றைப் பாதுகாப்பாக வைத்திருந்தாள். இடையில், சிவயோகி ஒருவர் அவள் முன்னே தோன்றினார். அவர் பசியால் முற்றிலும் களைத்திருந்தார். புனிதவதி அவரை வழிபட்டு விருந்து படைத்தாள். கறியமுதம் இன்னும் சமைக்கப்படவில்லையாதலின் மாங்கனிகள் இரண்டினுள் ஒன்றை விருந்தினருக்குப் படைத்தாள். நண்பகல் பரமதத்தன் வீட்டுக்கு வந்தான். அவள் இன்னடிசில் கறிகளுடன் எஞ்சியிருந்த மாங்கனியைப் படைத்தாள். அவன் அதை விரும்பி உண்டான்; இன்னொன்றையும் படைக்குமாறு கூறினான் அவள் தடுமாற்றம் அடைந்தாள். இறைவனிடம் அவள் முறையிட்டு வேண்டினாள். அவள் வேண்டுகோளை முடித்தவுடனே மாயை நிகழ்ச்சியாக அவளுடைய உள்ளங்கையில் ஒரு

மாங்கனி விழுந்தது. அவள் அதைத் தன் கணவனுக்குத் தந்தாள். அவன் அதைச் சுவைத்தான். அது புதிய சுவையாகவும் மிகுந்த சுவையாகவும் இருந்தது. தான் அனுப்பிய மாங்கனி அல்ல என்று அவனுக்கு நிச்சயம் தெரிந்திருந்தபடியால், அந்த மாங்கனியை எங்கிருந்து பெற்ருய் என்று அவளிடம் வினவினுன். புனிதவதி எல்லா உண்மையும் கூறினுள். பரமதத்தன் இதை நம்பவில்லை; எனவே இன்னெரு மாங்கனியை வரவழைக்குமாறு வினவினுன். அவள் மீண்டும் இறைவனிடம் முறையிட்டு வேண்டினுள். இன்னெரு மாங்கனி அவளுடைய உள்ளங்கையில் தோன்றியது. அதை அவள் அவனிடம் தந்தாள். ஆனுல் உடனே அவன் கையிலிருந்து அது மறைந்துவிட்டது. அவன் பேராச்சரியத்தால் பிரமித்துப் போனுன். அவன் தன் மனைவியின் பெருமையைப் புரிந்துகொண்டான். அவளோடு கணவனுக வாழ்வது மிகப் பெரிய பாவம் என்று கருதினுன். வாணிகத்தின் பொருட்டு வெளிநாட்டுக்குச் செல்லும் சாக்கில், சரக்குகள் நிறைந்த கப்பல் ஒன்றில் பயணம் சென்ருன். திரும்பி வந்ததும் பாண்டி நாட்டின் பெரிய ஊர் ஒன்றில் நிலையாகத் தங்கிவிட்டான். வணிகர் குலப்பெண் ஒருத்தியை மணந்துகொண்டு அவன் மகிழ்ச்சியுடன் வாழ்ந்துவந்தான். தனக்குப் பிறந்த பெண் குழந்தைக்கு. முதல் மனைவியின் பெயராகிய புனிதவதி என்ற பெயரை இட்டான்.

புனிதவதியாரின் உறவினர்கள் அவன் இருப்பிடத்தை அறிந்தவராகி அம்மையாரையும் ஒரு சிவிகையில் அமரச் செய்து அவனிடம் அழைத்துக்கொண்டு சென்றனர். புனிதவதியாரின் வருகையைப்பற்றிக் கேள்வியுற்ற பரமதத்தன் தன் இரண்டாவது மனைவியோடும் குழந்தையோடும் முன்சென்று புனிதவதியாரின் காலடியில் விழுந்து வணங்கினுன். மக்கள் அவனிடம் காரணத்தைக் கேட்டவுடனே, அம்மையாரை மனைவியாகக் கருதவில்லை என்றும் தெய்வமாகக் கருதுவதாகவும் தெரிவித்தான். புனிதவதியார் அவனுடைய மனப்பான்மையை அறிந்தவராகி இறைவனிடம் பின்வருமாறு வேண்டினுர். ''அப்படியாயின், பெருமானே

என்னுடைய தற்போதுள்ள பூத உடம்பினை மாற்றிப் பேய் வடிவம் தருவாய்.'' அம்மையாரின் வேண்டுகோள் உடனே நிறைவேற்றப்பட்டு அழகிய உடம்பு எலும்பு வடிவாக மாற்றம் பெற்றது.

பின்னர் அம்மையார் புனித கைலாய மலைக்கு யாத்திரை சென்றார். புனிதமான அந்த இடத்தைக் காலால் மிதித்தல் பெரும் பாவம் என்பதை உணர்ந் தவராய்த் தம் யாத்திரையின் கடைசிப் பகுதியை தம் தலையால் கடந்தார். பார்வதி அன்னையார் புனிதவதி யாரின் அதிசயமான வடிவத்தைக் கண்டு, ஆச்சரியப் படத்தக்க பக்தியையும் கண்டு மிகவும் வியப்படைந் தார். சிவபெருமான் அன்னையாரிடம், அம்மையாரின் பெருமையை எடுத்துக் கூறினார். அம்மையார் இறைவனை அணுகியபோது சிவபெருமான் அளவற்ற அன்புடன் அவரை வரவேற்று ஒரு வரம் நல்கினார். அம்மையார் இறைவனுடைய திருவடிகளில் வீழ்ந்து பின்வருமாறு வேண்டினார், ''கருணையங்கடலே! தங்களிடம் என்றென்றும் நிறைவான, நேர்மையான, தூய்மையான, களங்கமற்ற பக்தி செலுத்த வேண்டும். பிறவாமை வேண்டும். மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும். இன்னும் வேண்டும். அறவா! நீ ஆடும்போது உன் அடியின் கீழ் நான் உன் புகழைப் பாடி மகிழ்ந்து இருக்கவேண்டும்.'' சிவ பெருமான் இந்த வரத்தை நல்கித் தம் நடனத்தைக் காணத் திருவாலங்காட்டுக்குச் செல்லுமாறு கூறினார். அம்மையார் அந்த தலத்துக்குச் சென்று சிவபெருமானு டைய புகழ்களைப் பாடியவாறு தம் வாழ்வை நடத்தி வந்தார்.

## 25. அப்பூதி நாயனார்

அப்பூதி நாயனார் குரு பக்தியில் மிகச் சிறந்து விளங்கினார். அவர் ஆர்வம் மிகுந்த சிவபக்தர். அவர் மற்றவர்களுக்கெல்லாம் முன் மாதிரியான இல்லற வாழ்வை நடத்தி வந்தார். சோழ நாட்டில் திங்களூரில் அந்தணர் குடும்பத்தைச் சேர்ந்தவர் அவர்.

அவர் அப்பரின் பெருமைகளைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தார். இறைவன் திருவருளால் கடலில் கல் மிதந்ததும், அப்பர் அதுவே தெப்பமாக அமையக் கடல் கடந்து பாதுகாப்பான இடத்திற்கு வந்து சேர்ந்ததும் ஆகிய செய்திகளைக் கேட்டறிந்தார். அப்பரை அவர் நேரில் பார்த்ததில்லை யெனினும் அவரையே தம் குருவாகக் கொண்டு அப்பரின் பெயரையே வழிபட்டு வணங்கி வந்தார். ஆன்மீக தாகங்கொண்ட அடியார் களின் பொருட்டுச் சிவபெருமானே குருவாகத் தோன்று வார் என்பதை அவர் அறிந்திருந்தார். அவர் குருவின் பாத கமலங்களைத் தியானித்து வந்தார். அவர் தம் குழந்தைகள் அனைவருக்கும் 'திருநாவுக்கரசர்' என்று பெயரிட்டார்; வீட்டில் புழங்கும் எல்லாப் பொருள் களுக்கும் நாவுக்கரசரின் பெயரைச் சொல்லியே வழங்கி வந்தார். தல யாத்திரை செய்யும் அன்பர் களுக்கு உதவுமாறு தண்ணீர்ப் பந்தல்கள் பல நிறுவி அவற்றுக்கும் தம் குருவின் பெயரையே வழங்கி வந்தார். தொடர்ந்து நிலையாகக் குருவை நினைப்பதன் பொருட்டும் அவருடைய கருணையில் திளைப்பதன் பொருட்டும் அவர் இவ்வாறு செய்து நிச்சயப்படுத்திக் கொண்டார்.

ஒரு நாள் அப்பரே திங்களூரின் பக்கம் வந்தார். ஒரு தண்ணீர் பந்தலுக்குச் சென்றார். எங்கு பார்த்தாலும் தம்முடைய பெயர் எழுதப் பட்டிருந்ததைப் பார்த்து வியப்படைந்தார். தல யாத்திரை செய்து வரும் அன்பர்கள் சிலர் வாயிலாகத் தண்ணீர்ப் பந்தலை நிறுவியவர் அப்பூதி என்று அறிந்து கொண்டு அவரைச் சந்திக்கச் சென்றார். அப்பூதி சிவபக்தரை (அவர் யாரென்று தெரியவில்லை என்றாலும்) மிகுந்த பக்தியுடன் வரவேற்றார். அப்பர், 'புனிதம் மிகுந்த அன்பரே! தங்கள் பெருமையையும், புகழையும் மிகுந்த அளவில் கேள்விப்பட்டுள்ளேன். என்னுடைய வணக்கங்களைத் தங்களுக்கு நேரில் செலுத்த விரும்பினேன். தண்ணீர்ப் பந்தலுக்குத் தங்கள் பெயர் இடாமல், வேறு யாரோ ஒருவருடைய பெயரை ஏன் இட்டீர்கள் என்பதை அருள்கூர்ந்து தெரி

வியுங்கள்,'' என்று கூறினர். அருள்மிகுந்த தம் குருவின் பெயரைப்பற்றி யாரோ ஒருவர் என்று குறிப் பிடப்பட்டதனல் அப்பூதி அதிர்ச்சியடைந்தார். அவர், ''நண்பரே! தாங்கள் சிவபக்தரைப்போலத் தோன்றி னுலும், திருநாவுக்கரசு சுவாமிகளைப்பற்றி அறியாத வராக இருக்கிறீர்கள். பல்லவ மன்னனுடைய கொடிய தண்டனைகளையெல்லாம் அவர் இறைவன் திருவருளால் வென்று சைவ சமயத்தை நிலை நாட்டினர். மன்னன் அவரைக் கல்லோடு பிணித்துக் கடலில் எறிந்ததையும், அவர் கல்லே தெப்பமாக மிதந்து கரை சேர்ந்ததையும் தாங்கள் கேள்விப்படவில்லையா? தாங்கள் யார்?'' என்று வினவினர். அப்பூதியாரின் பக்தியைக் கண்டு அப்பர் மனம் மிகவும் நெகிழ்ந்து, 'கொடிய சூலை நோயிக் காளாகி இறைவன் திருவடி நிழலைச் சரணடைந்து இறைவன் திருவருளால் நோய் நீங்கிச் சைவத்திற்குத் திரும்பிய அந்தச் சிறியவன் அடியேன்,'' என்று கூறினர். இந்த இரு வேறு விளக்கங்களைக் காணுங்கள். அப்பூதி அப்பரின் பெருமையை நினைக்கின்றார். ஆனல் அப்பரோ தம்முடைய தவற்றையும் (தம் பணிவுடை மையை நிலை நாட்ட) இறைவன் பாதுகாத்த பெருங் கருணையையும் நினைக்கின்றார்.

இதைக் கேட்டவுடனே அந்தச் சிவபக்தர் அப்பர் தான், வேறு யாரும் அல்ல என்று புரிந்து கொண்டு எல்லையற்ற ஆனந்தம் அடைந்தார். தம் மனைவி யாருடன் அப்பரை வணங்கித் தம் இல்லத்தில் விருந் தேற்குமாறு அப்பூதியார் வேண்டிக்கொண்டார். அவருடைய மூத்த மகன் கொல்லைப்புறம் சென்று வாழை இலையைக் கொய்தபோது அவனை நாகம் தீண்டிற்று. அவன் சிறந்த சிவபக்தனுகவும் இருந்தான். தன் அன்னையிடம் தன் கடமையை நிறைவேற்ற ஓடிச் சென்றான். வாழை இலையைத் தன் அன்னையிடம் தந்து விட்டுக் கீழே விழுந்து இறந்தான். அப்பர் சுவாமிகளை வழிபடும் நிகழ்ச்சிக்கு இதனல் இடையூறு ஏற்படுவதை அப்பூதியார் விரும்பவில்லை. எனவே இறந்த உடலை மறைத்தார். அவர் அப்பரை விருந்துண்ண அழைத் தார். அப்பர் அமர்ந்து அப்பூதியாரையும் அவர் மனைவி

யாரையும் வாழ்த்தி நல்லாசிகள் வழங்கித் திருநீறு வழங்கி அவர்களின் மூத்த புதல்வனை வரச் சொன்னார். அப்பூதியார் திறமையோடு பதில் தந்தார். "அவன் இப்போது உதவான்." ஏதோ நடந்திருக்குமென்று அப்பர் உள்ளுணர்ந்து உண்மையில் என்ன நடந்ததென்று கூறுமாறு வேண்டினார். அப்பூதியார் நடந்ததைத் தெரிவித்தார். அப்பர் உடனே எழுந்து இறந்த உடலைக் கோயில் முன் கிடத்துமாறு கூறினார்; ஒரு பதிகம் பாடினார். ஓர் அற்புதம் நிகழ்ந்தது. சிறுவன் உறக்கத்திலிருந்து எழுந்ததுபோல், எழுந்து நின்றான். சிறுவனுடைய பெற்றோரைத்தவிர அனைவரும் மகிழ்ச்சியடைந்தனர். அப்பர் தம் உணவை உண்பதற்கு இந்த நிகழ்ச்சியால் சிறிது காலத் தாழ்வு நேர்ந்ததாக அவர்கள் வருந்தினர். உண்மையான பக்தியின் இயல்பு இதுவாகும். அப்பர் உடனே அவர்களுடன் விருந்துண்டு அக்குடும்பத்தார்க்கு நல்லாசிகள் வழங்கினார்.

அப்பூதி அடிகளாரின் இல்லத்தில் அப்பர் சில காலம் தங்கினார். அப்பர் சுவாமிகளாகிய தம் குருவினிடம் அற்புதமான பக்தி செலுத்தி அப்பூதியார் இறைவனுடைய திருவருளைப் பெற்றார்.

## 26. திருநீலநக்க நாயனார்

சோழ நாட்டின் ஒரு முக்கியமான நகரம் திருசாத்தமங்கை. அது சிவபக்தியும் ஆன்மிகத் துடிப்புகளும் நிறைந்த இடம். அந்தணர்கள் மறைகளை ஓதுவதிலும் சொல்வதிலும் இறை வழிபாட்டிலும் ஈடுபட்டிருந்தனர். மகளிர் தத்தம் கணவரையே இறைவனாகக் கருதி வாழ்ந்து வந்தனர்; இறைவனுக்குச் செய்வதுபோலவே தத்தம் கணவருக்குப் பணிவிடை செய்துவந்தனர். நன்னிலத்திற்குக் கிழக்கில் ஏழு மைல் தொலைவில் அவ்வூர் இருக்கிறது. அயவந்தி என்னும் பெயருள்ள திருக்கோயில் அங்கு உள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் திருப்பெயர் அயவந்தி நாதர். அவர் தம் துணைவியார் மலர்க்கண்ணி அம்மை.

புகழ்மிக்க அந்தணராகிய திருநீலநக்க நாயனார் இவ்வூரில் வாழ்ந்தார். அவர் ஆகமங்களில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார்; இறைவனுக்குச் செய்யும் சடங்குமுறை வழிபாட்டை ஒழுங்காகச் செய்துவந்தார். ஒரு திருவாதிரை நாளன்று கோயிலில் அவர் இறை வழிபாட்டில் ஆழ்ந்திருந்தார். அவருடைய துணைவி யாரும் உடனிருந்தனர். வழிபாடு நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது சிவலிங்கத்தின்மீது ஒரு சிலந்தி விழுந்தது. ஒரு கணமும் தாமதியாமல் நாயனாரின் துணைவியார், குழந்தையின் உடம்பில் சிலந்தி விழுந் தால் மெல்லென்று ஊதி அகற்றுவதுபோல், வாயால் ஊதி அகற்றினார். அப்போது வாய் எச்சில் சிறிது பட்டது. ஆனால் கணவரோ இந்த அநுசிதமான செயலால் சினங்கொண்டார். ஏனெனில் வழிபாட் டுக்குக் குந்தகம் விளைந்தது; லிங்கத்தின்மீது எச்சில் பட்டமையால் கோயில் புனிதம் இழந்தது. மீண்டும் அதைப்பற்றி நினைந்து பாராதவராய்த் தம் மனைவி யாரைப் புறக்கணித்து வீடு திரும்பினார்.

அம்மையார் அயவந்தி நாத இறைவனிடம், கருணை காட்டுமாறு வேண்டினார். இறைவன் நாயனாருடைய கனவில் அன்றிரவு தோன்றி அம்மையாரின் எச்சில்பட்ட இடம் தவிரத் தம்மேனி எங்கும் சிலந்திக் கொப்புளங்கள் இருப்பதைக் காணச்செய்தார். சடங்கு வழிபாட்டைக் காட்டிலும் பக்தி மிக உயர்ந்தது என்ற உண்மையை அவர் உணர்ந்தார். கனவில் இறைவன் தமக்குக் காட்சி தந்ததை நினைவுகூர்ந்து பெருமகிழ்ச்சியடைந்து நிலத்தில் புரண்டார்; ஆனந்தக் கண்ணீர் உகுத்தார்; குதித்துக் கூத்தாடினார். விடிந்தவுடனே கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டு மகிழ்ந்து சிவலிங்கத்தைக் கல்லாகக் காணமல் உயிராகக் கண்ட புனிதம் மிகுந்த பக்திமதியாகிய தம் மனைவியாருடன் வீட்டுக்குத் திரும்பி வந்தார்.

ஒருமுறை அவருடைய இல்லத்திற்கு திருஞான சம்பந்தர் திருநீலகண்டப் பெரும்பாணருடனும் விறலி யாருடனும் வந்தார். பெரும் ஞானியாகிய சம்பந்தரைச்

சந்திக்க வேண்டுமென்று திருநீலநக்க நாயனர் மிகுந்த ஆவலுடன் இருந்தார். எனவே அவரைத் தகுந்த மரியாதைகளுடன் வரவேற்றார். அன்றிரவு, தம்முடன் வந்துள்ள மற்றைய இருவருக்கும் தங்க இடந்தருமாறு சம்பந்தர் நாயனரை வேண்டினர். அவர்கள் அந்தணர் என்னும் உயர்குலத்தவரல்லர். இல்லத்தினுள் அவர்களை உறங்கச் செய்யத் திருநீலநக்க நாயனர் தயங்கினர். புனித நெருப்பு வளர்க்கும் வேதிகையின் அருகே அவர்களை உறங்கச் சொன்னர். அவர்கள் அதன் அருகே அணுகியவுடன் வேதிகையில் செந்தீ தானகவே வலமிட்டுச் சுடர்விட்டு எரிவதைக் கண்டு நாயனர் பெருவியப்படைந்தார். சடங்கு வழிபாட்டினல் அடைய முடியாத மிகவும் மேம்பட்ட உயர்ந்த நிலையை அவர்கள் தங்கள் பக்தி என்னும் அக்கினியால் அடைந்துள்ளார்கள் என்ற உண்மையை நாயனர் உணர்ந்துகொண்டார். சாதிப் பாகுபாட்டுத் திரையும் அவருடைய கண்களைவிட்டு அகன்றது. அடுத்தநாட் காலையில் சம்பந்தர் கோயிலுக்குச் சென்று வழிபட்டுப் பாடிய பதிகத்தில் திருநீலநக்க நாயனரின் பெருமையும் இடம்பெறச் செய்தார். சம்பந்தர் அவ்வூரைவிட்டுப் புறப்பட விரும்பியபோது திருநீலநக்கரும் உடன் செல்ல விரும்பினர்; ஆனல் சம்பந்தர் தடுத்து அங்கேயே தங்கியிருந்து சிவபக்தர்களுக்குப் பணிவிடை செய்யுமாறு கூறினர். அவரும் இசைந்தார்.

எனினும் அவர் எப்போதும் சம்பந்தரின் திருவடி நிழலிலேயே தங்கியிருக்க விரும்பினர். அவருடைய விருப்பம் விரைவில் நிறைவேறியது. சம்பந்தருடைய திருமண விழாவைப்பற்றிக் கேள்வியுற்று அந்த விழாவைக் கண்டு மகிழ நல்லூர்ப் பெருமணத்திற்குச் சென்றார். சம்பந்தர் சிவபெருமானுடைய பேரொளியில் கலந்தபோது திருநீலநக்க நாயனரும் அதில் கலந்தார்.

## 27. நமிநந்தியடிகள்

சோழப் பேரரசில் மெய்பேரூர் என்னும் ஊரில் நமிநந்தி அடிகள் என்னும் பெயருள்ள அந்தணர்

வாழ்ந்து வந்தார். அவர் தமக்கு ஒரே புகலிடமாக உள்ள சிவபெருமானை நாள்தோறும் திருவாரூருக்குச் சென்று வழிபட்டு வந்தார். சிவாகமங்களில் பெரிதும் புகழ்ந்து பேசப்படுவது கோயிலில் எண்ணற்ற திரு விளக்குகளை ஏற்றும் திருப்பணியாகும். இதைத் தாமும் செய்ய வேண்டும் என்று ஒரு நாள் அவர் ஆழ்ந்த விருப்பம் கொண்டார். எனவே அவர் கோயிலுக்கு அருகே உள்ள இல்லத்தில் சென்று விளக்குத் திருப்பணிக்காக நெய் வழங்குமாறு வேண்டினார். அது ஒரு சைனருடைய இல்லம். அந்த சைனர் மிகவும் வெறுப்புடன் கூறினார்: 'இங்கு நெய் கிடையாது; உமக்கு மிகுந்த ஆவல் இருந்தால் நெய்க்குப் பதிலாகத் தண்ணீரை ஊற்றி எரியவிடுவீர்!' நந்தி அடிகள் இதைக் கேட்டுப் பெரிதும் வருந்தினார். கோயிலுக்குள் சென்று இறைவனிடம் முறையிட்டார். அசரீரி எழுந்தது: 'வருந்த வேண்டாம்; அருகில் உள்ள குளத்திலிருந்து தண்ணீரைக்கொண்டு வந்து ஊற்றி விளக்குகளை ஏற்றுவீராக' என்றது. பெரு மகிழ்ச்சியுடன் நந்தி அடிகள் அவ்வாறே செய்தார். இறைவன் பெருங்கருணையினால் எல்லா விளக்குகளும் சுடரொளிதந்து எரிந்தன. இந்த அற்புதத்தைக் கண்டு சைனர்கள் அனைவரும் மிகுந்த ஆச்சரியம் அடைந்தனர். தொடர்ந்து பல நாட்கள் வரையில் நந்தி அடிகள் இத்திருப்பணியைச் செய்து வந்தார். அப்போது, திருவாரூர் நமிநந்தி அடிகள் செய்த அற்புதங்களால் மக்கள் சைன சமயத்தில் கொண்டிருந்த நம்பிக்கையை இழந்தார்கள். அவர்கள் சைவ சமயத்தைத் தழுவினார்கள்.

நந்தி அடிகளின் பெருமையைக் கேள்வியுற்ற சோழ மன்னன் அவரை கோயிலின் தலைமை அர்ச்சகராக நியமித்தான். பங்குனி உத்திரத் திருவிழாவைப் பெரும் அளவில் கொண்டாடுவது அவர் வழக்கமாகி விட்டது. எல்லா இனத்தவரும் ஆகிய மக்கள் பலரும் ஒருங்கு திரண்டு இறைவனை வழிபடும் திருமணலி என்னும் இடத்திற்கு உற்சவ மூர்த்தியைக் கொண்டு செல்லுவார்கள். இத்தகைய ஒரு சமயம் தம் கடமைகள் யாவும்

முடிந்த பிறகு நந்தி அடிகள் இல்லத்திற்குத் திரும்பி வந்தார். பல்வேறு இனத்து மக்களால் தீண்டப்பட்ட உணர்வால் தம் உடம்பு களங்கப்பட்டதாக எண்ணி, நீராடுவதற்குமுன் இல்லத்தில் நுழையவும், வழக்கமான இறை வழிபாட்டைச் செய்யவும் அவர் விரும்பவில்லை. எனவே நீராடுவதற்கான நீரை வீட்டுக்கு வெளியில் கொண்டு வந்து நிரப்புமாறு தம் மனைவியிடத்தில் கூறினார். தண்ணீர் கொண்டு வருமுன்பு அவரை உறக்கம் ஆட்கொண்டது. கனவில் சிவபெருமான் தோன்றினார். 'நந்தியே! திருவாரூரில் பிறந்தார் அனைவரும் சிவ கணங்களே யாவர். அவர்களைத் தீண்டத்தகாதவர் என்று கருதக் கூடாது. நீவிர் கண்ணார இக்காட்சியைக் காண்பீர்!' என்று தெரிவித்தார். நந்தி அடிகள் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்து தம் மனைவியாரிடம் அனைத்தும் கூறினார். தம் தவறான நோக்கம் குறித்து வருந்தினார். அவர் உடனே தம் வழிபாட்டை முடித்தார். காலையில் அவர் திருவாரூருக்குச் சென்றார். அங்கு பிறந்து வாழும் மக்கள் அனைவரும் சிவபெருமான் போன்ற வடிவுடன் விளங்குவதை அவர் கண்டார். நந்தி அடிகள் அவர்கள் அனைவர் திருவடிகளிலும் பணிந்து தொழுதார். அவர்கள் தத்தம் பழைய வடிவங்களை அடைந்தனர். இந்த நிகழ்ச்சி இறைவனுடைய திருவிளையாடல் என்று நந்தி அடிகள் புரிந்து கொண்டார்.

பின்னர், நந்தி அடிகள் திருவாரூரிலேயே நிலையாகத் தங்கி வாழ்ந்தார். அவர் இறைவனுக்கும் அடியார்களுக்கும் மிகுந்த அன்புடன் பணிவிடைகளைச் செய்து வந்தார். அப்பர் அவரைத் 'தொண்டர்க்கு ஆணிப் பொன்' (தூய்மையான தங்கம்) என்று புகழ்ந்தார். முடிவில் அவர் இறைவனுடைய புகழ் மிகுந்த சிவபுரம் அடைந்தார்.

## 28. திருஞானசம்பந்தர்

புனிதமிகு சீர்காழித்தலம் தோணிபுரம் என்று சொல்லப்படும். பிரளய காலத்தில் பெருகிய ஊழி வெள்ளத்தில் உலகம் மூழ்கியபோது சீர்காழி மட்டும்

தோணியாக மிதந்து உயிர்களுக்கு அடைக்கலம் தந்தது. இறைவன் திருவருளால் நிகழ்ந்தது இந்த அற்புதம். விவிலிய நூலில் கூறப்படும் நோவாவின் படகு நிகழ்ச்சி நம் நினைவுக்கு வருகிறது.

சிவபாத இருதயர் என்னும் வைதிக அந்தணர் பகவதியார் என்னும் கற்பிற் சிறந்த மனைவியாருடன் அத்தலத்தில் வாழ்ந்து வந்தார். இருவரும் சிவபெருமானுடைய ஆர்வம் மிகுந்த பக்தர்கள். சமண சமயச் சக்திகள் ஆற்றல் வாய்ந்தனவாகவும் அழிக்கவல்லன வாகவும் இருந்தபோதிலும் அவர்கள் சைவ சமயத்தை விடுத்துச் சமண சமயத்தைத் தழுவ மறுத்தனர். சைவ சமயத்தின் பெருமையை நிலைநாட்டவல்ல ஒரு சற்புத்திரனை அருளுமாறு சிவபாத இருதயர் இறைவனிடம் வரம் வேண்டினார். இறைவன் இவ்வரத்தை வழங்கினார். பகவதியார் விரைவில் பொலிவு மிகுந்த ஓர் ஆண் குழந்தையைப் பெற்றார். இறைவன் ஒரு குறிப்பிட்ட செயலுக்காகவே வழங்கிய பரிசு இக் குழந்தை என்பதைத் தெளிவாக அறிந்தவர்களாதலால் மிகுந்த அன்போடும் பக்தியோடும் குழந்தையை வளர்த்து வந்தனர். குழந்தையும் தன் தெய்வீகப் பெற்றோர்களாகிய சிவபெருமானையும் பார்வதி அம்மையாரையும் பிரிந்து வந்த காரணத்தால் அடிக்கடி அழுது வந்தது. ஆனால் பாமர மக்கள் குழந்தையின் அழுகின்ற இயல்பினால் அழுவதாகத் தவறாகக் கருதினார்கள்.

ஒருநாள் சிவபாத இருதயரும் அவருடைய மனைவியாரும் குழந்தையைத் தம்முடன் கோயில் குளத்திற்குக் குளிப்பதற்காக அழைத்துச் சென்றனர். குழந்தையும் அவர்களுடன் வருவதாக வற்புறுத்தியது. அவர்கள் குழந்தையைக் கரையில் விட்டுவிட்டுக் குளத்தில் குளிக்கச் சென்றனர். குழந்தை கோயில் கோபுரத்தைப் பார்த்துத் தன் பெற்றோர்களுக்காக அழுதது. வெளிப்படையாகப் பார்க்கும்போது இது குழந்தைத்தனமான செயல் என்று மட்டுமே தோன்றும்; இறைவனே இதன் உட்பொருளை அறிவார். தோணியப்ப இறைவர் குழந்தைக்கு அருள்வழங்கத் திருவுளம் கொண்டார்.

எனவே பார்வதி அன்னையாருடன் அவர் தோன்றிக் குழந்தைக்குத் தெய்வீக ஞானப்பால் புகட்டுமாறு அன்னையாரிடம் அவர் கூறினர். இறைவனுடைய திருவருளைப் பெறவும், தெய்வீக ஞானத்தைப் பெறவும் முதலில் அன்னையாரின் கருணை வேண்டும். பார்வதி அன்னையார் குழந்தையை ஆரத் தழுவிச் சீராட்டி ஞானப்பால் பருகச் செய்தார். அந்தக் கணத்திலிருந்து அவர் ஆளுடைய பிள்ளையார் என்று அழைக்கப்பட்டார். இறைவனுடைய பாதுகாப்பில் என்றும் மகிழ்ச்சியுடன் இருப்பவர் என்று பொருள். சிவபெருமான், பார்வதி ஆகியோருடைய கருணையால் தெய்வீக ஞானத்தைப் பெற்றவராதலால் திருஞானசம்பந்தர் என்றும் அழைக்கப்பட்டார். ஞானப்பால் பருகிய கணத்திலிருந்தே உள்ளக் கிளர்ச்சியூட்டும் பாடல்களைச் சிவபெருமான் புகழ்பற்றியனவாகப் பாடத் தொடங்கினர். இப்பாடல்களின் தொகுதி தேவாரம் என்று அழைக்கப்படுகிறது.

குளித்த பின்பு பெற்றோரிருவரும் கரைக்கு வந்த போது குழந்தையின் கையில் பொற்கிண்ணம் இருப்பதையும் (பார்வதி அன்னையார் பால் ஊற்றித் தந்த கிண்ணம்) உதடுகளில் பால் வழிவதையும் கண்டனர். குழந்தைக்கு யாரோ பால் தந்திருக்கவேண்டும் என்று சிவபாத இருதயர் கருதினர். யார் தந்தாலும் குழந்தை, பால் ஏற்றுக்கொள்வதை அவர் விரும்பவில்லை. எனவே ஒரு பிரம்பை எடுத்து ஓங்கியவாறு, பால் தந்தவர் யார்? என்று குழந்தையிடம் வினவினர். குழந்தை ஆனந்தக் கண்ணீர் பெருக்கியவாறு விண்ணில் தெரிந்த இறைவனையும் பார்வதி அன்னையாரையும் சுட்டிக் காட்டினர். சிவபாத இருதயர் இறைவனைக்காணமுடியவில்லை. எனினும் குழந்தையின் செயலால் குழந்தைக்கு இறைக்காட்சி கிடைத்திருக்கும் என்று ஊகித்தார். கோயிலை நோக்கிச் சென்ற குழந்தையைப் பின்தொடர்ந்தார். அடியார் கூட்டமும் கோயிலுக்கு வந்திருந்தது. இக்குழந்தைக்கு நிகழ்ந்ததை அறிந்தவர்களாய் அவரைப் புகழ்ந்தார்கள். பெற்றோர் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். அவர்கள்

குழந்தையைத் தோள்களில் அமரச் செய்து நகரில் ஊர் வலம் வந்தார்கள். மக்கள் நகரை நன்கு அலங்கரித்துச் சம்பந்தரை மிகுந்த பக்தியுடன் வரவேற்றனர்.

அடுத்தநாள் பிள்ளையார் திருக்கோலக்காவுக்குச் சென்று பதிகம் பாடும்போது தாளம் தவருமல் இருப்பதற்காகத் தம் கைகளால் தாளமிட்டுப் பாடினர். இதனால் மகிழ்வடைந்த சிவபெருமான் பொற்றாளங்கள் பரிசாக வழங்கினர். பொற்றாளங்களின் உதவியினால் சம்பந்தர் பாடத் தொடங்கினர். நாரதரும் விண்ணுலகத்தவரும்கூட இசை கேட்டு பரவசமடைந் தனர்.

சம்பந்தர் பின்னர், தலயாத்திரை சென்றார். இறைவனிடம் மிகுந்த ஆர்வம்கொண்ட பக்தரும், யாழிசையில் வல்லவரும் ஆகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஒருமுறை சம்பந்தரைச் சந்தித்தார். அனைவரும் கோயிலுக்குச் சென்றனர். யாழை இசைக்கு மாறு யாழ்ப்பாணரைச் சம்பந்தர் கேட்டுக்கொண்டார். சம்பந்தர் இறைவனைப் புகழ்ந்து பாடும் பாடல்களை யாழில் இசைப்பதன் பொருட்டு யாழ்ப்பாணர் எப்போதும் சம்பந்தருடன் உடனிருக்க விரும்பினர். சம்பந்தர் இந்த விருப்பத்துக்கு இசைவு தந்தார்.

சம்பந்தர் சிதம்பரம் நோக்கி யாத்திரை சென்றார். இறைவனுடைய திருக்கோலத்தைக் கண்ட மாத்திரத் தில் தன் வசமிழந்தார். தில்லை (சிதம்பரம்) அந்தணர் களின் பெருமையை அவர் கேள்விப்பட்டிருந்தார். அவருக்கு அவர்கள் சிவ கணங்களாகவே (சிவனுக்குப் பணிவிடை செய்யும் தேவவுலகினர்) தென்பட்டனர். யாழ்ப்பாணருக்கும் இதைக் காட்டினர். இருவரும் பெருமகிழ்ச்சியுற்றனர். அந்தணர்கள் சம்பந்தரின் திருவடிகளில் விழுந்து பணிந்தனர். அவர்கள் அவ்வாறு செய்வதற்கு முன்பே சம்பந்தர் அவர்களுடைய திரு வடிகளில் விழுந்து பணிந்தார்.

யாழ்ப்பாணருடைய பிறந்த ஊருக்குச் சென்றபின், சம்பந்தர் திரு அரத்துரைக்குச் செல்ல விரும்பினர். அவர் சில சமயங்களில் நடப்பார்; மற்ற வேளைகளில் தம் தந்தையாரின் தோளில் அமர்ந்து செல்வார். இவ்வாறு அவர்கள் மாறன்பாடியை அடைந்தனர். வெயிலின் வெப்பத்தாலும் பயணத்தின் சிரமத்தாலும் அவர்கள் அனைவரும் களைப்படைந்தனர். மாறன்பாடியில் அன்றிரவு அவர்கள் தங்கினர்.

இறைவன் தம் ஞானப் புதல்வரின் துன்பங்களை ஒரு சிவிகையைப் பரிசாக வழங்கித் தணிக்க விரும்பினர். திரு அரத்துறையில் உள்ள அந்தணர்களின் கனவில் அவர் தோன்றி முத்துக் குடையும் முத்துப் பல்லக்கும் அவர்கள் காண்பார்கள் என்று தெரிவித்து அவற்றைத் திரு அரத்துறையை நோக்கி வந்து கொண்டிருக்கின்ற சம்பந்தருக்கு வழங்குமாறு கட்டளையிட்டார். அதே நேரத்தில் அவர் சம்பந்தரின் கனவிலும் தோன்றிப் பரிசு பற்றி அறிவித்தார். அடுத்த நாள் காலையில் பக்தர்கள் சம்பந்தரிடம் இறைவன் தந்த பரிசுகளை ஒப்படைத்தனர். சம்பந்தர் அவற்றை வணங்கி வழிபட்டுப் பல்லக்கில் ஏறினர்.

சம்பந்தர் வழியில் காணப்பட்ட தலங்கள் எல்லாவற்றிலும் வழிபாடு செய்து இறைவன் புகழ்கள் பற்றிய பதிகங்கள் பாடிச் சீர்காழிக்குத் திரும்பினர். பெற்றோர்கள் அவருக்குப் பூணூல் அணியும் உபநயனச் சடங்கு செய்வித்தனர். அந்தணர்கள் அவருக்கு வேதங்களைக் கற்றுத்தரத் தொடங்கினர். ஆனால் ஆசிரியர்பால் வேதங்களைக் கேட்கும் முன்னரே சம்பந்தர் இறைவன் திருவருளாலும், முன்னைப்பிறவிச் சம்ஸ்காரங்களாலும் அவற்றைச் சொல்லலானர். பின்னர் சம்பந்தர் அவர்களுக்குப் பஞ்சாட்சர மந்திரத்தின் சாரத்தை உபதேசித்து ஒரு பதிகமும் பாடினர். இச்சமயத்தில்தான் திருநாவுக்கரசரும் சம்பந்தரை சந்தித்தார்.

தம் தலயாத்திரையின்போது சம்பந்தர் திருப்பாச்சிலாச்சிரமத்திற்கு வந்தார். அங்கிருந்த மழவ மன்னன் சிவபெருமானிடம் மிகுந்த பக்தி பூண்டவன். அவனுடைய மகள் தீர்க்க முடியாத நோயினால் துன்புற்றிருந்தாள். அரசன் மிகுந்த துயரத்தினால் கோயிலுக்குத் தன் மகளைக்கொண்டு சென்று இறைவன் முன்னே கிடத்தினான். அதே சமயம் சம்பந்தர் அக்கோயிலுக்கு வந்து சேர்ந்தார். நினைவிழந்து கிடக்கும் பெண்ணின் பரிதாபகரமான நிலையை அவர் பார்த்தார். இறைவனுடைய கருணையை வேண்டி அவர் ஒரு பதிகம் பாடினார். அனைவரும் வியப்படையுமாறு அவள் உடனே எழுந்து நின்றாள். இந்த அற்புதத்தினால் அனைவரும் ஆச்சரிய மடைந்தனர்.

தம் தலயாத்திரையினிடையே, சம்பந்தர் செங்குன்றூருக்கு வந்தபோது குளிர் மிகவும் கடுமையாக இருந்ததையும், அதனால் பலரும் பாதிக்கப்பட்டதையும் கண்டார். தங்கள் துன்பங்களைப் போக்குமாறு அவர்கள் அவரிடம் வேண்டினர். சம்பந்தர் ஒரு பதிகம் பாடினார். உடனே அவர்கள் குளிர் சுரத்திலிருந்து விடுபட்டு நலமடைந்தார்கள்.

மேலும் சில யாத்திரைகளை முடித்துக்கொண்டு சம்பந்தர் திருவாவடுதுறைக்கு வந்தார். அவருடைய தந்தை மிகவும் பெரிய ஒரு யாகத்தைச் செய்ய விரும்பினார். அதற்காக அவர் அளவற்ற நிதியை விரும்பினார். சம்பந்தர் கோயிலுக்குச் சென்று பாடல் பாடினார். உடனே ஒரு சிவகணம் தோன்றி அவருடைய கையில் ஆயிரம் பொற்காசுகள் பொதிந்த பொற்கிழியை வழங்கி, ''சிவபெருமான் இந்தப் பொற்கிழியைத் தங்களுக்கு வழங்கியுள்ளார்'' என்று கூறியது. சம்பந்தர் இறைவன் திருவருளைப் புகழ்ந்து பாடிப் பொற்கிழியைத் தம் தந்தையாரிடம் தந்து, எடுக்க எடுக்கக் குறையாத செல்வம் உள்ள உலவாக்கிழி என்று உறுதி கூறினார். அவருடைய தந்தையார் சீர்காழிக்குச் சென்றார்.

யாழ்ப்பாணருடைய அன்னையாரின் ஊர் தருமபுரம். அங்குள்ள மக்கள் யாழ்ப்பாணருடைய இசை வல்லமை குறித்துப் பெரிதும் புகழ்ந்தார்கள். யாழ்ப்பாணர் இந்தப் பெருமைக்கெல்லாம் காரணம் சம்பந்தர் தம்மை அவரோடு உடனிருக்கச் செய்த கருணையே என்றுணர்ந்தார். சம்பந்தரின் பதிகங்களில் உள்ள தெய்வீக இசையைத் தம்மால் யாழில் திரும்பவும் தாமே இசைத்தல் இயலாதென்றும் உணர்ந்திருந்தார். இதை நிரூபிக்கும் வகையில் சம்பந்தர் விநாயகப் பெருமானைப் புகழ்ந்து பாடிய ஒரு பதிகத்தை யாழ்ப்பாணர் தம்முடைய இசைக் கருவியில் வாசிக்கமுடியாது போயிற்று. நம்பிக்கையிழந்தவராய் அவர் தம் இசைக் கருவியை முறிக்கத் தலைப்பட்டார். ஆனால் சம்பந்தர் அவரைத் தடுத்துவிட்டார். தம்மால் முடிந்தவரையில் வாசிப்பதுபற்றி மனநிறைவு கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார்; அதுவே பெறற்கரிய பேறு என்றும் வலியுறுத்தினர்.

சம்பந்தர் சாத்த மங்கைக்குச் சென்றார். அங்கு திருநீலநக்க நாயனர் அவரை மிகுந்த அன்போடும் பக்தியோடும் வரவேற்றார். நாயனருடைய புகழைப் புலப்படுத்தும் பதிகம் ஒன்றைச் சம்பந்தர் பாடினர். திருச்செங்காட்டங்குடியில், இவ்வாறே சம்பந்தர் சிறுத்தொண்டரைச் சந்தித்து அவரைப் புகழ்ந்து ஒரு பதிகம் பாடினர். பெருமை மிகு அருளாளர்களின் இயல்பு இத்தகையது ஆகும். இறைவனுடைய அடியார்களையும் இறைவனாகவே பாவித்து அவர்களுடைய புகழ்களைப் புகழ்ந்து பாடி வழிபடுவார்கள். மக்களுள் ஒருவராகக் கருதிப் புகழ்வதோ வணங்குவதோ அன்று அச்செயல்; அவர்களிடம் தெய்வீகத்தன்மை புலப்படுவதே இதற்குக் காரணம்.

அங்கு தங்கியிருந்த நாட்களில் சம்பந்தர் இறைவனை வழிபடுவதற்காக நாள்தோறும் திருமருகளுக்குச் செல்வார். ஒரு நாள் ஒரு வணிகன் தன் மனைவியுடன் அங்கு வந்தான். அவர்கள் உறங்கிக் கொண்டிருந்த போது நஞ்சுமிகுந்த பாம்பொன்று அந்த மனிதனைத்

தீண்டவே அவன் இறந்தான். மருத்துவர்கள் பலரும் அவனை உயிர்ப்பிக்க முயன்று தோல்வியுற்றனர். அவனுடைய மனைவி கருணை காட்டுமாறு இறைவனிடம் முறையிட்டாள். அந்த நேரத்தில் சம்பந்தர் கோயிலுக்கு வந்து அப்பெண்ணின் அழுகுரலைக் கேட்டார். சம்பந்தர் அவளுக்கு ஆறுதல் கூறினார். அவள் அவரிடம் நிகழ்ந்ததை எடுத்துச் சொல்லித் தன் பரிதாப நிலையைப் புலப்படுத்தினாள். சம்பந்தர் ஒரு பதிகம் பாடவும் வணிகன் உடனே உயிர் பெற்றெழுந் தான். அனைவரும் அடியாரின் புனிதமான திருவடி களில் பணிந்து வணங்கினர்.

சிறுத் தொண்டரின் வேண்டுகோளுக்கிணங்கிச் சம்பந்தர் செங்காட்டங்குடி இறைவனின் காட்சியைக் காண விரும்பினார். அவர் இறைவனிடம் விடை பெற்றுப் புறப்படுகையில் செங்காட்டங்குடியில் உள்ள கோலத்தை இறைவன் அவருக்குக் காட்டினார். வழியில் சம்பந்தர் திருப்புகலூரில் முருக நாயனாரின் விருந்தின ராகத் தங்கி அவருடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடினார்.

அப்பர் சுவாமிகளின் கருத்துரையின்படிச் சம்பந்தர் திருவாரூக்குச் சென்று தியாகேசப் பெருமானுடைய காட்சியைக் கண்டார். இதன் பின்னர் அடியார்கள் இருவரும் முருக நாயனாருடன் சில காலம் தங்கியிருந் தனர். பின்னர் இருவரும் திருக்கடவூருக்குச் சென்று குங்கிலியக்கலய நாயனாரைச் சந்தித்து அவருடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடினர்.

பின்னர் இருவரும் திருவீழிமிழலைக்கு வந்தனர். அங்கு அவர்கள் தங்கியிருந்தபோது சீர்காழி அந்தணர்கள் வந்து சம்பந்தரைச் சந்தித்து, தோணி யப்பரின் காட்சியைக் காண அவரைச் சீர்காழிக்குச் செல்லுமாறு வேண்டினர். ஆனால் இறைவன் தம் ஞானக்குழந்தை இப்படியொரு பயணத்தை மேற் கொள்வதை விரும்பவில்லை. அடுத்த நாள் காலையில் சம்பந்தர் அங்குள்ள கோயிலுக்கு வழிபாடு செய்வதற்

காகச் சென்றார். அங்கு அவர் தம் முன்னால் தோணி யப்பர் வீற்றிருக்கக் கண்டார். அவர் இறைவனுடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடினார். பக்தர்களுக்கு இந்த நிகழ்ச்சியை அவர் எடுத்துச் சொல்லி அவர்களைச் சீர்காழிக்குத் திரும்பிச் செல்லுமாறு அனுப்பினார்.

அப்பரும், சம்பந்தரும் திருவீழிமிழலையில் மேலும் சில காலம் தங்கியிருந்தனர். அப்போது அங்கு கொடிய பஞ்சம் ஏற்பட்டது. பக்தர்களின் துயரங்களைக் கண்டு அப்பரும், சம்பந்தரும் மனம் மிகவும் நெகிழ்ந்தனர். அவர்கள் இறைவனிடம் முறையிட்டனர். இறைவன் நாள்தோறும் அவர்களுக்குப் பொற்காசுகள் உதவுவதாக வாக்களித்தார். அவர்கள் அவற்றைக் கொண்டு மக்களுக்கு உதவி செய்யலாம். கோயிலின் இருவேறு வாசல்களில் இருவரும் பொற்காசுகளைக் கண்டனர். அப்பர் தம்முடைய பொற்காசுக்கு உடனே உணவுப் பொருள்களைப் பெற முடிந்தது; ஆனால் சம்பந்தரால் முடியவில்லை. அவர் உணவுப் பொருள்களைப் பெறுவதற்கு முன்பு தம்முடைய காசுகளுக்கு நிகரான தூய பொற்காசுகளாக அவற்றை மாற்ற வேண்டியிருந்தது. அப்பர் இறைவனுக்குச் செய்யும் நேர்மையான பணிவிடையே அதற்குக் காரணம் என்று சம்பந்தர் தெரிந்து கொண்டு இறைவனைப் புகழ்ந்து பதிகம் பாடினார். இறைவன் அவருக்கும் தூய பொற்காசுகளையே தந்தார்; அதன் பின் உணவுப் பொருள்களைப் பெற அவருக்கு இடையூறு ஏற்படவில்லை.

அவர்கள் திருமறைக்காட்டில் (வேதாரணியம்) நடத்திய அற்புதம் ஏற்கனவே அப்பர் சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றைக் கூறியபோது சொல்லப் பட்டுள்ளது.

ஏற்கனவே சொல்லப்பட்டதுபோல சமண சமயச் செல்வாக்கு மதுரையில் வளர்ந்து கொண்டு வந்தது; மன்னனும் அதையே தழுவினான். இந்தச் செல்வாக்குக்கு ஆளாகாதவர் இருவர் மட்டுமே இருந்தனர்;

அவர்கள் அரசி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர்குலச்சிறை நாயனுரும் ஆவர். அரசனுடைய சினத்துக்கு அஞ்சி அவர்கள் சைவ சமயத்திற்கான புறச் சின்னங்களை அணியவில்லை; எனினும் அவர்கள் உள்ளுணர்வின் உறுதியால் சைவராக இருந்தனர். அவர்கள் சம்பந்தரின் பெருமைகளைப்பற்றிக் கேள்விப் பட்டிருந்தனர். எனவே அரசனுக்குத் தெரியாமல், திருமறைக்காட்டுக்கு அறிவுடையார் சிலரை அனுப்பிச் சமணத்தின் செல்வாக்கிலிருந்து சைவ சமயத்தைக் காப்பாற்றுமாறு சம்பந்தரிடம் வற்புறுத்திச் சொல்லுமாறு செய்தனர். மதுரைக்கு உடனே செல்ல விரும்புவதாக சம்பந்தர், அப்பரிடம் தெரிவித்தார். ஞானக் குழந்தையாரிடம் இருந்த பேரன்பினுலே அப்பர், செல்லவேண்டாமென்று தடுத்து வேண்டினுர்; ஆனுல் அவருடைய தெய்வீக இயல்பினை உணர்ந்து விடை கொடுத்து அனுப்பினுர். பாண்டிய நாடு முழுதும் வாழ்ந்து கொண்டிருந்த சமணர் தீய சகுனங்கள் நிகழக் கண்டனர். அவர்கள் அரசனிடம் முறையிட்டார்கள். மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பல நல்ல சகுனங்களைக் கண்டு மகிழ்ச்சியடைந்தனர்.

இதற்குள் ஞானசம்பந்தருடைய வருகைபற்றிய செய்தியை அரசியார் அறிந்து அவரை வரவேற்பதற்காக அமைச்சரை அனுப்பினுர். அரசியார் தாமே கோயிலுக்குச் சென்று இறைவனுக்குச் சிறப்பு வழிபாடு செய்தார். அமைச்சர் மதுரையின் எல்லை நோக்கிச் செல்கையில் தாரைகளின் ஓசையும் வேதங்களின் முழக்கமும் கேட்டார். அத்திசையை நோக்கி அவர் சென்றுர். முன்னே வந்துகொண்டிருந்த பக்தர்களின் தோற்றத்தைக் கண்டமாத்திரத்தில் அவர் மனக் கிளர்ச்சி பெற்றுர். அவர் அவர்களின் திருவடிகளில் வீழ்ந்தவராய் அப்படியே கிடந்தார்; எழுந்திருக்கவே இல்லை. அடியார்கள் இச் செய்தியைச் சம்பந்தரிடம் சென்று தெரிவித்தனர். சம்பந்தர் பல்லக்கை விட்டிறங்கினுர்; குலச்சிறையாரிடம் வந்து சேர்ந்தார். அவர் அமைச்சரைத் தூக்கி நிறுத்தித் தழுவிக் கொண்டார். சம்பந்தர் அங்கிருந்தவாறே கோயிலின்

விமானத்தைக் கண்டு தாம் சேய்மையிலிருந்தாலும் இறைவனை அக்கணமே வழிபட்டார். அரசியாரையும் அமைச்சரையும் புகழ்ந்து அவர்களின் பெருமைகளைப் பற்றிப் பாடல்கள் பாடினுர். அவர்கள் கோயிலுக்குச் சென்றனர். அங்கு ஒருபுறம் இருந்த அரசியார் சம்பந்தருக்கு மானசீகமாக வணக்கங்களைச் செலுத்தினுர். பின்னர் அரசியார் அவருடைய திருவடிகளில் பணிந்து வணங்கினுர். சம்பந்தர் நல்லாசிகளை வழங்கினுர்.

சம்பந்தருடைய வருகைபற்றிய செய்தி சமணர்களுக்கு எட்டியது. புனித மந்திரமான பஞ்சாக்ஷரத்தின் அலைகள் அவர்களுடைய செவிகளை ஊடுருவிச் சென்றன. சம்பந்தரை வரவேற்றவர்களின்மீது அரசனுடைய சினம் பாயும்படியாகச் செய்யவேண்டுமென்று தீர்மானித்தனர். நகருக்குள் வந்துள்ள சைவர்களின் காட்சியால் அவர்கள் அனைவரும் தீட்டுப் பட்டுவிட்டதாகவும், சிவபெருமானிடம் நேரில் தெய்வீக ஞானத்தைப் பெற்ற அந்தணச் சிறுவனைப் பின்பற்றி அவர்கள் வந்துள்ளார்கள் என்றும், சமயம் பற்றிய வாக்குவாதம் நிகழ்த்தித் தம்மை வெற்றிகொள்ளவே அச்சிறுவன் வந்திருப்பதாகவும் அவர்கள் அரசனிடம் கூறினர்.

அரசன் ஆலோசனை நடத்தினுன். சம்பந்தர் தங்கியுள்ள மடத்திற்கு மந்திர ஆற்றலால் நெருப்பூட்ட சமணர் அரசனின் இசைவு வேண்டினர். அவனும் இசைவு தந்தான். ஆனுல் அது வெற்றி பெறவில்லை. இடையில், அரசனுடைய கவலையைக் கண்டு அரசியார் காரணத்தை நிச்சயித்து, இரு சமயத்தாரையும் அழைத்துத் தத்தம் வாதங்களை எடுத்துரைத்து எச்சமயம் உயர்ந்ததென்று நிரூபிக்கச் சொல்லுவோம் என்று யோசனை கூறினுர். அரசன் இணங்கினுன்.

சமணர்கள் சம்பந்தருடைய மடத்துக்கு நெருப்பை மூட்ட முயன்று தோல்வியடைந்தனர். எனவே, அடியார்கள் தங்கியிருந்த மடத்துக்கு நெருப்பிட்டனர்.

அவர்கள் ஓடிச் சென்று சம்பந்தரிடம் நிகழ்ந்ததைத் தெரிவித்தனர். கன்ம விதியின்படி, நெருப்பிடக் காரணமாக இருந்த அரசனையே சென்று அது பற்ற வேண்டும் என்று அவர் ஒரு பதிகம் பாடினார். அடுத்த நாட் காலையில் இச் செய்தி அரசியாருக்கும், அமைச்சருக்கும் எட்டியது. அவர்கள் பெரிதும் வருந்தினர். அவர்கள் தம் உயிரை மாய்த்துக்கொள்ள விரும்பினார்கள்; ஆனால் சம்பந்தருக்கோ, அடியார்களுக்கோ எவ்விதமான தீங்கும் நேரவில்லை என்று கேள்வியுற்ற பிறகு தம் மனத்தை மாற்றிக்கொண்டனர். சம்பந்தர் பதிகம் பாடியவுடனே, மடத்தில் பற்றிய நெருப்பு அணைந்துபோயிற்று; வெப்பு நோய் என்னும் கொடிய வடிவில் அரசனை நோக்கிச் சென்றது. அரசன் தன் உடம்பெங்கும் பற்றி எறிகின்ற எரிச்சலை அனுபவித்தான். மருத்துவர்களும், சமண குருமார்களும் அரசனுடைய துயரத்தைத் தணிவிக்க மேற்கொண்ட எல்லா முயற்சிகளும் வீணாயின. அரசியாரும் அமைச்சர்களும் அரசன் உற்ற துன்பத்திற்குரிய உண்மையான காரணத்தை அறிந்து கவலை கொண்டனர். அவர்கள் தங்கள் உணர்வுகளைத் தெரிவித்துச் சம்பந்தருடைய கருணையால் அவனுடைய துன்பம் நீங்குவதற்காக அவரை உடனே வரவழைக்குமாறு வேண்டினர். அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கிய அரசன், சம்பந்தர் தன் நோயைக் குணப்படுத்தினால் அவருடைய மதத்தைத் தழுவுவதென்று முடிவு செய்து கொண்டான்.

உடனே அரசியார் தம்முடைய பணிப் பெண்கள் புடைசூழச் சம்பந்தரை அழைக்கச் சென்றார். குலச்சிறையாரும் அவருக்கு முன்னே சென்றார். அவர்கள் சம்பந்தர் தங்கியிருந்த மடத்தை அடைந்தனர். அவர்கள் அவருடைய திருவடிகளில் வீழ்ந்து அரசனுடைய நிலைமையைத் தெரிவித்தனர். "சமணர்களின் தீச்செயல் அரசன்மீது திரும்பியதால் அவன் தீர்க்க முடியாத நோயால் துன்புறுகின்றான்; சமணர்களால் குணப்படுத்த முடியவில்லை. அரசனைத் துன்பத்திலிருந்து விடுவிக்குமாறும், சமணர்களை

வாதிட்டு, வென்று அரசன் சைவத்தின் மேன்மையை உணரச் செய்யுமாறும் தங்களைக் கூப்பிய கரங்களுடன் வேண்டுகிறோம்.'' அவர்களுடைய விருப்பங்களை நிறை வேற்றுவதாகச் சம்பந்தர் வாக்குறுதி தந்தார். சமணர்களை வாதிட்டு வெல்லவும், நாட்டில் சைவத்தை நிலைநாட்டவும் இறைவனுடைய திருவருளை வேண்டி வழிபட அவர் கோயிலுக்குச் சென்றார்.

அரசியாரும், அமைச்சரும் பின் தொடர்ந்து வரச் சம்பந்தர் அரண்மனை நோக்கிச் சென்றார். அரசன் அவரை எல்லா மரியாதைகளுடனும் வரவேற்றான். சமணர்கள் கவலை கொண்டு அரசனிடம் தந்திரமாகத் தெரிவித்த கருத்து, சம்பந்தரால் அவன் குணமடைந்தாலும், சமண சமயத்தைப் பாதுகாப்பதற்காக அந்தப் பெருமையை அரசன் அவர்களுக்கே தரவேண்டும் என்பதாம். அரசன் துரோகம் செய்யவும், நீதி தவறவும் முடியாதென்று மறுத்துவிட்டான். சம்பந்தர் அரசனுடைய அறைக்கு வந்தார். அரசன் அவரை அழகாக அலங்கரிக்கப் பெற்ற உயர்ந்த இருக்கையில் அமரச் செய்தான்; இது சமணர்களுக்கு எரிச்சலை மூட்டியது. அவர்கள் அவரை வாதுக்கு அழைத்தனர். குழந்தையாக உள்ள சம்பந்தரிடத்தில் அவர்கள் முரட்டுத்தனமாக நடந்துகொள்வார்களோ என்று அரசியார் அஞ்சினார். அரசனுடைய நோய் முதலில் குணப்படுத்தப்பட வேண்டும் என்று அவர் யோசனை கூறினார். அரசனும் இதற்கு இசைந்தான். எதைப் பற்றியும் தாம் அஞ்சவில்லை என்று சம்பந்தர் அரசியாருக்கு வலியுறுத்திக் கூறினார்.

அரசன் இரு சாராரையும் தன் நோயைக் குணப் படுத்துவதன்மூலம் தங்கள் தங்கள் சக்தியைக் காட்டுமாறு கேட்டுக்கொண்டான்; சமணர் அரசனுடைய உடம்பின் இடது புறத்தைக் குணப்படுத்த முன் வந்தனர்; சம்பந்தருக்கு வலது பக்கத்தை ஒதுக்கினர். அரசனும் இசைந்தான். சமணர் அரசனுடைய உடம்பின் பல பகுதிகளையும், மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு மயில் தோகையினால் தடவிக் கொடுத்தனர்.

நோயோ இன்னும் மிகுதியாயிற்று. அரசன் சம்பந்தரிடம் பார்வையால் முறையிட்டான். சம்பந்தர் திருநீற்றுப் பதிகம் பாடி அரசனுடைய உடம்பின் வலது புறப் பகுதிகளில் தம் கையால் திருநீறு பூசினர். உடனே எரிகின்ற உணர்ச்சி நின்றுவிட்டது; அரசன் தண்மையான குளிர்ச்சியை அனுபவித்தான். அரசன் சமணர்களைப் பார்த்து அவர்கள் ஏற்கனவே தோற்றுவிட்டனர் என்று கூறிச் சம்பந்தரை நோக்கித் தன் உடம்பின் இடதுபுறப் பகுதியையும் குணப்படுத்துமாறு வேண்டினன். சம்பந்தர் அரசனுடைய இடதுபுறத்திலும் திருநீறு பூசினர்; நோய் முற்றிலும் மறைந்துவிட்டது. அரசியாரும் அமைச்சரும் சம்பந்தரின் திருவடிகளில் பணிந்தனர். அரசனும் அவ்வாறே பணிந்து சம்பந்தரைப் புகழ்ந்தான்.

சமணர்களோ, சம்பந்தர் குணப்படுத்தியதற்குக் காரணம் அவருடைய பாடல் பாடும் சக்தியே என்று கூறித் தத்துவ வாதத்தில் தங்களைத் தோல்வியுறச் செய்ய முடியாது என்று உறுதியாகக் கூறினர். அவர்கள் சம்பந்தரை வெற்றி கொள்வதற்கு வேறு வழிகளைப்பற்றி ஆலோசனை செய்யத் தொடங்கினர். சம்பந்தர் அவர்களை வாதாடப் பொது மேடைக்கு அழைத்தபோது அவர்கள் சொல்லாற்றலைக் காட்டுவதைவிட்டுச் செயலாற்றலை வெளிப்படுத்துவதை விரும்பினர். அக்கினிப் பரீட்சைக்கு அவர்கள் சம்பந்தரை அறைகூவி அழைத்தனர். இருசாராரும் தத்தம் மதங்களின் சாரத்தை பனை ஓலைகளில் எழுதி நெருப்பில் இடுவதென்றும், யாருடைய பனை ஓலை எரியாமல் இருக்கிறதோ அவருடைய மதம் வென்றதாகவும், உண்மையானதாகவும் கருதப்படும் என்று அவர்கள் கூறினர். சம்பந்தர் இந்த நிபந்தனைக்கு இசைந்தார். அக்கினி மூட்டப்பட்டது. சம்பந்தர் இறைவனை வணங்கித் தம் பாசுரங்கள் உள்ள பனை ஓலைக் கட்டை அவிழ்த்து அவற்றுள் திருநள்ளாற்றுப் பதிகத்தை எடுத்தார். சம்பந்தருக்குச் சிவபெருமானே என்றும் நிலைத்திருக்கும் சத்தியம். எனவே அவரைப் புகழ்ந்து கூறும் பாடலும் என்றென்றும் நிலைத்திருக்க

வேண்டும். பனை ஓலைக்கு எவ்விதமான தீங்கும் ஏற்படாதென்ற உறுதியான நம்பிக்கையுடன் அவர் அதை நெருப்பில் இட்டார். சமணர்களும் தாம் எழுதியவற்றை நெருப்பில் இட்டனர். அவர்கள் இட்டவை உடனே எரிந்துபோயின; சம்பந்தருடைய ஓலை பச்சை ஓலையாகவே பாதுகாப்பாக இருந்தது. சமணர்கள் அரசனுடைய முகத்தை ஏறெடுத்துப் பார்க்க முடியாமல் அவமானத்தால் தலை குனிந்தனர். சமணர்கள் இரண்டாவது முறையாகத் தோல்வியடைந்தனர் என்று அரசன் அறிவித்தான்.

எனினும், சமணர் இதை ஏற்க மறுத்து மூன்றும் முறையாக ஒரு சோதனை செய்ய விரும்பினர். இம் முறை இருசாராரும் தங்கள் தங்கள் பனை ஓலைகளை வைகை நதியில் இடுவதென்றும், நதியின் போக்கை எதிர்த்துச் செல்லும் பனை ஓலை சத்தியம் தாங்கியதென்றும் அறிவித்தனர். சம்பந்தர் இதற்கும் இசைந்தார். இம்முறை குலச்சிறையார் குறுக்கிட்டு இச் சோதனையில் தோற்றவர் பெறும் தண்டனை யாது? என்று வினவினார். சினம் மிகுந்த சமணர் தோற்றால் கழுமரத்தில் ஏறுவதாகக் கூறினர். சமணர் தங்கள் பனை ஓலையை ஆற்றில் இட்டனர். ஆற்றில் நீரின் வேகம் மிகுந்திருந்த காரணத்தால் ஆறு ஓலையை அடித்துக்கொண்டு போயிற்று. சம்பந்தர் இட்ட ஓலை அழகாக ஆற்றின் போக்கை எதிர்த்து, மூழ்கிவிடாமலும், காணுமற்போகாமலும் நீந்திச் சென்றது. இச் சோதனையை வென்ற பதிகத்திலும் சம்பந்தர் அரசன் மீது கருணை காட்டுமாறு இறைவனை வேண்டியிருந்தார். இக்காரணத்தினுல் அரசனுக்குப் பிறவிக் குறையாக இருந்த முதுகு கூன் குணமாகி நிமிர்ந்தது. ஏடு கரையேறிய இடம் திருவேடகம் என்று புகழ்பெற்றது. அமைச்சர் அந்த ஏட்டினை எடுத்துக்கொள்வதற்காகப் பின் தொடர்ந்து சென்ருர். இதையறிந்த சம்பந்தர் மற்ருெரு பதிகம் பாடவே ஏடு மேலே செல்லாமல் நின்றது. அமைச்சர் அந்த ஏட்டினை எடுத்துக்கொண்டு அங்கு இருந்த கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டார். சம்பந்தர், அரசனும்

அரசியாரும் உடன்வரக் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டார். அரசன் சைவ சமயத்தின் உயர்வை உணர்ந்து ஒப்புக்கொண்டான். சமணர்கள் தாங்களே விதித்துக்கொண்ட நிபந்தனையின்படிக் கழுவேறினர். மக்கள் அரசனைப் பின்பற்றிச் சைவ சமயத்தைத் தழுவினர். இவ்வாறு சைவ சமயம் மதுரையில் மீண்டும் நிலைபெற்றது.

சீர்காழியில், சம்பந்தருடைய தந்தையார் அனைவருக்கும் வழிகாட்டியாக விளங்கும் தம் மைந்தரின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தார். விருப்பம் மீதூர்ந்த காரணத்தால் ஒருநாள் சிவபாத இருதயர் மதுரைக்கே வந்துவிட்டார். சம்பந்தர் மிகுந்த மரியாதையுடன் தந்தையாரை வரவேற்றார்.

மதுரையில் சில காலம் தங்கியிருந்தபின் சம்பந்தர் அரசனும் அரசியாரும் அமைச்சரும் உடன்வர ஒரு தலயாத்திரையை மேற்கொண்டார். இராமேசுவரத்திலிருந்தவாறு அவர்கள் இலங்கையில் உள்ள திருக்கோணமலை, திருக்கேதீசுவரம் ஆகிய தலங்களில் எழுந்தருளியுள்ள இறைவன் திருவடிகளுக்கு மானசீகமாக வணக்கங்கள் செலுத்தினர். அமைச்சர் பிறந்த ஊருக்கும் சென்று மகிழ்ந்தனர். பாண்டிய மன்னனிடம் விடைபெற்றுக்கொண்டு சம்பந்தர் சோழ நாட்டுக்குச் சென்றார்.

அவர் முள்ளிவாய்க் கரைக்கு வந்தார். அங்கு ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. ஓடம் செலுத்துவோர் கரையில் உள்ள மரத்தில் ஓடங்களைக் கட்டிவைத்துவிட்டுச் சென்றுவிட்டார்கள். சம்பந்தர் ஆற்றைக் கடந்து திருக்கொள்ளம் புதூரில் உள்ள இறைவனை வழிபட விரும்பினார். சம்பந்தர் அடியார்களிடத்தில் ஓடத்தை அவிழ்த்து அதில் ஏறிக்கொள்ளுமாறு கூறினார். அவர் ஒரு பதிகம் பாடினார். அவருடைய நாவலமே கோலாக அமைந்தது. அவர்கள் நலமாக மறுகரை சேர்ந்து இறைவனை வழிபட்டனர்.

அடியார் கூட்டம் பின்னர் போதிமங்கை என்னும் ஊரை அடைந்தது. அது பௌத்தர்களின் செல்வாக்கு மிகுந்த இடம். சம்பந்தரிடம் அன்புபூண்ட அடியார்கள் அவ்வூருக்குள் நுழையும்போது தாரை முதலியன முழக்கித் தம் குருவின் பெருமைகளைப் பாடிக்கொண்டு வந்தனர். அவற்றைக்கேட்டு மனம் பொருத பௌத்தர்கள் தாரை முழக்குவதை நிறுத்துமாறு கூறினர். அடியார்கள் சம்பந்தருக்கு இதைத் தெரிவித்தனர். சம்பந்த சரணலயர் என்னும் பெயருள்ள, சம்பந்தரின் சீடர் சம்பந்தரின் திருப்பதிகங்களை ஓலையில் எழுதுபவர்; அவர் தாமே சம்பந்தரின் இசைவால் ஒரு பதிகம் பாடிப் பௌத்தர் குழுவின் தலைவனாகிய புத்தநந்தியின் தலைமீது இடி விழட்டும் என்று கூறினர். உடனே புத்தநந்தி இடிவிழுந்து அழிந்தான். மற்றவர்கள் அஞ்சியோடினர். ஆனால் அவர்கள் விரைந்து சாரிபுத்தன் என்பவனுடைய தலைமையில் ஒருங்கு திரண்டு முன்வந்து சைவ சமயத்தவரை வாதத்துக்கு அழைத்தனர். சம்பந்தரின் நல்லாசிகள்பெற்றுச் சம்பந்த சரணலயரே வாதத்தில் பௌத்தர்களை வெற்றிகொண்டார். சாரிபுத்தனே சைவ சமயத்தைத் தழுவினன்; அவனுடைய சீடர்களும் அவனைப் பின்பற்றினர்கள். சம்பந்தர் அனைவர்க்கும் அருளாசிகள் வழங்கினர்.

பின்பு சம்பந்தர் திருக்கடவூருக்குச் சென்றார். அப்பர் சுவாமிகள் திருப்பூந்துருத்தியில் இருப்பதைக் கேள்வியுற்றவுடனே சம்பந்தர் அவரைச் சந்திப்பதற்காக முன்னே சென்றார். அதேசமயம் அப்பரும் சம்பந்தரை வரவேற்பதற்காகப் பாதிவழி வந்துவிட்டார். அமைதியாக அவர் கூட்டத்தில் கலந்துகொண்டு சம்பந்தருடைய பல்லக்கைச் சுமந்து செல்பவர்களுடன் சேர்ந்துகொண்டார். இது யாருக்கும் தெரியவில்லை. 'அப்பர் எங்குற்றார்' என்று சம்பந்தர் வினவியபோது, 'ஒப்பரிய தவஞ் செய்தேன் ஆதலினால் உம்மடிகள், இப்பொழுது பல்லக்கைத் தாங்கிவரப்பெற்று உய்ந்தேன் யான்' என்று அப்பர் கீழிருந்தவாறு பதில் சொன்னார். சம்பந்தர் வியப்புற்று

உடனே கீழே குதித்து அருட்பெரியவராகிய அப்பரைத் தழுவிக்கொண்டார்.

மேலும் சில தலங்களுக்கு யாத்திரை செய்த பின்னர் சம்பந்தர் சீர்காழிக்குத் திரும்பி வந்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவருடைய துணைவி யாரும் சம்பந்தரிடம் விடைபெற்றுத் தம் இல்லத் திற்குத் திரும்பிச் சென்றனர்.

சம்பந்தர் தொண்டை நாட்டுக்குச் செல்லவேண்டு மென்று விரும்பினார். தோணியப்பரிடம் விடைபெற்று அவர் சீர்காழியை விட்டுப் புறப்பட்டார். வழியில் பல தலங்களையும் வழிபட்டு மகிழ்ந்து அவர் திருவண்ணா மலைக்கு வந்து சேர்ந்தார். மலையின் காட்சியைக் கண்ட மாத்திரத்தில் அவர் பரவசமடைந்தார். தரையில் விழுந்து புரண்டு பக்திக் கண்ணீர் மழையாகப் பொழிந் தார். பின்னர் அவர் தொண்டை நாட்டை அடைந்து திருவோத்தூருக்கு வந்தார். அங்கு அவர் தங்கியிருந்த காலத்தில் ஒரு பக்தர் வந்து என் தோட்டத்தில் பல பனைமரங்களை நட்டு வளர்த்தேன்; ஆனால் அவை ஆண் பனைகள்; அவை பழங்கள் தருவதில்லை, சமணர்கள் என்னைப்பார்த்து கேலி செய்கின்றனர். அவர்கள் பழிப்பதிலிருந்து என்னைத் தப்புமாறு செய்யுங்கள்' என்று வேண்டினார். சம்பந்தர் கோயிலுக்குச் சென்று, பக்தரின் பரிதாப நிலையைக் குறிப்பிட்டுப் பதிகம் பாடினார். உடனே ஆண் பனைகள் பெண் பனைகளாக மாறி நல்ல பழங்களைத் தந்தன. இந்த அற்புதத்தினால் மேலும் பல சமணர்கள் சைவ சமயத்தைத் தழுவினர். சம்பந்தர் தனிச்சிறப்புடன் பனைமரங்களைக் குறிப்பிட்டதனால் அவையும் பிறவித்தளை நீங்கின. ஒவ்வொரு தலமாகக் கடந்து சம்பந்தர் திருவாலங் காட்டுக்கு வந்து சேர்ந்தார். காரைக்காலம்மையார் அங்கு தம் காலடிபட்டுக் களங்கம் ஏற்படுவதை விரும்ப வில்லையாதலால் தம் தலையால் நடந்த புனிதமான தலம் அது. சம்பந்தரும் அங்கு நுழையாமல் எல்லையிலேயே தங்கினார்; ஆனால் கனவில் இறைவனுடைய காட்சி அவருக்குக் கிடைத்தது. சம்பந்தர் பின்னர் காளஹஸ்

திக்குச் சென்று கண்ணப்ப நாயனாரின் கோலத்தைத் தரிசித்து மகிழ்ந்தார். அங்கிருந்தவாறே கைலாசம், கேதாரம், கோகர்ணம், திருப்பருப்பதம், இந்திரநீல பர்வதம் முதலிய தலங்களை மனத்தால் தரிசித்துத் திருவொற்றியூருக்கு வந்து சேர்ந்தார்.

மயிலாப்பூரில் சிவநேசனார் என்ற வணிகர் வாழ்ந்து வந்தார். அவர் திடமான சிவபக்தர். அவருக்கு எல்லாச் செல்வங்களும் இருந்தன; ஆனால் குழந்தைப் பேறு வாய்க்கவில்லை. அவருடைய நேர்மையான வழிபாட்டுக்கு விடைதரும் முறையில் சிவபெருமான் அவருக்கு ஒரு பெண் குழந்தைப்பேற்றை அருளினார். அவர்கள் பூம்பாவை என்று பெயரிட்டனர். அவள் மிகுந்த அழகுடன் விளங்கினாள். சிவநேசர் சம்பந்தருடைய பெருமையைக் கேள்வியுற்று அவரே தம் பெண்ணுக்குத் தகுந்த கணவன் என்று உணர்ந்தார். மானசீகமாக அவர் அவளைச் சம்பந்தருக்கு மணம் புரிவித்தார்.

ஒருநாள் பூம்பாவை பூந்தோட்டத்தில் மலர்களைப் பறித்துக்கொண்டிருந்தபோது ஒரு நச்சரவம் தீண்டவே உயிர் துறந்தாள். அவளை உயிர்ப்பிக்க வல்லவருக்குப் பெருநிதி தருவதாகச் சிவநேசர் அறிவித்துங்கூட யாராலும் முடியவில்லை. அதன் பின்னர் அவர் அவளைச் சம்பந்தருக்கு மானசீகமாக மணம் புரிவித்ததை நினைவு கூர்ந்தார். இது அவருக்குப் பெரும் தைரியத்தைத் தந்தது. அவர் உடனே பெண்ணின் சடலத்தைச் சிதையில் எரியூட்டிச் சாம்பலை ஒன்று திரட்டி ஒரு குடத்தில் சேமித்து வைத்தார். நாள்தோறும் அவர் குடத்தை மலர்கள் முதலியவற்றால் அலங்கரித்து அருகில் அமர்ந்து சம்பந்தரைத் தியானித்து வந்தார். சம்பந்தர் திருவொற்றியூருக்கு வந்துள்ளார் என்ற செய்தியை வணிகர் அறிந்தார். அவர் உடனே மயிலாப்பூருக்கும் திருவொற்றியூருக்குமாக மிக நீண்ட பெரிய பந்தலை நிறுவி அடியார்கள் புடைசூழச் சம்பந்தரைச் சந்திப்பதற்காகத் திருவொற்றியூரை நோக்கிப் புறப்பட்டார்.

சம்பந்தரும் மயிலாப்பூரை நோக்கி வந்துகொண்டிருந்தார். வழியில் இருவரும் சந்தித்தனர். சிவநேசரைப் பற்றியும் அவர் தம் பெண்ணின் சாம்பல் அடங்கிய குடத்தை வழிபட்டுவருவதைப் பற்றியும் சம்பந்தர் கேள்விப்பட்டிருந்தார். பெண்ணை உயிர்ப்பித்துச் சிவநேசரை மகிழ்விக்க வேண்டுமென்று சம்பந்தர் விரும்பினர். அவர்கள் மயிலாப்பூரையடைந்து இறைவனை வணங்கிப் பாடல்கள் பாடியபின் கோயிலுக்கு வெளியில் வந்து, குடத்தைக் கொண்டுவருமாறு சிவநேசரிடம் கூறினர். சம்பந்தர் குடத்தைப் பார்த்து, 'பூம்பாவாய்! இவ்வுலகில் மனித யாக்கை எடுத்ததன் பயனே இறைவனுக்கும் அடியார்களுக்கும் பணிவிடை செய்து சிவபெருமானுக்குரிய திருவிழாக் கோலங்களைக் கண்ணாரக் கண்டு மகிழ்வது தானே! திருவிழாவைக் காணுமல் நீ போதியோ?' என்று கூறிப் பதிகம் பாடினர். முதற் பாசுரத்தை அவர் முடித்தவுடன் பூம்பாவை தன் உருவம் பெற்ருள். எட்டுப் பாசுரங்களை அவர் முடித்தபோது உயிரும் வாழ்வும் பெற்று அவள் பன்னிரண்டாண்டுகள் நிறைந்த பெண் ஆனாள். அவர் பத்தாவது பாசுரத்தை முடித்தபோது செந்தாமரை மலரிலிருந்து திருமகள் பொலிவுடன் வந்ததுபோல அவள் குடத்தைவிட்டு வெளியே வந்தாள். இந்த அற்புதத்தைக் கண்டு அனைவரும் மெய்ம்மறந்தனர். சிவநேசரும், பூம்பாவையும் சம்பந்தரின் திருவடிகளில் பணிந்தனர். தம் பெண்ணை மனைவியாக ஏற்றுக்கொள்ளுமாறு சிவநேசர் சம்பந்தரிடம் வேண்டினர். சிவநேசர் மானசீகமாகச் சம்பந்தருக்கு மணம் புரிவித்த பூம்பாவை இறந்துவிட்டாள் என்றும் தற்போதுள்ள பெண் தம்மால் உயிர்ப்பிக்கப்பட்ட காரணத்தால் தமக்கு மகள் முறை ஆகின்ருள் என்றும் சம்பந்தர் சிவநேசருக்கு விளக்கிக் கூறினர். சிவநேசர் சம்பந்தருடைய விருப்பத்திற்குப் பணிய வேண்டியதாயிற்று. அவர் தம் பெண்ணுக்காக ஓர் ஆசிரமம் அமைத்துக் கொடுத்தார்; அங்கு அவள் தன் வாழ்நாளை இறை வழிபாட்டில் கழித்து முடிவில் இறைவனை அடைந்தாள்.

பின்னர் பல தலங்களையும் வழிபட்டுச் சம்பந்தர் சீர்காழிக்குத் திரும்பினர். அவர் பதினாறுண்டுகள் நிறைவு பெற்றார். அவருக்கு மணம் புரிவிக்க அவர் தந்தையார் விரும்பினார். அவர் வைதிகச் சடங்குகளைச் செய்வதில் தாம் ஈடுபட வேண்டியிருப்பதை எடுத்துரைத்தார். திருநல்லூர்ப் பெருமணம் என்ற ஊரிலிருந்த நம்பாண்டார் நம்பியின் பெண்ணைச் சிவபாத இருதயர் மணப்பெண்ணுகத் தேர்ந்தெடுத்தார். அவரும் இந்த சம்பந்தத்தை வரவேற்றார். திருநல்லூர்ப்பெருமணத்தில் திருமணம் நடத்த ஏற்பாடாயிற்று. திருமண நாளன்று சம்பந்தர் தோணியப்பரிடம் விடை பெற்றுத் திருநல்லூர்ப் பெருமணத்தை அடைந்தார். சம்பந்தர் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டு நல்லாசிகள் பெற்றார். பின்னர் அருகில் இருந்த ஒரு மடத்துக்குச் சென்றார். மணமகளின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அங்கு வந்து அவரை வரவேற்றனர். சம்பந்தர் மணக்கோலம்பூண்டு முத்துப் பல்லக்கில் ஏறி அமர்ந்தார். அவரைப் புடைசூழ்ந்து வந்த மக்கள், 'சம்பந்தர் நீடூழி வாழ்க!' என்று போற்றினார்கள். திருமணம் நடைபெறும் இடத்திற்குச் சம்பந்தர் வந்து சேர்ந்தார். சம்பந்தர் தம் மனைவியின் கையைப் பிடித்தவாறு இறைவனின் வடிவாக விளங்கும் வேள்வித் தீயைச் சுற்றி வலம் வந்தார். அடியார்கள் உடன்வர மணமக்கள் இருவரும் கோயிலுக்குச் சென்று இறைவனை முற்றிலும் சரண் அடைந்து வழிபட்டனர். சம்பந்தர் விடுதலை வேண்டிப் பதிகம் பாடினார். இறைவன் அவருடைய விருப்பத்தை நிறைவேற்றிச், "சம்பந்தரே! நீரும், உம் மனைவியும், உங்கள் திருமணத்தைக்கண்டு மகிழ்ந்த மக்கள் எல்லோரும் சிவ ஜோதியில் கலந்து என்னிடம் வாருங்கள்' என்று தெரிவித்தார். உடனே இறைவனிடத்திலிருந்து பேரொளி தோன்றியது. அந்தப் பேரொளியில் கலப்பதற்குமுன் சம்பந்தர் பாடிய பதிகம் பஞ்சாக்ஷரப் பதிகம் என்று புகழ்பெற்று விளங்குகிறது. பின்னர் அங்கிருந்த அனைவரும் சிவப் பேரொளியில் கலந்தனர். திருநீலநக்க நாயனர், முருக நாயனர், திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஆகியோரும் அங்கு இருந்தனர்.

# 29. ஏயர்கோன் கலிக்காம நாயனுர்

பொன்னி நாட்டில் உள்ள திருப்பெருமங்கலம் என்ற ஊரில் ஏயர்கோன் கலிக்காம நாயனுர் என்ற வேளாளர் வாழ்ந்து வந்தார். அவர், சோழ மன்னர்களுக்குப் படைத் தலைவர்களை உதவும் 'ஏயர்குடி' என்ற குடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் சிவபெருமானின் பெரும் பக்தர்.

சுந்தரமூர்த்தி நாயனுர் தமக்கும் தம் மனைவி பரவையாருக்கும் இடையே குடும்பச் சிக்கலாகிய ஊடலைத் தீர்ப்பதற்குச் சிவபெருமானையே தூதுவராகப் பயன்படுத்தினுர் என்ற செய்தி பக்தராகிய கலிக்காமருக்குப் பெருந்துன்பத்தைத் தந்தது. அவர் தமக்குள் பின்வருமாறு சொல்லிக்கொண்டார்; "இப்படி நடந்து கொண்ட இவரும் ஒரு பக்தரா? இத்தகைய செய்தியைக் கேட்டும் என் உயிர் மூச்சு நீங்கவில்லையே! நானும் ஒரு பெரும் பாவி!"

சுந்தரர் கலிக்காமரின் இந்த மனப்பான்மையை அறிந்தார். அவர் தம்முடைய தவற்றை உணர்ந்து, கலிக்காமரின் சினத்தைத் தணிக்குமாறு இறைவனை வேண்டினுர். இறைவனும் கலிக்காமருக்குச் சூலை நோய் உண்டாகச் செய்து, அவருடைய கனவில் தோன்றிச் சுந்தரர்தான் அதைக் குணமாக்க முடியும் என்று தெரிவித்தார். சுந்தரரால் குணம் பெறுவதைக் காட்டிலும் இறப்பதே நல்லதென்று கலிக்காமர் கருதினுர். இடையில், இறைவன் சுந்தரர் கனவிலும் தோன்றிக் கலிக்காமரைச் சந்தித்து அவருடைய வயிற்றுப் பிணியைத் தீர்க்குமாறு கூறினுர். சுந்தரர் உடனே கலிக்காமரைச் சந்திக்கப் புறப்பட்டார். சுந்தரர் தம்மைக் குணப்படுத்த வருகின்றுர் என்று கேள்வியுற்றவுடனே கலிக்காமர் உடைவாளால் தம் வயிற்றைக் கிழித்துக்கொண்டு உயிர் துறந்தார்.

சுந்தரரைக் கலிக்காமரின் துணைவியார் வரவேற்றுர். சுந்தரர், நாயனுரைப் பற்றிக் கேட்டவுடனே

அம்மையாரின் ஏவலர், அவருக்கு ஏதம் ஒன்றும் இல்லை; இனிதே பள்ளி கொண்டுள்ளார் என்று தெரிவித்தனர். சுந்தரர் நாயனாரைக் காணவேண்டுமென்று மிகவும் வற்புறுத்திய பிறகு அவர்கள் நாயனாருடைய உடலைக் காண்பித்தனர். அக்காட்சியைக் கண்ட சுந்தரர் செயலற்று மனம் நொந்து தாமும் தம் கழுத்தைத் துணிக்க உடைவாளைப் பற்றினார். சிவபெருமானுடைய பெருங்கருணையால், கலிக்காமர் உடனே உயிர்பெற்றெழுந்தார். இருவரும் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டனர். கலிக்காமர் தம் எஞ்சிய வாழ்நாட்களைச் சிவபெருமானுக்கும், அடியார்களுக்கும் பணிவிடைகள் செய்வதில் கழித்து முடிவில் சிவபுரம் அடைந்து மகிழ்ந்தார்.

## 30. திருமூல நாயனார்

திருமூல நாயனார் ஒரு சைவச் சித்தர். அவர் திருநந்தி தேவரின் சீடர் எண்மருள் ஒருவர். குரு தம் சீடர்களின்மீது பெருங்கருணையைப் பொழிந்தார். அவர்கள் அனைவரும் யோகிகள். மூலனுடைய இறந்த உடம்பில் புகுந்தமையால் அவர் திருமூலர் என்று பெயர் பெற்றார்.

திருமூலர் பொதியமலையில் இருந்த அகத்திய முனிவரைக் காண விரும்பினார். எனவே அவர் கைலை மலையைவிட்டுத் தென்திசை நோக்கி வந்தார். வழியில் அவர் சைவத் தலங்கள் பலவற்றையும் வழிபட்டார். அவர் திருவாவடுதுறையை அடைந்தபோது, அவர் காவிரியில் நீராடிக் கோயிலுக்குச் சென்றார். அவர் கோயிலை இருமுறை வலம் வந்து இறைவனை வழிபட்டார். அவர் காவிரி நதியின் கரை வழியே நடந்து சென்று கொண்டிருந்தபோது பசுக்களின் மந்தை கண்ணீர்விட்டழுவதை அவர் கண்டார். பசுக்களை மேய்த்துக்கொண்டிருந்தவன் இறந்துகிடந்தமையே அவற்றின் வருத்தத்திற்குரிய காரணம் என்று அவர் கண்டறிந்தார். பசுக்களின் வருத்தத்தைப் போக்கத் திருமூலர் எண்ணம் கொண்டார். ஒரு மரத்தடியில்

தம் உடம்பைப் பாதுகாப்பாகப் பத்திரப்படுத்தி வைத்த பின்பு அவர், அந்த மாடு மேய்ப்பவனின் உடம்பில் புகுந்தார். பசுக்கள் மீண்டும் பெருமகிழ் வுற்றன. அந்த மாடு மேய்ப்பவன், சாத்தனூரில் வாழ்ந்து வந்த மூலன் என்பவன். மாலையில் அவர் பசுக்களை ஊருக்குத் திரும்பச் செலுத்தினார். மூலனுடைய மனைவி, கணவனின் வருகையை மிகவும் ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தாள். ஆனால், அவள் அன்று அவரிடம் நெருங்கி வந்தபோது, அவள் தம்மைத் தொடவும் அவர் விடவில்லை; மாறாக அவர், 'அம்மையே! நான் தங்களின் கணவரல்ல; சிவபெருமானை வழி படுங்கள். பேரின்பவீட்டை அடையுங்கள்' என்று தெரிவித்தார். அவர் அம்மையாரைவிட்டு நீங்கி அருகில் உள்ள ஒரு மடத்தில் போய் தங்கினார்.

அம்மையார் ஊர் மக்கள் தலைவர்களிடத்தில் தம் கணவரின் நடத்தையைத் தெரிவித்து முறையிட்டார். அவர்கள் அவரைப் பரிசோதித்துப் பார்த்து அவர் ஆன்மீகத்தில் மிகப் பெரும் வளர்ச்சியை அடைந் துள்ளார் என்று முடிவு செய்தனர். எனவே அவரைத் தனியே விட்டுவிடுமாறு அவர்கள் அம்மையாரைக் கேட்டுக்கொண்டனர். அடுத்த நாள், திருமூலர் பசுக் களைப் பின் தொடர்ந்தார்; ஆனால் அவர் தம்முடைய உடம்பைத் தாம் கிடத்தியிருந்த இடத்தில் காணப்பட வில்லை. அது இறைவன் திருவிளையாடல். சைவ ஆகமங்கள் அனைத்தின் சாரமாகச் சைவ சமய தத்துவத் தைப்பற்றித் தமிழில் திருமூலர் ஒரு நூலை இயற்ற வேண்டும் என்று சிவபெருமான் விரும்பினார். திருமூலர் இறைவனுடைய விருப்பத்தைத் தெரிந்து கொண்டு திருவாவடுதுறைக்குத் திரும்பினார். அவர் இறைவனை வழிபட்டபின் அருகிலிருந்த அரச மரத்தினடியில் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்தார். அவர் மூவாயிரம் ஆண்டுகள் சமாதியில் இருந்தார். ஆனால் அவர் ஆண்டுதோறும் சமாதியிலிருந்து வெளிப்பட்டு ஒரு பாடலைப் புனைவார்; இவ்வாறு அவர் மூவாயிரம் ஆண்டுகளில் மூவாயிரம் பாடல்களை இயற்றினார். இந்நூல் திருமந்திரம் என்று பெயர் பெற்றது.

இறைவனுடைய விருப்பம் இவ்வாறு நிறைவேறியது. பின்னர் திருமூலர் கைலை மலைக்குத் திரும்பிச் சென்றார்.

## 31. தண்டியடிகள் நாயனார்

சோழப் பெருநாட்டில் உள்ள திருவாரூரில் தண்டியடிகள் என்ற பெயருள்ள பக்தி மிகுந்த அடியார் வாழ்ந்துவந்தார். அவர் பிறவிக் குருடர். எனினும் அவர் எப்போதும் இறைவனுடைய திருஐந்தெழுத்தை உச்சரித்தவராய் இறைவனைத் தம் மனக்கண்ணால் கண்டு களித்து வந்தார். அவர் நாள்தோறும் கோயிலுக்குச் சென்று, சுற்றி வலம்வந்து இறைவனை வழிபட்டார்.

கோயிலின் மேற்குப் புறத்தில் ஒரு குளம் இருந்தது; அதன் கரையைச் சூழச் சைனரின் குடும்பங்கள் இருந்து வந்தன. தண்டியடிகள் குளத்தின் பரப்பைப் பெரிதாக்க விரும்பினார். ஆனால் பிறவிக் குருடராக இருந்த அவரால் எப்படி அதைச் செய்யமுடியும்? ஆனால் இறைவன்பால் கொண்டிருந்த முழு நம்பிக்கையினாலும், திடமான உறுதியினாலும் அவர் அதைச் செய்ய முடிவுகொண்டார். குளத்தினுள் தோண்டவேண்டிய இடத்தில் அவர் ஒரு கம்பத்தை நிறுவி அதற்கு ஒரு கயிற்றைக் கட்டினார். கயிற்றின் மறுமுனையைக் கரையில் நிறுவிய மற்றொரு கம்பத்தில் கட்டினார். கயிற்றின் உதவியால் தோண்டப் பட வேண்டிய இடத்தை அறிந்துகொண்டு அங்கே செல்வார். மண் வெட்டியால் அவர் தோண்டுவார்; மண்ணை ஒரு கூடையில் சேர்ப்பார்; மீண்டும் கயிற்றின் உதவியால் கரைக்குச் சென்று அங்கு மண்ணைக் கொட்டுவார்.

குருடர் செய்யும் அற்புதச் செயலைச் சைனர் கவனித்துக்கொண்டிருந்தனர். அவருடைய சாதனையைப் பற்றி அவர்கள் மிகவும் பொறாமையும் கொண்டனர். எனவே அவர்கள் அவருடைய நம்பிக்கையைக் கலைக்க விரும்பினர். அவர்கள் ஒரு தந்திரமான வாதத்தை அவர்முன் வைத்தனர். 'நீர் குருடாக இருப்பதனால்

உம்மால் பார்க்கமுடியாது, தோண்டும்போது நீர் பல உயிரினங்களைக் கொன்றுவிடுகிறீர்; அது மிக்க பெரும் பாவம்; எனவே இந்த அறிவில்லாத செயலை விட்டுவிடும்' என்று வற்புறுத்தினர். நாயனார் தம் செயலின் புனிதத் தன்மையை விளக்கினர். தம் செயல் இறைவனுக்குப் பெரு மகிழ்வைத் தருவதாகும்; இறைவனுடைய பெருங்கருணையால் எந்த உயிருக்கும் சிறிதளவும் தீங்கு ஏற்படாது என்ற தம் உறுதியைப் புலப்படுத்தினர். அவர் தம் பணியைத் தொடர்ந்து செய்து வந்தார். சைனர்கள் இப்போது அவரைக் குறைகூறி இகழ்ந்தனர். 'நீர் பிறவியில் குருடர்; தற்போது செவிடராகவும் ஆகிவிட்டீர்; நாங்கள் நல்ல அறிவுரை கூறியும் நீர் அதைக் கேட்டுக்கொள்ளவில்லை' என்று கூறினர். நாயனார், 'அறிவில்லாதவர்களே! இறைவன் பெருமைகளைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? எனக்கு அவர் ஒரே புகலிடம். அவருடைய கருணையால் நான் பார்வையைத் திரும்பப் பெற்று, நீங்கள் உங்கள் பார்வையை இழக்க நேர்ந்தால், என்ன செய்வீர்கள்?' என்று அவர்களைப் பார்த்துக் கேட்டார். இந்தப் பதிலுரை அவர்களுக்கு மிகுந்த எரிச்சலை ஊட்டியது; அவர்கள் அவரிடமிருந்த மண் வெட்டியையும் கூடையையும் பறித்துக்கொண்டனர்.

இதனால் மனம் உடைந்த தண்டியடிகள் கோயிலுக்குச் சென்று தம் துயரங்களைச் சொல்லி இறைவனிடம் முறையிட்டார். அன்று இரவில் இறைவன் அவருடைய கனவில் தோன்றி அவருக்கு உதவி செய்வதாக வாக்களித்தார். இறைவன், அரசனுடைய கனவிலும் தோன்றி நாயனாருடைய துயரங்களைப் போக்குமாறு கட்டளையிட்டார். அரசன் சைனர்களை வரவழைத்தான். தண்டியடிகளும் அங்கே சென்றிருந்தார். அரசன் தண்டியடிகளைப் பார்த்து அடியவரே! இறைவன் கருணையால் நீர் உமது பார்வையைத் திரும்பப் பெறமுடியும் என்றும், சைனர்கள் தம் பார்வையை இழப்பார்கள் என்றும் நீர் கூறினீர். இதை நிரூபித்துக் காட்டும் என்று வேண்டினன். தண்டியடிகள், 'சிவபெருமானே மெய்யான தெய்வம்,

அவர் எனக்கு ஒரே புகலிடமாகவும் ஆதரவாகவும் இருக்கின்றார். நான் அவருடைய அடிமைதான். இது உண்மையாயின், நான் என் பார்வையைத் திரும்பப் பெறுவேனாக, சைனர்கள் தம் பார்வையை இழப்பாராக!' என்று கூறினார். அவர் பிறகு திருஐந்தெழுத்தை உச்சரித்துக் குளத்தில் மூழ்கினார். அவர் முழுகி எழுந்தபோது அவர் தம் பார்வையைத் திரும்பப் பெற்றிருந்தார்; அதே நேரத்தில் சைனர்கள் தம் பார்வையை இழந்திருந்தனர். அனைவரும் இந்நிகழ்ச்சியால் பெரும் ஆச்சரியம் அடைந்தனர். அரசன் சைனர்களைத் தன் நாட்டினின்றும் வெளியேற்றி இறைவனிடம் மக்கள் நம்பிக்கைகொள்ளச் செய்தான். தண்டியடிகள் இறைவனுடைய பேரின்ப நிலையை அடைந்தார்.

## 32. மூர்க்க நாயனார்

வேளாள மரபில் தோன்றிய இவ்வடியார் தொண்டை நாட்டில் உள்ள திருவேற்காடு என்ற ஊரைச் சேர்ந்தவர். அவர் சிவபெருமானுடைய மிகப் பெரும் பக்தர்; எவ்வளவு செலவானாலும் அவர் நாள் தோறும் தவறாமல் சிவனடியார்களுக்குத் திருவமுது படைத்து மகேசுவர பூஜை செய்துவந்தார்.

எனவே அவர் ஒரு விநோதமான வழியைப் பின்பற்றி வந்தார். அவர் சூதாட்டம் ஆடி வென்ற பொருளைக் கொண்டு சிவனடியார்களுக்குத் திருவமுது படைத்து வந்தார். சூதாடுவோரைத்தேடி அவர் தம் ஊருக்கு அப்பாலும் சென்றார். அவர் யாரையும் விட்டுவிட மாட்டார்; யாராவது அவருடன் சூதாட மறுத்தால் அவர் வன்முறையிலும் இறங்குவார் (எனவே, பொல்லாத நாயனார் என்று பொருள்படும் மூர்க்க நாயனார் என்று பெயர் பெற்றார்). எனினும் அவர் பணத்தைத் தம் சொந்தச் செலவுக்காகப் பயன்படுத்த மாட்டார். எல்லாம் சிவனடியார்களுக்காகவே செலவிட்டார். ஆதலால் உள்ளுறையும் இறைவன் தம் கருணையை அவர்மீது பொழிந்தார்.

பரபக்தி அல்லது மிக உயர்ந்த பக்தியின் இயல்புக்கு இது ஓர் அதிசயமான எடுத்துக்காட்டாகும், அதுவே அதன் தனிச் சட்டமாகும். பக்தன் இறைவனைத் தவிர எதையும் அறிவதில்லை; உலகத்தையும் உலகின் நடைமுறைகளையும் அவன் உண்மையில் மறந்துவிடுகின்றான். அவன் இறைவனுக்காக, இறைவனில் வாழ்ந்து இறைவனுடைய உடைமை ஆகிவிடுகிறான். இத்தகைய நிலையில் பக்தனுடைய பொறுப்பை இறைவனே மேற்கொள்ளுகின்றான். சரணாகதியின் நிறைவுத் தன்மை இதன் முன்னால் கடுமையாகச் சோதிக்கப்படுகின்றது.

இந்நெறியில் செல்வது மிகவும் கடினம்; எனவே தான் நாரத முனிவர், பக்தர்கூட அறநெறியின் விதிகளை மீறக்கூடாது என்று முழக்கமிட்டார். ஆதலால் நீங்கள் உங்கள் தனி மனித உணர்வுடன் இருக்கும் வரையில் அறநெறியின் விதிகளுக்குக் கட்டுப்பட்டு இருங்கள்; உங்களுக்கு முற்றிலும் புதிதாகவுள்ள மனநிலையில் வாழும் அடியார்களைப் பின்பற்றும் அறிவில்லாத செயலைச் செய்துவிடாதீர்கள்.

## 33. சோமாசிமாற நாயனார்

சோமாசிமாற நாயனார் அந்தணர் குலத்தில் பிறந்தவர். அவர் திருவம்பர் என்ற ஊரில் வாழ்ந்தார். அவர் இறைவனிடம் மிகுந்த பக்தி பூண்டவர்; இறைவனுடைய அடியார்கள் எக்குலத்தவராயினும் வேறுபாடு பாராட்டாமல் அவர்களுக்கு அவர் பணிவிடை செய்து வந்தார். அவர் எவ்விதமான பயனையும் எதிர்பாராமல் யாகங்களைச் செய்து இறைவனை வழிபட்டு வந்தார். அவர் திருவாரூருக்குச் சென்று சுந்தரமூர்த்தி நாயனாருடன் வாழ்ந்தார்; அவர் நாயனாரிடம் முற்றிலும் சரணாகதி அடைந்திருந்தார். இதன் வாயிலாக அவர் இறைவனுடைய கருணையைப் பெற்றார்.

அடியவர் தன்மை பொருந்திய எளிய வாழ்வு, இதுவாகும். இதன் முகப்பில், நாயனாரைப் பற்றிக் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கதாக எதுவும் காணப்பட

வில்லை ஆனால், நாயனர் காலத்தில் தென்னிந்தியாவில் நிலவிவந்த சூழ்நிலைகளை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இறைவனிடம் எவ்வளவுதான் பக்தியுள்ள வராக இருந்தாலும் அவர் பிற குலத்தவராக இருப்பின் அவர்களுடன் கலந்து பழகுதல் என்பது ஓர் அந்தண ரால் முடியாத காரியமாகும். அந்தணர், அவர்களுக்குப் பணிவிடை செய்வதென்பது, கற்பனை செய்யவும் முடியாததாகும். அதற்கு மிகப்பெரும் மனேசக்தியும், திடமான உறுதியும், இறைவனிடமும் இறைவனடியார் களிடமும் மிகவும் பக்தியும் வேண்டியிருந்தன.

மேலும் அக்காலத்தில் பயன் எதையும் எதிர் பாராமல் யாகத்தைச் செய்ய யாரும் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. தனிப்பட்ட சொந்த விருப்பத்துக் காகவே யாகங்கள் செய்யப்பட்டன. தன்னலமின்றி, விருப்பம் எதுவும் இன்றி நாயனர் அவற்றைச் செய் தார் என்பதே அவர் ஏற்கனவே ஞானத்தின் மிக உயர்ந்த நிலையை அல்லது ஆன்மீக உள்ளொளியை அடைந்துவிட்டார் என்ற உண்மையைக் காட்டும். அவர் உண்மையான ஞானியாகவும், கர்மயோகியாகவும் விளங்கினர்.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக அவர் தம் குரு வாகிய சுந்தரமூர்த்தி நாயனரிடம் மிக உயர்ந்த பக்தி பூண்டிருந்தார். குரு பக்தியினல் சாதிக்க முடியாதது என்ன இருக்கிறது? எனினும் அறியாமையும், அகந் தையும் உள்ளவன் குருபக்தியைப்பற்றி எளிதாகவும் இகழ்ச்சியாகவும் பேசுகின்றன்.

## 34. சாக்கிய நாயனர்

இவ்வடியார் திருச்சங்கமங்கை என்ற ஊரில் வேளாளமரபில் தோன்றியவர். அவர் உலகியல் வாழ்வில் முற்றிலும் வெறுப்புற்றுப் பிறவிப் பிணி யிலிருந்து விடுபட விரும்பினர். இதை அடைய அவர் மிகச் சிறந்த நெறியைத் தேடினர். பொய்யான பிரச்

சாரத்தினுல் அவர் புத்தமதச் செல்வாக்குக்கு ஆட்பட்டார். அவர் புத்த மதத்தைத் தழுவினுர். ஆனுல் நெடுநாள் ஆகுமுன்பே அதிருப்தி அடைந்தார். அவர் உடனே சைவ சமயத்தின்பால் ஈடுபாடு கொண்டார்; ஒருவருடைய புறச்சின்னம் அல்லது நடத்தை எதுவாக இருப்பினும், அவர் இறைவனிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்ததால் அவர் நிச்சயம் முக்தி பெறுவார் என்ற தெளிவு அவருக்கு ஏற்பட்டது. புத்த மதத்திற்குரிய புறச்சின்னத்தை அவர் தவிர்க்கவில்லையெனினும் அவர் சிவபெருமானை வழிபட்டுவந்தார்.

ஒரு நாள் அவர் திறந்த வெளியில் அமைந்த சிவன் கோயிலில் அமர்ந்து சிவலிங்கத் தியானத்தில் ஆழ்ந்து பேரின்பத்தில் லயித்து தம்மை முற்றிலும் மெய்மறந்த நிலையில் லிங்கத்தின்மீது ஒரு கல்லை எறிந்தார். மறு நாள் அவர் மீண்டும் கோயிலுக்குச் சென்றபோது முந்திய நாள் செயலை நினைவுகூர்ந்தார். பக்தியில் மூழ்கியுள்ள தம் பக்தர் தருவது எதுவாக இருந்தாலும் தாம் ஏற்றுக்கொள்ளும் ஆழ்ந்த உண்மையை இறைவன் வெளிப்படுத்தவே, இறைவன் விருப்பத்தால் அச்செயல் நிகழ்ந்ததாக உணர்ந்தார். அந்த நாளும் அவர் ஒரு கல்லை எறிந்தார். இதுவே அவருடைய நித்திய வழிபாடாயிற்று; இதைச் செய்யாமல் அவர் உணவும் உட்கொள்ளமாட்டார். ஒரு நாள் அவர் தம் உணவை உண்ணத் தொடங்கும் நேரத்தில், அவர் அன்று தம் வழக்கமான பூசையைச் செய்யவில்லை என்பது நினைவுக்கு வரவே தம் பசியையும் கருதாமல் கோயிலுக்குச் சென்று மிகுந்த பக்தியுடன் ஒரு கல்லை எறிந்தார். இறைவன் அவர்முன் தோன்றி நல்லாசிகள் வழங்கிக் கைலை மலைக்கு அழைத்துக்கொண்டார்.

## 35. சிறப்புலி நாயனுர்

சிறப்புலி நாயனுர் பக்தி மிகுந்த ஓர் அந்தணர். சோழப்பெருநாட்டில் திருவாக்கூர் என்ற ஊரில் வாழ்ந்துவந்தார். சிவபெருமானிடத்தும் சிவனடியார்

இடத்தும் அவர் ஆழ்ந்த பக்தி பூண்டிருந்தார். அவர் அவர்களுக்கு உள்ளன்புடன் பணிவிடை செய்து அவர்களை வழிபட்டு வந்தார். இரவும் பகலும் அவர் திரு ஐந்தெழுத்து மந்திரத்தைப் பாவத்துடனும் உள்ளன்புடனும் உச்சரிப்பார். சிவபெருமான் பொருட்டு அவர் வேத வேள்விகளையும் செய்துவந்தார். இவை எல்லாவற்றாலும் அவர் சிவபெருமானுடைய மிக உயர்ந்த கருணைக்கு ஆளானார்.

இந்த நாயனார் செய்து வந்த தனிச் சிறப்புள்ள ஆன்மீக சாதனை இடையறாமல் திருஐந்தெழுத்து மந்திரத்தை (ஓம் நமசிவாய) உச்சரித்தல் என்று தெரிகிறது. மிகமிக எளிய, சுலபமான இந்தப் பயிற்சி மனிதனுக்குக் கணக்கிட்டுச் சொல்ல முடியாத நன்மைகளை நல்க வல்லது; எனினும், அறிவில்லாத மனிதன் தவறான மாயை நிரம்பி, இதைச் செய்ய மறுக்கின்றான். தொடர்ந்து இம்மந்திரத்தை உச்சரித்தால் மனக் கருத்துக்கள் முற்றிலும் மாறுதலடைகின்றன. தெய்வீக அதிர்மை மனம் பெறுகிறது. தற்கால விஞ்ஞானம் பொருளின் அடர்த்தியிலும் எண்ணிக்கையிலும் நம்பிக்கை கொள்ள முடியாத ஒரு நிலையை அடைந்துள்ளது. விஞ்ஞானியின் களங்கமுற்ற மொத்த அறிவுகூட, நுட்பமான அணுவில் அல்லது சிறு அறையில் உள்ள மிக உயர்ந்த சக்தியை உணர்ந்து கொண்டுள்ளது. ஒலி அதிர்வுகள் (நுண்ணிய, எண்ண அதிர்வுகள் கூட) ஒரு மனிதனுக்குள் அடிப்படை மாறுதல்களை உண்டாக்கி அவனை உடல் அளவிலும், வலிமை அளவிலும், மன அளவிலும், மனத் தத்துவ அளவிலும், ஆன்மீக அளவிலும் குணப்படுத்தும்; இதை நம்ப மறுக்கும் மனிதனின் அறியாமை, நிச்சயம் மிகவும் பெரிதுதான்.

இறைவனை எப்போதும் நினைவில் கொண்டு இறைவன் திருப்பெயரை இடையறாமல் உச்சரித்து வருவது, மிகப் பெரிய யோக நிலையாகும்.

# 36. சிறுத்தொண்ட நாயனூர்

சோழப்பெருநாட்டில் திருச்செங்காட்டங்குடி என்ற ஊரில் பரஞ்சோதி என்ற பெயருள்ள சிவபக்தர் வாழ்ந்துவந்தார். அவர் படைத் தளபதிகளின் குடும்பத்தில் தோன்றியவர். அவரே சோழ மன்னனின் தலைமைத் தளபதியாக விளங்கினூர். சம்சாரத்திலிருந்து விடுபட்டு முக்தியை அடைவதற்குச் சிவபெருமானுடைய திருவடிகளில் பக்தி பூண்டிருப்பதே மிகச்சிறந்த வழியென்பதை உணர்ந்துகொண்ட காரணத்தால் அவர் இறைவனுடைய திருவடிகளைச் சிக்கெனப் பற்றிக் கொண்டார்.

ஒருமுறை அரச கட்டளையின்படி, அவர் வடஇந்திய மன்னன் ஒருவனுடன் போர்தொடுத்து வெற்றிகொண்டு போரில் கைப்பற்றிய மிகப்பெரும் செல்வங்களுடன் திரும்பினூர். அரசன் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தான். பரஞ்சோதியார் சிவபெருமானிடத்தில் கொண்டிருந்த ஆழ்ந்த பக்தியினூல்தான் வெற்றி பெற்ருர் என்று அமைச்சர், அரசனிடத்தில் தெரிவித்தார். அரசனும் சிவபக்தனுக இருந்தமையால் தான் ஒரு சிவபக்தரை இரத்தக்களரி நிறைந்த ஒரு போரைத் தொடுக்குமாறு வற்புறுத்தினேமே என்று அதிர்ச்சியடைந்தான். அவன் பரஞ்சோதியாரை அழைத்துச் சிவபக்தராகிய அவரைப் போருக்கு அனுப்பிய தன் தவற்றை மன்னிக்குமாறு வேண்டிக்கொண்டு, அவருக்கு விலையுயர்ந்த பரிசுகள் பலவும் வழங்கி இனிமேல் தம் வழிபாடுகளில் ஈடுபடுமாறு வேண்டுகோள் தெரிவித்து அவரை அவருடைய ஊருக்கு அனுப்பினுன். பரஞ்சோதியரர் தம் ஊரை அடைந்தபின் அன்றுதொட்டுச் சிவபெருமானுக்கும் சிவனடியார்களுக்கும் வழிபாடு செய்வதில் ஈடுபட்டார். ஒரு சிவனடியாருக்காவது விருந்துபடைத்து உண்பித்த பின் அன்றி அவர் உணவு கொள்ள மாட்டார். சிவ பெருமானுக்கும் சிவனடியார்களுக்கும் பணி செய்யும் மிகச் சிறிய தொண்டனுக அவர் தம்மைக் கருதினூர்; எனவேதான் சிறுத்தொண்டர் (சிறிய பணியாளன்) என்று பெயர் பெற்ருர்.

இப்புனித அடியாரின் பெருமையை வெளிப்படுத்த வேண்டுமென்று சிவபெருமான் விரும்பினார். எனவே, ஒருநாள் அவர் சிறுத்தொண்டரின் வீட்டின் முன்பு வைரவர் (சிவயோகிகளின் ஒரு தனிப் பிரிவினர்) கோலத்தில் தோன்றினார். சிறுத்தொண்டரின் பணிப் பெண்ணாகிய சந்தன நங்கையாரிடத்தில் அவருடைய எசமானர் வீட்டில் உள்ளாரா என்று வினவினார். அம்மையார், 'இல்லை' என்று கூறி, சிவபக்தருக்கு விருந்து படைக்காமல் அவர் உண்ணமாட்டார் என்றும், அத்தகைய சிவபக்தரைத் தேடிக்கொண்டு வெளியே சென்றிருக்கிறார் என்றும் தெரிவித்தார். இந்தச் சிவ பக்தரும் போய்விடுவார் என்றஞ்சிய அம்மையார், அவரை வீட்டுக்குள் வருமாறு வேண்டினார். பெண் தனித்திருக்கும் இல்லத்தினுள் நுழையமாட்டேன் என்று அதிதி கூறினார். சிறுத்தொண்டரின் துணைவியார் திருவெண்காட்டுநங்கையார் இதனைக் கேட்டதும் விரைந்து வெளியே வந்து தம் கணவர் திரும்பி வரும் வரை வீட்டில் தங்குமாறு வைரவரை வேண்டினார். வைரவர் தம் மறுப்பை மீண்டும் தெரிவித்துத் தாம் கோயிலில் உள்ள மரத்தின் அடியில் தங்கியிருப்பதை அவருக்குத் தெரிவிக்குமாறு சொல்லிப் புறப்பட்டு விட்டார்.

சிறுத்தொண்டர் திரும்ப வந்தவுடனே அவருடைய துணைவியார் நிகழ்ந்தவற்றையெல்லாம் எடுத்துரைத்தார். அன்று சிவபக்தர் யாரையும் காணமுடியவில்லை என்பதனால், சிறுத்தொண்டர் இதைக் கேட்டவுடன் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார். உடனே அவர் கோயிலுக்கு ஓடோடியும் சென்று வைரவரின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து திருவமுது கொள்வதற்காகத் தம் வீட்டிற்கு வருமாறு அவரை அழைத்தார். வைரவர் தயக்கத்துடன், 'நான் விதிக்கும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு நான் சொல்லும் வகையில் உம்மால் எனக்குத் திருவமுது படைக்க முடியுமா என்று ஐயுறுகின்றேன்; எனவே என்னை விட்டுவிடுவது நல்லது' என்று கூறினார். சிறுத்தொண்டர் பெருந்துயரமடைந்தார். நாள்தோறும் ஒரு சிவபக்தரை உண்பிக்கும் தம் விரதத்திலிருந்து

தாம் வழுவாமல் இருப்பதற்காக இந்த அதிதி இறைவனால் தமக்கென்றே அனுப்பப்பட்டதாகச் சிறுத் தொண்டர் கருதினார். திருவமுதை ஏற்றுக்கொள்ள மட்டும் அவர் இசைந்தால், அவர் எத்தகைய நிபந்தனை விதித்தாலும் ஏற்றுக்கொள்ள அவர் சித்தமாக இருந்தார். அதிதி தம் நிபந்தனையை வெளியிட்டார். ''அடியவரே! ஆறு திங்களுக்கொருமுறை மட்டுமே நான் ஒரு பசுவின் இறைச்சியை உண்பது வழக்கம். அந்த நாள் இப்போது வந்துள்ளது. உம்மால் என்னைத் திருப்தியடையுமாறு செய்ய முடியுமா என்று ஐயுறு கின்றேன்'' என்று கூறினார். பசு என்னும் சொல் விலங்கையும் குறிக்கும், மனிதனையும் குறிக்கும். அதிதி குறிப்பிட்ட பசு விலங்கைக் குறித்ததாக எண்ணிய சிறுத்தொண்டர் உடனே ஒப்புக்கொண்டார். எனினும், அவர் மிகுந்த வியப்படையுமாறு தாம் மனித இறைச்சி யைக் குறிப்பிட்டதாக அதிதி வெளியிட்டார். அவர் மேலும், நண்பரே! அது குழந்தையின் இறைச்சியாக இருக்கவேண்டும். குழந்தை ஐந்து வயது நிரம்பியிருக்க வேண்டும். அக்குழந்தை உடல் நலம் மிக்கதாக இருக்கவேண்டும். பெற்றோருக்கு ஒரே மகனாகவும் இருக்கவேண்டும். இத்தகைய சிறுவனைத் தாய் பிடித்துக் கொள்ளத் தந்தை சிறு சிறு துண்டுகளாக அரிய வேண்டும். இந்த இறைச்சியைப் பதமாகச் சமைத்து எனக்குப் படைக்க வேண்டும்'' என்று தெரிவித்தார். சிறிதும் தயக்கமின்றிச் சிறுத்தொண்டர் இந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு அதிதியைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

அதிதி வருணித்தவாறு உள்ள சிறுவனை எங்கே கண்டுபிடிப்பது? இவ்வருணனைக்கு மிகவும் பொருத்த மாக இருந்த தம் மகனையே சிறுத்தொண்டர் நினைத்தார். புனிதப் பண்புமிகுந்த அவருடைய துணைவியாரும் அதற்கு இசைந்து தம் சிறுவனைப் பள்ளியிலிருந்து அழைத்து வருமாறு வேண்டினார். அக்குழந்தை வந்த வுடன் தாயார் அவனைத் தம் மடியில் படுக்கவைத்தார். கள்ளங்கபடமற்ற அக்குழந்தை சிறுத்தொண்டர் ஒரே வீச்சில் தன் கழுத்தை வெட்டும்போது சிரித்து

மகிழ்ந்து கொண்டிருந்தான். தலை சமைப்பதற்குப் பொதுவாக உகந்ததன்று; எனவே இறைவனுக்குப் படைக்கவும் உகந்ததன்று. ஆதலால் அவர்கள் அதைப் பணிப்பெண்ணிடம் தந்துவிட்டு எஞ்சிய பகுதிகளைச் சமைக்கத் தொடங்கினர். அதிதியை வழிபட்ட பின்னர், சிறுத்தொண்டர் அவருக்குத் திருவமுது படைக்கத் தொடங்கினார். தாம் சொன்னவாறே சமையல் நடந்ததா என்று அதிதி நிச்சயித்துக்கொள்ள விரும்பிச் சிறுத்தொண்டரை வினவினார். (தம் சொந்த மகனையே படையலாகப் படைத்துள்ள உண்மையைத் தவிர) நாயனார் யாவற்றையும் விளக்கிக் கூறினார். தலையையும் தாம் உண்ண விரும்புவதாக அதிதி தெரிவித்தார். இதை எதிர்பார்த்திருந்த பணிப்பெண் தலையையும் சமைத்துத் தயாராக வைத்திருந்தார்.

மீண்டும் சிறுத்தொண்டர், திருவமுதை ஏற்குமாறு யோகியாரை வேண்டினார். யோகியார் தம்முடன், உடனிருந்து உண்பதற்காக இன்னொரு சிவபக்தர் வேண்டும் என்று விரும்பினார்; நாயனாரைத் தவிர அங்கு வேறுயாரும் இல்லை. எனவே அவர் யோகியாருடன் பக்கத்திலமர்ந்து அவரை மகிழ்விப்பதற்காக தம் மகனுடைய இறைச்சியை உண்ணச் சித்தமானார். எனினும், இன்னும் ஒரு நிபந்தனையை நிறைவேற்ற வேண்டியிருந்தது. தமக்கு விருந்து படைப்பவருடைய மகனும் தம்முடனிருந்து உண்ணவில்லையென்றால் தாம் உண்ண முடியாதென்று யோகியார் தெரிவித்தார். தம் மகன் வீட்டில் இல்லை என்றும், எனவே அவன் தங்களுடன் சேர்ந்து உண்ண முடியவில்லை என்றும் நாயனார் சாமர்த்தியமாகப் பதில் கூறினார். ஆனால் யோகியாரோ, "வெளியே சென்று குரல் கொடுத்து அழையுங்கள். அவன் நிச்சயம் வருவான்" என்று வற்புறுத்தினார். நாயனார் யோகியாருக்குக் கீழ்ப்படிந்து நடக்க விரும்பியதால் அவ்வாறே செய்தார். அதிசயங்கள் எல்லாவற்றுக்கும் மேலான அதிசயம் நடந்தது. 'சீராளா! இங்கே வா! உன்னுடன் உணவுண்ண யோகியார் விரும்புகிறார்' என்று தந்தையார் அழைத்தவுடனே இளஞ்சிறுவன் ஓடி வந்தான்.

பெற்றோர் தம் மகனைக் கண்டு ஆச்சரியம் அடைந்தனர். சீராளன் மீண்டும் உயிர் பெற்றுவிட்டான். அவர்கள் உணவு அறைக்குள் நுழைந்தனர். யோகியார் அங்கு காணப்படவில்லை. இலையில் பரிமாறியிருந்த இறைச்சியும் மறைந்துவிட்டது! யோகியாரை அவர்கள் தேடியபொழுது, இறைவன் அவர்களுக்குக் காட்சி தந்து, நல்லாசிகள் வழங்கித் தம் பேரின்ப வீட்டுக்கு அவர்களை அழைத்துக்கொண்டார்.

## 37. சேரமான் பெருமாள் நாயனார்

சேரமான் பெருமாள் நாயனார் கொடுங்கோளூரில் பிறந்தார். அது, தற்போது கேரளம் என்றழைக்கப் படும், மலை நாட்டின் தலைநகர். கோதையர் எனப்படும் அரசர்குடியில் அவர் தோன்றினர். உதியர் குடி என்றும் அதனை வழங்குவர். சேரமான் என்பது சேர அரசர்களுக்கெல்லாம் உரிய பொதுப் பெயர். முடி சூட்டிக்கொண்ட பிறகு பெருமாள் என்ற தனிப் பெயரை அவர் வைத்துக்கொண்டார். அவருக்குப் பெற்றோர் இட்ட பெயர், பெருமாக்கோதையார். அவர்பால் நல்ல சம்ஸ்காரங்கள் குடிகொண்டிருந்தன. குழந்தைப் பருவத்திலிருந்தே அவர் இறைவனிடம் மிகுந்த பக்தி பூண்டிருந்தார். விவேகமும், வைராக்கியமும் மிக உயர்ந்த அளவில் அவரிடம் காணப்பட்டன. அவர் நாடாள விரும்பவில்லை; எனவே அவர் உரிய வயதை அடைந்தபோது உலகைத் துறந்து திரு அஞ்சைக்களம் என்னும் தலத்துக்குச் சென்று இறை வழிபாட்டில் ஈடுபடலானார். செங்கோற் பொறையன் நாட்டை ஆட்சி செய்தான். அவனும் விரைவில், உலக வாழ்வின் நிலையாமையை உணர்ந்து உலகைத் துறந்தான். அவனுக்கு மகப்பேறு வாய்க்காத காரணத்தால் ஆட்சிப்பீடம் காலியாக இருந்தது. மக்கள் திருவஞ்சைக்களத்திற்குச் சென்று ஆட்சிப்பீடத்திலேறு மாறு, பெருமாக்கோதையாரை வேண்டினர். நாள் தோறும் செய்யும் இறை வழிபாட்டிற்கு இடையூறாக இருக்குமென்று அவர் வெறுப்புற்றாலும், தெய்வ விருப்பத்தைப் பணிவுடன் ஏற்றார். கோயிலுக்குச் சென்று

இறைவனிடம் பிரார்த்தனை செலுத்தினர். அவர் ஆட்சியை ஏற்றுக்கொள்ள இறைவன் இசைவு தெரிவித்தார். இறைவன் கருணையால் அவர் ஆட்சிப் பீடத்திலேறி விவேகத்துடனும், நீதியுடனும் அவர் நாட்டை ஆண்டார்; அவர் எல்லா மொழிகளையும் அறிந்திருந்தார்; பறவைகளின் மொழியைக்கூட அவர் அறிந்திருந்தார். இறைவன் அவருக்கு எல்லாச் செல்வங்களையும், பெரு வலிமையையும், அரசு ஊர்திகளையும் அருள் செய்தார்.

முடிசூட்டு விழாவின் பின்னர் அவர் கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்துவிட்டு அரண்மனை நோக்கி வந்து கொண்டிருந்தார். வழியில், வண்ணான் ஒருவன் தான் சுமந்த உவர் மண்ணால், உடம்பு முழுதும் வெளுத்த நிறத்துடன் வருவதை அவர் கண்டார். அந்த ஒரு தோற்றமே சேரமானுக்குச் சிவபெருமான் மேனி முழுதும் திருநீறணிந்து காணப்படும் உருவத்தை நினைவூட்டிப் பரவசமடையச் செய்தது அவர் உடனே பேரின்ப உணர்வாகிய உயர் நிலையை அடைந்தார். அவர் தம் பட்டத்து யானையை விட்டிறங்கி வண்ணான் எவ்வளவு மறுத்தும், அவனுடைய கால்களில் விழுந்து பணிந்தார். சேரமானுடைய உயர்ந்த பக்தி நிலையைக் கண்ணுற்ற அனைவரும் ஆச்சரியத்தால் செயலற்று நின்றுவிட்டனர்.

பக்தியும் பணிவும் நிறைந்த பல்வேறு செய்கைகளால் அவர் இறைவனுடைய திருவருளைப் பெற்றார். இறைவன் அவரிடம் பாணபத்திரர் என்ற புகழ்பெற்ற, பக்தி மிகுந்த பாடகரைப் பனை ஓலையில் தாமே பாசுரம் எழுதி அதைத் தந்து அனுப்பினர். சேரமானைப் புகழும் அப்பாடலின் செய்தி, 'பெருமை மிக்க புலவர்களுக்கு அரும்பெரும் செல்வப்பரிசில்களை வழங்குபவரும், குடிமக்களை அன்பினால் ஆட்சி செய்பவரும் ஆகிய அரசே! உமக்கு வெற்றி சிறப்பதாக! உமது ஈகையாலும் பக்தியாலும் நான் அளவற்ற மகிழ்ச்சியடைந்துள்ளேன். இவ்வோலையைக் கொண்டுவரும் பாணபத்திரர் உம்மைப்போலவே என்பால் பக்தி

சிறந்தவர். தமக்கு விருப்பமான இசைக் கருவியாகிய யாழை இசைத்து எப்போதும் என் புகழ் பாடும் பெரும் பாடகர் அவர். உம்மைக் காண அவர் வருகின்றார். உரிய பெருமையுடனும், நல்மதிப்புடனும் அவரை வரவேற்று அளவற்ற பரிசில்களை வழங்கி அவரைப் பெருமைப்படுத்துவீராக!' என்பதாம். சேரமான் பாடகரைப் பெரும் பக்தியுடனும் அன்புடனும் வரவேற்றார். இறைவன் தந்த திருமுகப் பாசுரத்தைப் படித்ததும் அவர் கரைகடந்த மகிழ்ச்சியுற்றுத் தரையில் உருண்டு புரண்டார். அவர் பாணபத்திரரிடம், 'அடியவரே! இப்பரிசுகள் எல்லாவற்றையும் எடுத்துக் கொள்வீராக! என் நாட்டையும் சேர்த்து ஏற்றுக் கொள்ளுங்கள்!' என்று வேண்டினார். அரசருடைய பக்தியைக் கண்டு விம்மிதமடைந்த பாணபத்திரர், 'அரசே! தங்களை நேரே காணும் பேறுபெற்றமையால் நான் பெருமகிழ்ச்சியடைந்தேன். எனக்கு மிகவும் தேவையாக உள்ளனவற்றை மட்டும் எடுத்துக்கொள்ளுகின்றேன்; ஏனெனில் இறைவன் எனக்கு இட்டுள்ள கட்டளை அதுதான்' என்று கூறினார். அவர் தமக்கு வேண்டியனவற்றை மட்டும் எடுத்துக்கொண்டு, ஒரு யானைமீது ஏறிக் கொடுங்கோளூரை விட்டுப் புறப்பட்டார். சேரமான் தன் நாட்டு எல்லைவரை உடன் சென்று வழியனுப்பினார்.

சேரமான் நடராசப்பெருமானிடத்தில் மிகவும் பக்தி பூண்டிருந்தார். அவர் தம்முடைய உடல், உள்ளம், உயிர் ஆகியவற்றை இறைவனுக்கே உரிமை ஆக்கிவிட்டார். நாள்தோறும் அவர் இறைவனை வழிபடுவார்; இறைவன் பெருங் கருணையால், அவர் வழிபாட்டின்போது நடராசப்பெருமான் நடனமாடுவதனால் உண்டாகும் கால் சிலம்பின் ஓசையைக் கேட்பார். எனினும் ஒருநாள் அவர் வழிபாட்டின்போது வழக்கமாகக் கேட்கும் தெய்வீக ஓசையைக் கேட்கவில்லை. சேரமான் மனத்தில் பெரும் வருத்தத்தை அடைந்தார். தாம் ஏதோ மிகப்பெரிய தவற்றைச் செய்திருக்கவேண்டும் என்று எண்ணிய அவர் தம் வாழ்வை முடித்துக்கொள்ள முடிவு செய்தார். உடனே

அவர் அத்தெய்வீக ஓசையைக் கேட்டார்; விண்ணில் எழுந்த குரலோசை, ''அன்ப! என் நண்பர் நம்பி ஆரூரர் தில்லைக்கு வந்துள்ளார்; அவர் இனிய தமிழ்ப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார். நான் அப்பாடல்களின் இனிமையில் லயித்து என்னை முற்றிலும் மறந்துவிட்டேன். எனவேதான் என் காற் சிலம்போசையை உனக்குக் கேட்பித்தருளக் காலத் தாழ்வு நேர்ந்தது' என்று விளக்கம் தந்தது. சுந்தரர், சேரமான் ஆகியோரிடையே நட்புணர்வை உண்டாக்க இறைவன் விரும்பியதால், இறைவன் சுந்தரரின் பெருமையை சேரமானுக்குத் தெரிவித்தார். தில்லை நடராசப் பெருமானை வழிபடவும், சுந்தரரைச் சந்திக் கவும் விரும்பிய சேரமான் உடனே தில்லைக்குப் புறப் பட்டார். தில்லையில் உள்ள நடராசப் பெருமானின் திருக்கோலத்தைக் கண்ட மாத்திரத்தில் சேரமான் பரவசமடைந்தார். அவர் நடராசப் பெருமான்மீது ''பொன்வண்ணத்து அந்தாதி''யைப் பாடினார். அதைப் பாராட்டும் வகையில் இறைவன் அவருக்குத் தம் காற் சிலம்போசையைக் கேட்பித்தருளினார். சேரமான் பேரின்ப மகிழ்வில் திளைத்தார்.

சேரமான் தில்லையை வந்து அடைவதற்கு முன்பே சுந்தரர் அத்தலத்தைவிட்டுப் புறப்பட்டிருந்தார். சேரமான் திருவாரூருக்குச் சென்று சுந்தரரைச் சந்தித் தார். இருவரும் ஒருவரையொருவர் தழுவிக்கொண் டனர். ஒருவர் ஒருவரின் காலடிகளில் பணிந்தனர். அவர்கள் மிகவும் நெருங்கிய நண்பர்களாயினர். திருவாரூரில் சேரமான் தியாகராசப் பெருமான்மீது புகழ்வாய்ந்த 'திரு மும்மணிக்கோவை' பாடினார்.

பின்னர் அவர்கள் வேதாரண்யத்துக்குச் சென்றனர். அங்கு சேரமான் இறைவன் மீது 'திரு அந்தாதி'யைப் பாடினார். வழியில் பல்வேறு தலங்களையும் தரிசித்த வாறே அவர்கள் மதுரையை வந்தடைந்தனர். பாண்டிய மன்னன் அவர்களை வரவேற்றான். பாண்டிய மன்னனிடம் அப்போது வந்து தங்கியிருந்த சோழ இளவரசனும் அவர்களை வரவேற்றான். அவர்களுடன் சேர்ந்து இரு

பெரும் அடியார்கள் பல தலங்களுக்கும் சென்றனர். அரசர்களிடம் விடைபெற்றுச் சேரமானும் சுந்தரரும் திருவாரூருக்குத் திரும்பினர். சேரமானுடைய வேண்டுகோளுக்கு இணங்கச் சுந்தரர் அவருடன் கொடுங்கோளூருக்கு உடன் சென்றார். அங்கு, சேரமான் சுந்தரரைப் பட்டத்து யானைமீது அமரச்செய்து ஊர் வலமாக நகர்வலம் வந்தார்.

சுந்தரர் திருவாரூருக்குப் புறப்படுகையில், நாட்டை விவேகத்துடனும் நீதியுடனும் ஆளுமாறு சேரமானை வேண்டிக்கொண்டார். சேரமான், அடியாரின் கட்டளை யைப் பணிவுடன் ஏற்றுக்கொண்டார். மற்றொரு முறை சுந்தரர், கொடுங்கோளூருக்கு வந்தபோது, ஒரு நாள் அவர் திடீரென்று அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டுத் திருஅஞ்சைக்களத்தில் உள்ள கோயிலுக்குச் சென்று இறைவனுடைய கருணையை வேண்டி முக்தி பெற்றார். உள்ளுணர்வால், சேரமான் சுந்தரர் முக்தி பெற்றதை அறிந்து அவரும் இறைவனுடைய பாத தாமரைகளை அடைந்தார். சுந்தரர் வரலாற்றில் இச்செய்தியைப் பார்த்தோம். கைலாயத்தில் சேரமான் சிவகணங்களின் (பணியாளர்) பெருந்தலைவர் ஆனார்.

## 38. கணநாத நாயனார்

சீர்காழியில் கணநாதர் என்ற பக்தி மிகுந்த அந்தணர் வாழ்ந்தார். அவர் சிவபெருமானிடம் மிகுந்த பக்தி பூண்டிருந்தார். மக்கள் அவருடைய நற்குணத்தை யும் பக்தியையும் பாராட்டினர்; அவரிடம் அறிவுரை கேட்கவும் வந்தனர். அவர் வேறுபாடு கருதாமல் தம்மிடம் வருபவர்களுக்கெல்லாம் அவ்வவர் சக்திக்கு உகந்த கோயிற் பணிகளைத் தந்தார். அவர்கள் கோயிலைத் துப்புரவாக்கினர்! மலர் மாலைகளைத் தொடுத்தனர்; பூந்தோட்டத்தில் பணி செய்தனர்; கோயிலில் விளக்குகளை ஏற்றினர்; இன்னும் இவை போன்ற பணிவிடைகளைச் செய்தனர். இவ்வாறு அவர், அவர்களின் உள்ளத்தில் தெய்வ பக்தியை ஊட்டி

அவர்களைச் சிவபக்தர்களாக மாற்றினார். அவர் ஞான சம்பந்தரிடம் மிகுந்த பக்தியுள்ளவர். இவை எல்லா வற்றிலும் அவர் இறைவனுடைய கருணையைப் பெற்றார்.

இது மற்றொரு பெரிய ஆனால் எளிய ஆன்மீகப் பயிற்சியாகும். மற்றவர்களிடம் இறைவனைப்பற்றியும், பக்தியின் பெருமையைப்பற்றியும் இவை போன்ற வற்றையும் பேசு. இது உன்னைச் சுற்றிச் சக்திவாய்ந்த ஆன்மீக அரணை உருவாக்கிவிடும். உன் பொழுதை வீணாக்கும் மக்களைத் தவிர்க்கும் சக்தியைப் பெறுவாய். ஆன்மீக சாதகனின் தலையாய எதிரியாகிய வீண் பேச்சில் நீ ஈடுபட மாட்டாய்; மற்றவர்கள் உன்னை ஈடுபடச் செய்யவும் விட மாட்டாய்; தொடக்கத்தில் மக்கள் உன் நடத்தையை விநோதமானதென்று நினைப் பார்கள்; வெகு விரைவில் அவர்கள் உன்னைப் புரிந்து கொண்டு, தாங்களாகவே உன் முன்னிலையில் வீண் பேச்சுப் பேசுவதைத் தவிர்ப்பார்கள். அதே நேரத்தில் தர்மத்தின்பாலும் இறைவன்பாலும் ஒவ்வொரு வருடைய மனத்தையும் செல்லச் செய்வதனால், நீ மனித சமுதாயத்துக்கே பெரும் சேவை செய்கிறாய். உனக்கு உதவி செய்யும் இந்த அற்புதமான யோகம் ஒரே நேரத்தில் மற்றவர்களுக்குக்கூட உதவி செய்கிறது. அதை நடைமுறையில் பயிற்சி செய்து அதன் ஆச்சரிய மான பயனை உணர்வாயாக.

## 39. கூற்றுவ நாயனார்

இவ்வடியார் களந்தை என்னும் இடத்தில் ஆட்சித் தலைவராக இருந்தார். சிவபெருமானிடத்தில் அளவு கடந்த பக்திபூண்டிருந்தார். நாள்தோறும் அவர் திரு ஐந்தெழுத்து மந்திரத்தை உச்சரித்துக்கொண்டே இருப்பார்; அடியார்களுக்குப் பணிவிடை செய்வார். இறைவன் அவருடைய பேராற்றலைப் பெருக்கி எல்லாச் செல்வங்களையும் வலிமைகளையும் அவர்மீது பொழிந் தார். சோழ, பாண்டிய நாடுகளைச் சேர்ந்த பல இடங்களையும் நாயனார் கைப்பற்றினார். தில்லை மூவயிர

அந்தணர்கள் தமக்கு முடிசூட்டு விழாவை நடத்தித் தம்மை அரசராக அறிவிக்க வேண்டுமென்று விரும்பினர். அவர்கள் சோழ மன்னனிடம் மட்டுமே ராஜபக்தி உள்ளவர்களாதலால் மறுத்துவிட்டனர். அவருடைய சினத்துக்கு அஞ்சி அவர்கள் அனைவரும் தில்லையை விட்டே சென்றுவிட்டனர். பூசை செய்வதற்காக ஒருவர் மட்டுமே அங்கு தங்கியிருந்தார். அவரும் நாயனருடைய வேண்டுகோளுக்கு இணங்க மறுத்தார். ஒருநாள் நாயனர் இறைவனிடம் வழிபட்டு முறையிட்டார். அதற்கு விடைதரும் முறையில் இறைவனே அவர் முன்னிலையில் தோன்றி திருவடிகளை அவர் முடிமீது சூட்டுவதன் வாயிலாக அவருக்கு முடிசூட்டு விழாவை நடத்தினர். நாயனர் தம் வழிபாட்டை இடையருமல் தொடர்ந்து செய்து இறுதியில் இறைவனை அடைந்தார்.

நாயனர், தில்லை மூவாயிர அந்தணர்களிடம் தமக்கு முடிசூட்டு விழாவை நடத்துமாறு கேட்டபோது, அவருடைய நோக்கம் விழாவை ஆன்மீகப் படுத்தவும், தாம் அணியும் மணிமுடி இறைவன் திருவடிகளின் சின்னமே என்பதைத் தாம் உணர்வதற்காகவும் என்பதை, நம் அனைவர் உள்ளங்களிலும் உள்ளுறைகின்ற இறைவன் அறிவார். அந்தணர்கள் அரசியல் பின் விளைவுகளுக்காக அஞ்சியபோது இறைவனே தம் பக்தரின் விருப்பத்தை நிறைவேற்றினர்.

## 40. புகழ்ச் சோழ நாயனர்

புகழ்ச் சோழ நாயனர், ஓர் அரசர். சோழப் பெரு நாட்டில் உறையூரில் அவர் வாழ்ந்து வந்தார். சிவ பெருமானிடத்திலும், சிவனடியார்களிடத்திலும் அவர் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். அவர் அரசர்களுக்கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினர்; மக்கள் அவரிடம் அன்பு கொண்டு அவருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி வந்தார்கள்.

அவர் ஒரு முறை, குடநாட்டு மன்னர்களிடத்திலிருந்து தமக்கு வரவேண்டிய திறைப் பொருள்களை

வசூல் செய்வதற்காகக் கருருக்குச் சென்றார். அவர்களனைவரும் உடனே செலுத்திவிட்டார்கள்; ஆனால் அதிகன் என்ற ஓர் சிற்றரசன் மட்டும் செலுத்தவில்லை என்று அமைச்சர்கள் தெரிவித்தனர். அதிகனுடைய கோட்டையின்மீது படை எடுக்குமாறு அரசர் தம் படைகளுக்குக் கட்டளையிட்டார் இடையே, அரசருடைய பட்டத்துயானை சிவ அபராதம் செய்த குற்றத்திற்காக எறிபத்த நாயனரால் கொல்லப்பட்டது. (இச் செய்தியை நாம் ஏற்கனவே எறிபத்த நாயனர் வரலாற்றில் பார்த்தோம்). முடிவில், எறிபத்தரும், அரசரும் இறைவனுடைய திருக்காட்சியைக் கண்டனர். இத்தகைய நாடகம் ஒருபுறம் நடைபெற்ற வேளையில், மற்றொருபுறம் அரசருடைய படைகள் அதிகனுடைய கோட்டையை அழித்தனர்; அவனுடைய வீரர் பலரைக் கொன்றனர்; அதிகன் தோற்று, உயிருக்கு அஞ்சி எங்கோ ஓடிவிட்டான். புகழ்ச் சோழருடைய படைகள் கொள்ளையடித்த பெருஞ் செல்வங்களுடனும், கொல்லப் பட்ட வீரர்களின் தலைகளுடனும் திரும்பினர். அரசருடைய காலடிகளில் இவற்றை ஒப்படைத்தனர். அத்தலைகளிடையே, ஒரு தலை சடை முடியுடன் இருப்பதை அரசர் கவனித்தார்; அது ஒரு சிவ பக்தருடைய தலை. தாங்க முடியாத துக்கத்தால் தாக்குண்ட அரசர் பெரும் செந்தீயை வளர்த்து அத்தலையைத் தங்கத் தட்டில் ஏந்தி வலம் வந்து திரு. ஐந்தெழுத்து மந்திரத்தை உச்சரித்தவாறே மூண்டெரியும் நெருப்பின் நடுவே உள் புகுந்தார், இவ்வாறு அவர் இறைவனுடைய சிவபுரத்தை அடைந்தார்.

## 41. நரசிங்க முனையரையர்

இவ்வடியார் ஒரு சிற்றரசர். அவர் திருமுனைப் பாடியில் வாழ்ந்தார். அவர் சிவபெருமானிடத்தில் உயர்ந்த பக்தி பூண்டிருந்தார். அவர் சைவ சமயத்திற்குப் பெரும் ஆதரவாக இருந்தார். ஒவ்வொரு திருவாதிரைத் திருநாளின்போதும் அவர் சிறப்பு வழிபாடு செய்து சிவனடியார்கள், எவ்வகைக் கோலம்

பூண்டுவரினும் அவர்களுக்குத் திருவமுது படைத்து விருந்தோம்பி, ஒவ்வொருவருக்கும் பரிசாக நூறு பொற் காசுகள் வழங்கி வந்தார். இத்தகைய ஒரு சமயம், ஒரு சிவ பக்தர் மேனி முழுதும் நீறு பூசி ஆடையற்ற வராய் வந்தார்; ஏனைய சிவ பக்தர்களின் உள்ளங் களில் இதனுல் மிகுந்த வெறுப்பு உண்டாயிற்று. இதையறிந்த நாயனூர், ஆடையற்ற அந்த அடியாரின் காலடிகளில் வீழ்ந்து பணிந்து மிகுந்த மரியாதையுடன் வரவேற்ருர் அவர் அந்த அடியாரை நன்கு உண்பித்து அவருக்குப் பரிசாக இருநூறு பொற்காசுகளை வழங்கினூர். இதனுல் நாயனூர், இறைவனுடைய மிக உயர்ந்த கருணைக்கு ஆளானூர்.

அடியார்கள் தங்கள் பரந்த பார்வையை வெளிப் படுத்தும் நுட்பமான வழியை அறியவும். மற்றவர் களின் பார்வையிலும் தேவையான மாறுதலை உண் டாக்கும் நுட்பமான வழியை அறியவும் இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். நாயனூருக்கு, அடி யார்கள் அனைவரும் சிவபெருமானுடைய தோற்றங் களே! ஆடையற்ற மனிதரால் அவருடைய உள்ளத்தில் சிறிதளவுகூட வெறுப்போ, அதிருப்தியோ ஏற்பட வில்லை. நேர்மையில்லாத மனப்பான்மை மற்றவர் களிடத்தில் உள்ளதென்று கண்டறிந்த அவர், அவர் களைத் திருத்துவதற்காக வன்முறையைப் பின்பற்ற வில்லை. உடனே புரிந்துகொள்ள முடியாத, ஆனுல் நல்ல பயனை விளைவிக்கத்தக்க; தமக்கே உரிய நுட்ப மான வழியில், உண்மை எது என்பதைச் செயல்மூலம் காட்டுகின்ருர்; அறிவில்லாதவர்களின் மனப் போக்கில் ஒரு மாறுதலையும் உண்டாக்கிவிடுகின்ருர். இவ்விரு போதனைகளும் முக்கியமானவையாகும்.

## 42. அதிபத்த நாயனூர்

இவ்வடியார் நாகப்பட்டினத்துக்கு அருகில் உள்ள நுளைப்பாடி என்ற ஊரில் பிறந்த ஒரு செம்படவர். அவர் வழக்கமாகத் தம் வலையிற்பட்ட மீன்களில்

பெரிய மீனை இறைவனுக்காகவென்று விட்டு வந்தார். இறைவன் அவருடைய பெருமையை உலகுக்கு வெளிப் படுத்த விரும்பினர். எனவே தொடர்ந்து பல நாட் களாக அவருக்கு ஒரு மீனே கிடைக்கலாயிற்று. சிவ பெருமானின் பெயரால் அதைக் கடலில் விட்டுவிட்டு, உணவு பெருமல் இருந்தார். ஒரு நாள் அவருக்கு ஒரேயொரு மீனுகத் தங்கமீன் கிடைத்தது. அவர் தம் விரதத்தில் உறுதியாக நின்று சிவபெருமானின் திருவடிக்காக அதையும் கடலில் விட்டார். இறைவன், படிப்பறிவில்லாத செம்படவராகிய இவ்வடியாரின் முன்னே தோன்றி நல்லாசிகளை வழங்கினர்.

இறைவனைக் கண்டுகொள்ளல், பரந்த படிப்பறி வாலோ, மூச்சே நின்றுவிடும் அளவு செய்யும் கடுமை யான விரதங்களாலோ, நிறையப் பேசியும் கேட்டும் வருவதாலோ நிச்சயம் முடியாது; சற்றும் பின் வாங்காத பக்தியினுல் மட்டுமே முடியும். இதைச் சிறிதளவும் ஐயத்திற்கு இடம் இன்றி இந்த எளிய, பணிவுள்ள செம்படவராகிய அடியார் நிரூபித்து விட்டார். ஆனுல், அவருடைய நிஷ்டையாகிய உறுதி யைப் பாருங்கள். இறைவனிடத்தில் நிலைத்துள்ள நம்பிக்கை இருந்தாலொழிய அதை எளிதில் நீங்கள் அடைய முடியாது. இல்லையென்ருல், கொண்ட கொள்கையிலிருந்து நழுவுவதற்கான எல்லா வகையான காரணங்களையும் (நொண்டிச்சாக்குகள்) மனம் கற் பிக்கும். இந்த உயர்ந்த நம்பிக்கையும், பக்தியும் மட்டுமே மிக உயர்ந்த ஞானமாகும். அறிவில்லாதவன் மட்டுமே நூல்களைப் படிக்கின்ருன்; இலக்கணம்பற்றிய ஆரம்ப நூலைப் படிக்க, ஓர் அறிஞருக்கு என்ன தேவை யிருக்கிறது ? கண் முன்னுல் கடவுளைப் பார்த்துக் கொண்டிருக்கும் ஒருவருக்குச் சொற்களைத் திணித்து விளக்கம் தருவதற்கு என்ன தேவையிருக்கிறது ? நம்பிக்கைக்கு உதவி செய்வதானுல், அறிவை ஒரு துணை எனக் கொள்ளலாம்; நம்பிக்கையைக் குலைக்கு மானுல் அவ்வறிவு ஒரு தடையாகும். இறைவனை அடைவதற்குப் பக்தி, தவிர்க்க முடியாத பண்பாகும்.

## 43. கலிக்கம்ப நாயனார்

சோழப் பெருநாட்டில் பெண்ணாகடம் என்ற ஊரில் வாழ்ந்த இவ்வடியார், ஒரு வணிகர். அவர் கோயிலில் பணிவிடை செய்து வந்தார். அவர் சிவனடியார்களிடத்தில் இறைவனையே கண்ணுற்று அவர்களிடத்தில் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். அவருடைய மனைவியாரும் அவருக்கு இத்தகைய பணிகளில் மிகவும் உதவியாக இருந்தார்.

ஒரு நாள் அவருடைய முன்னாள் வேலைக்காரர் அடியார் கோலம்பூண்டு அவருடைய வீட்டுக்கு வந்தார்; நாயனார் வழக்கம்போல் அவருடைய திருப்பாதங்களை மங்கல நீராட்டி வழிபட்டார். ஆனால், பழைய வேலையாள் என்று அறிந்து கொண்ட அவருடைய மனைவியார் அப்பணியில் சேராமல், விலகி நின்றார். நாயனார் அவருடைய பக்திக் குறைபாட்டைப் புரிந்துகொண்டு அடியவர்க்குத் தண்ணீர் வார்க்காத அவ்வம்மையாரின் கையை வாளால் துணித்துத் தாமே நீர் வார்த்து அடியார் வழிபாட்டைத் தொடர்ந்து செய்தார். இத்தகைய யோக சாதனையைப் பயின்ற பெருமையால், அவர் இறைவனை அடைந்தார்.

நாரத முனிவர் தம் அழியாப் புகழ் வாய்ந்த 'பக்தி சூத்திரங்கள்' என்ற நூலில் வற்புறுத்தியுள்ள மிகப் பெரும் உண்மையை இவ்வடியார் நடைமுறையில் நிரூபித்துள்ளார்; இறைவனுடைய அடியார்களிடையே சாதியினாலோ, கொள்கையினாலோ, பதவியினாலோ எவ்வகையான ஏற்றத் தாழ்வும் இல்லை. அவர்களும் தமக்குள் எவ்வகையான வேறுபாட்டையும் பாராட்டுவதில்லை; எனவே மற்றவர்களும் இத்தகைய வேறுபாட்டைக் கருதக்கூடாது. அது இறைவனை நிந்திப்பதாகும். பெருமைமிகு அடியார்கள் இறைவனோடு ஒன்றாகி இருப்பவர்கள், அவர்கள் அனைவரும் கண்கண்ட தெய்வங்களாக விளங்குகின்றார்கள். அவர்களுடைய கடந்தகால வாழ்க்கை, சாதி அல்லது நம்பிக்கை எதுவாக இருந்திருப்பினும், இப்போது

அவர்கள் தெய்வத்தன்மையை அடைந்துள்ளார்கள்; எனவே இத்தகைய வேறுபாடுகள் பொருளற்றவை.

## 44. கலிய நாயனர்

கலிய நாயனர் திருவொற்றியூரில் வாழ்ந்த ஓர் எண்ணெய் வணிகர். சிவபெருமானிடம் அவர் கொண்டிருந்த உயர்ந்த பக்தி கோயிலில் விளக்குகளை ஏற்றும் பணியாக உருவெடுத்தது. அவர் பெரும் செல்வந்தர். ஆனல், அவருடைய பெருமையை வெளிப்படுத்துவதற்காக இறைவன் அவரை வறியவராக்கினர். அவருடைய சுற்றத்தாரும் அவருக்கு உதவிசெய்ய மறுத்தனர். அவர் எண்ணெய்க்குரிய பொருளை ஈட்டுவதற்காகக் கூலிவேலை செய்யத் தொடங்கினர். இதுவும் நிறைவேற முடியாமல் போகத் தொடங்கியது. அவர் தம்முடைய மனைவியை விற்றுவிட விரும்பினர். ஆனல் யாரும் வாங்கிக்கொள்ள முன்வரவில்லை. முடிவில், பொறுக்கமுடியாத துயரத்திற்காளாகி அவர் தம்முடைய கழுத்தை அறுத்து அதனல் பெருகும் இரத்தத்தையே எண்ணெய்க்குப் பதிலாக ஊற்றி விளக்குகளை ஏற்ற விரும்பினர். இம் முயற்சியின் போது சிவபெருமான் தோன்றி அவருடைய கையைப் பிடித்து நிறுத்தி அவரை ஆட்கொண்டு நல்லாசிகள் வழங்கினர்.

பக்தியின் பெருமையும், உறுதியும் இவருடைய எளிய வாழ்வில் படம்பிடித்துக் காட்டப்படுகின்றன. தன்னை மறத்தலே பக்தியின் மையக் கருத்தாகும். இறைவனையே எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கின்ற பக்தன், இறைவனும் இறைவழிபாடும் தவிர வேறென்றும் இல்லை என்று எண்ணும் அளவுக்கு இறை நினைவிலேயே ஆழ்ந்து மூழ்கிவிடுகின்ருன். எல்லா வகையாலும் எப்படியேனும், இறைவழிபாடு தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டே இருக்கவேண்டும், வழிபாட்டுக்குக் குறுக்கே ஒரு தடையும் நிற்கக் கூடாது. பக்தனுடைய இதயமும் எண்ணமும் நடைமுறைச் சாத்தியத்திலேயே இருக்கும்; வேண்டாம் என்ற

எதிர்மறை எண்ணம் புகுவதற்குச் சிறிதும் இடந் தருவதில்லை. துன்பங்களினிடையிலும் அவன் தன் கொள்கையை நிறைவேற்ற வழிகளைக் காணுகின்றான்; தடைகளால் அவன் தோல்வியடைவதில்லை; ஏனெனில் அத்தடைகளே அவனை இறைவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும் படிகளாகி விடுகின்றன.

## 45. சத்தி நாயனார்

சத்தி நாயனார் வேளாளர் குலத்தில் சோழப் பெருநாட்டில் வரிஞ்சையூரில் தோன்றினார். அவர் சிவபெருமானுடைய நேர்மையான பக்தர்; அவர் சிவனடியார்களைப் பெருமைப் படுத்தினார். அடியார் களைப்பற்றி, யாரும் தீங்கு சொன்னால் அவர் பொறுத்துக்கொள்ளமாட்டார்; தீங்கு சொன்ன வருடைய நாவினை வாளால் அரிந்து விடுவார். சிவபெருமான் அவருடைய தூய உள்மனத்தின் பாவனை யைப் புரிந்துகொண்டு அவர்மீது கருணைபொழிந்தார்.

இந்த எளிய வரலாறு, நாயனாருடைய பக்தியின் பெருமையை நமக்கு வெளிப்படுத்துவதோடுகூட, சாதுக்கள் அல்லது இறைவன் அடியார்களைப்பற்றி ஒருபோதும் பழித்துப்பேசக் கூடாது என்ற பாடத்தை யும் நமக்குக் கற்பிக்கின்றது. அவர்கள் இறைவனோடு இரண்டறக் கலந்தவர்கள்; எனவே அவர்களை நிந்தித் தால் அது தெய்வத்தையே நிந்தனை செய்வதாகிறது அது மிகப்பெரும் பாவம்; இமாலயத் தவறு அவர் களை உம்மால் மதிப்பிட முடியாது; ஏனெனில் அவர்கள் உமக்கு முற்றிலும் வேறான மனஉணர்வு நிலையில் வாழ்கின்றனர். யோகிகள், முனிவர்கள், அடியார்கள் ஆகியோருடைய விநோதமான நடவடிக்கைபற்றி நம் சமய நூல்கள் எண்ணற்ற நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுகின்றன. சில வேளைகளில் அவர்கள் சின்னஞ்சிறு குழந்தைகளைப்போலவும், சில நேரங் களில் பைத்தியங்களைப்போலவும், சில சமயங்களில் முட்டாள்களைப்போலவும் நடந்து கொள்ளுகின்றனர். சாதுக்களின் இயல்பு புரிந்துகொள்ள முடியாததாகும்.

எப்போதும் அவர்களை வணங்கி வழிபடுங்கள்; நீங்கள் நன்மை அடைவீர்கள். அவர்களின் நடத்தைபற்றிக் குறைசொல்ல வேண்டாம்; தீங்குபேச வேண்டாம்; குற்றஞ்சாட்ட வேண்டாம். அடியவர்களின் நடத்தை பற்றிக் குற்றம் சொல்லுபவன், அவர்களுடைய தீவினைகளால் சாரப்பெற்று அவற்றின் விளைவாக இரண்டு மடங்கு துன்பங்களை அனுபவிக்க நேரும் என்று நம் சமய நூல்கள் கூறுகின்றன. எனவே மிகவும் கவனமாக இருங்கள்!

உங்கள் முன்னிலையில் யாரேனும் இறைவனுடைய பக்தரைப் பற்றியோ அல்லது அடியாரைப் பற்றியோ பழி தூற்றினால், உடனே அவ்விடத்தை விட்டுப் போய் விடுங்கள். இல்லையெனில், உங்கள் ஆன்மீகப் பண்பாட்டின் அமைப்பு மிகவும் அபாயகரமாக ஆட்டங் கண்டு விடும்! எனவே கவனமாக இருங்கள்!

## 46. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

ஐயடிகள் காடவர்கோன் நாயனார், ஒரு பல்லவ அரசர். அவர் காஞ்சியை ஆண்டு வந்தார். அவர், தம் மக்களிடம் சைவ சமயப் பற்றையும் ஊட்டி வந்தார்.

விரைவில் அவர் உலக வாழ்வில் வெறுப்படைந்து தம் மகனை ஆட்சிப்பீடத்திலமர்த்திவிட்டு, உலகைத் துறந்து செல்லுமிடமெல்லாம் இறைவனுடைய புகழ்களைப் பாடியவாறு தொடர்ந்து தல யாத்திரை செய்தார். சிவபெருமான் இவருடைய பக்தியால் பெரு மகிழ்ச்சியடைந்து காட்சி தந்து அருள் செய்தார்.

இம்மன்னர், மன்னர்களுக்கும், சமூகப்பணி செய்யும் தலைவர்களுக்கும் பின்பற்றத்தக்க ஒரு முன் மாதிரியாக விளங்கினார். தலைவர்கள் தங்களைப் பின் பற்றும் தொண்டர்களுக்கு நல்ல எடுத்துக்காட்டாக விளங்க வேண்டும். தெய்வீகத் தன்மையும் நற் பண்பும் என்ற பாதையில் நடக்குமாறு அவர்கள் மனித இனத்தை ஊக்குவிக்க வேண்டும். இல்லையெனில்

அவர்கள் வாணாளை வீணாளாகக் கழிக்கின்றனர்; இதற்கு மேலும் அவர்கள் தங்களைப் பின்பற்றுவோருடைய பாவங்களில் கணிசமான பகுதியைத் தங்கள் தோள்களின்மீது சுமக்கிறார்கள்; ஏனெனில் அவர்களுடைய பாவங்களுக்கு அந்தலைவர்களே பொறுப்பாவர்.

இந்த நாயனார் இன்றும் நம் இதயங்களில் வாழ்கின்றார்; ஏனெனில் அவர் தம் குடி மக்களுக்குத் தம் சொந்த நடத்தையால் முன்மாதிரியாகத் திகழ்ந்தும், தம் போதனையைத் தாமே நடந்து காட்டியும் சேவை செய்தார். அவர் அவர்களுக்கு கற்பித்தார்; அவர்களை ஊக்குவித்தார்; முடிவில், தம் சொந்தத் துறவு வாழ்க்கையினாலும் இறைவனிடம் முழு மனதோடு ஈடுபட்ட பக்தியாலும், பின்பற்றத்தக்க மிகப் பெருமை வாய்ந்த எடுத்துக்காட்டாக விளங்கினார். இலட்சியத் தலைவர் ஒருவருடைய வாழ்க்கை இத்தகையதாகும்.

## 47. கணம்புல்ல நாயனார்

கணம்புல்ல நாயனார், இருக்குவேளூரில் வாழ்ந்த ஒரு செல்வந்தர். அவர் மிகப் பெரிய சிவபக்தர். இறைவனுடைய பணிகளுக்காகவே தம் செல்வங்கள் எல்லாவற்றையும் பயன்படுத்த விரும்பினார். ஆதலால் சிறிதும் வழுவாத பக்தியுடன் அவர் சிவத் தலங்களில் விளக்குகளை ஏற்றி இறைவனுடைய புகழ்களைப் பாடினார். சிவபெருமான் அவருடைய பக்தியை உலகுக்கு அறிவிக்க விரும்பினார். அவர் பக்தருடைய செல்வங்களை மறையச் செய்தார். பக்தர் சிதம்பரத்துக்குச் சென்றார். அவர் தம்முடைய உடைமைகளை விற்றுப் பெற்ற பொருளால் அங்கும் பணியைத் தொடர்ந்து செய்தார். வீட்டில் இனி எதுவும் இல்லை. அவர் புல்லை அரிந்து அதை விற்று நெய்யை வாங்கிக் கொண்டுவந்து விளக்குகளை ஏற்றினார். கணம்புல்லை அரிந்தமையால் கணம்புல்ல நாயனார் என்று பெயர் பெற்றார். ஒரு நாள் அவரால் புல்லை விற்க முடியவில்லை. எனினும் தம்முடைய விரதத்திலிருந்து

பிறழ்வதற்கு அவர் விரும்பவில்லை. அவர் கோயிலுக்குச் சென்று புல்லையே விளக்கு வத்தியாகத் திரித்து அதை எரித்தார். புல்லின் அளவு போதவில்லை ஆதலால் அவர் தம் தலையையே விளக்கின் அருகில் கொண்டு சென்று விளக்கொளியில் தம் முடியைப் பரப்பி எரிக்கத் தொடங்கினர். உடனே சிவபெருமான் அவர் முன்னே தோன்றி ஆட்கொண்டு நல்லாசிகள் வழங்கினர்.

## 48. காரி நாயனர்

சிவபெருமானிடம் ஆர்வம்மிகுந்த பக்தராகிய இவர் திருக்கடவூரைச் சேர்ந்தவர். அவர் தமிழில் புலமை நிரம்பியவர் அவர் தமிழ் மூவேந்தரிடமும் சென்று (தொகைப் பாடல்களாகிய) தமிழ்க் கோவையைப் பாடிப் பரிசில் பலவும் பெறுவது வழக்கம். அவர் பெருஞ் செல்வங்களை ஈட்டிக் கோயில்கள் கட்டினர். இவ்வாறு இவர் சைவ சமய நோக்கங்களைப் பரப்பினர். அவர் சிவனடியார்களுக்கும் பணிவிடைகள் செய்து இறைவனுடைய பெருங் கருணைக்குப் பாத்திரமானர்.

இறைவனுடைய உண்மையான பக்தன், இறைவனுக்காகவே உயிர் வாழ்கின்றன். அவன்பால் உள்ள அனைத்தும் இறைவனுக்குப் பக்தனுடைய காணிக்கையாக வழங்கப்படுகிறது. இறைவன் உன்னைப் படைத்தவர்; உன் தந்தை; உன் தாய்; உன் நண்பர்; உன் குரு. அவர் உனக்குப் பல்வேறு வகையான ஆற்றல்களையும், திறமைகளையும் வழங்கியுள்ளார். அவையாவும் அவருக்கே சொந்தம். அவர் அனைவருள்ளும் உறைகின்றர்; அவர்களனைவருக்கும் பணிவிடை செய்யவே உன் சக்திகளைப் பயன்படுத்த வேண்டும் என்று அவர் எதிர்பார்க்கின்றர். இந்தச் சாதாரணத் தருக்க நூல் அறிவினுல்தான் அடியார்கள் அனைவரும், எல்லா மக்கள் நடுவிலும் இறைவனைக் காணவேண்டும் என்றும், அவர்களுக்குள் உள்ள இறைவனுக்குப் பணிவிடைகள் செய்யவேண்டும் என்றும், பரந்த அகண்டாகாரமான அன்பினுல் அவரை

நேசித்துத் தன்னலமற்ற சேவையையும், அறத்தையும் வெளிப்படுத்த வேண்டும் என்றும் முடிவு செய்கிறார்கள்.

இத்தகைய தன்னலமற்ற தெய்வீக வாழ்க்கையை வாழ்வதனால் நீங்கள் உங்கள் மிக இழிவான ஆன்மீக எதிரியாகிய ஆணவத்தை வெற்றி கொண்டு இப்பிறப்பிலேயே, அல்ல, இந்த விநாடியிலேயே இறைவனை உணர்ந்துகொள்வீர்கள்.

## 49. நின்ற சீர் நெடுமாற நாயனாரும்
## 50. மங்கையர்க்கரசியாரும்

பாண்டிய மன்னனாகிய கூன்பாண்டியன் மதுரையை ஆண்டு வந்தான். முதுகு கூனியிருந்த காரணத்தால் கூன்பாண்டியன் என்று அழைக்கப்பட்டான். அவனே ஒரு தமிழ்ப் புலவன்; அவன் ஒரு தமிழ்ச் சங்கத்தை நிறுவித் தமிழ்ப் புலவர்களின் புரவலனாக விளங்கினான். அவனுடைய மனைவியின் பெயர் மங்கையர்க்கரசியார் அவள் சோழ நாட்டு மன்னனின் மகள். அவள் சிவபெருமானிடம் ஆர்வம்மிகுந்த பக்தை. குலச்சிறை நாயனார், மன்னனுடைய அமைச்சர்; அவரும் சிவபெருமானிடம் உறுதிமிகுந்த பக்தர் இவ்விருவருடைய புகழும் சிறக்குமாறு திருஞானசம்பந்தர் பதிகங்கள் பாடியுள்ளார்.

கூன்பாண்டியன் சமண சமய ஆதிக்கத்துக்கு இரையானான். அரசியாரும், அமைச்சரும் ஏதேனும் நடவடிக்கை எடுக்கவில்லையெனில் சைவ சமயம் அறவே அழிக்கப்பட்டுவிடும் என்று அஞ்சினர். சம்பந்தர் மதுரை நோக்கி வந்தபோது நகருக்குப் புறம்பே தங்கினார்; அவரை நகருக்கு வருமாறு குலச்சிறை நாயனார் அழைத்தார். சம்பந்தரைக் கொல்லச் சமணர் முயன்று தோல்வியடைந்தனர். சம்பந்தர் திருப்பதிகம் பாடியபோது மன்னனுடைய கூன் முதுகு நிமிர்ந்து

குணமாயிற்று; அவனுடைய வெப்பு நோயும் தணிந்தது அவன் சைவ சமயத்திற்கே மீண்டும் திரும்பினன். முதுகில் இருந்த கூன் மறைந்து நெடியனாக நிமிர்ந்து நின்ற காரணத்தால் அன்று முதல் அவன் நின்ற சீர் நெடுமாற நாயனார் என்று பெயர் பெற்றான்.

திருநெல்வேலியில் நடைபெற்ற போரில் பாண்டிய மன்னன் வடநாட்டு மன்னர்களை வெற்றி கொண்டு, எங்கும் சைவ சமயத்தைப் பரப்பினார். மங்கையர்க்கரசியார் தம் கணவருக்கு இப்பணியில் பேருதவி புரிந்தார். கணவனும், மனைவியுமாக இருவரும் சம்பந்தரைப் பக்தியோடும், பெரும் நம்பிக்கையோடும் வழிபட்டனர். தருவிடம் கொண்ட பக்தியாலும், சைவ சமயத்தின்பால் கொண்ட அன்பினாலும் அவர்கள் இறைவனுடைய அருளைப் பெற்றனர்.

## 51. வாயிலார் நாயனார்

இவ்வடியார் வேளாண் குலத்தவர்; மயிலாப்பூரைச் சேர்ந்தவர்; சிவ பக்தர். அவர் மனத்தில் கோயில்களைக் கட்டி மானத (மன) வழிபாடு செய்து வந்தார். அவர், மறவாமை என்னும் கோயிலைக் கட்டித் தன் உள்ளொளி என்னும் சுடர் விளக்கேற்றி, அழியாத பேரானந்தம் (பேரின்பம்) என்னும் நீர்களால் இறைவனை மங்கள நீராட்டி அமிர்தம் ஆகிய உயர் பேரன்பால் இறைவனை வழிபட்டு வந்தார். இவ்வாறு அவர் முக்தியின்பத்தை அடைந்தார்.

பர பக்தர் ஆகிய உயர்ந்த பக்தர் ஒருவரின் வாழ்க்கை, இது! உருவ வழிபாடு என்னும் நிலையை அவர் கடந்துவிட்டார். மிக உயர்ந்த மனத்தூய்மையையும், மனத்துள் ஒளிரும் உள்ளொளியின் மிக உயர்ந்த தெளிவையும் அவர் பெற்றமையால், உருவ அடையாளத்தின் உதவியில்லாமல், சடங்குகளின்

உதவியில்லாமல், தோன்றாத் துணையை எட்டமுடியாத மிக உயர்ந்த உயர் நிலைகளை எட்டும் அளவு தம் மனத்தை உயர்த்திக்கொள்ள முடிந்தது.

பக்தி பல வகைகளை உடையது என்பதைச் சுட்டிக் காட்டித் தனிப்பட்டவர் பலரின் வேறுபட்ட சுவைக்கும் விருப்பத்திற்கும் ஏற்றவாறு தம் பக்தி வகையைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளட்டும் என்பதற்காகத்தான், வாயிலார் நாயனாருடைய அதிசயிக்கத்தக்க எளிய வாழ்க்கை வரலாறு இங்கே சேர்க்கப்பட்டுள்ளது. அவர்கள் எத்தகைய பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாலும், முடிவில் அவர்கள் சிவபெருமானுடன் இரண்டறக் கலத்தலாகிய இலட்சியத்தை அடைகின்றார்கள். ஆன்மீகப் பாதை என்பது நொடிவிழுந்த பாதை அன்று என்றும், எல்லா நோய்களுக்கும் தரப்படும் ஒரே சர்வரோக நிவாரணி மருந்துபோன்றது அன்று என்றும், எல்லா மக்களுக்கும் எல்லாப் பருவங்களிலும் (குழந்தைப் பருவத்திலிருந்து முதுமைப் பருவம் வரை) வழங்கப்படும் ஒரே உணவுபோன்றது அன்று என்றும், ஆனால் தனிப்பட்டவர் ஒவ்வொருவருடைய தேவைகளுக்கும் ஏற்ப (விரிந்து பரந்த எல்லைகளுக்குள்) ஆன்மீக வாழ்க்கை தழுவி ஏற்றுக் கொள்ளப்படுகிறது எனறும் நம் இந்து சமயச் சான்றோர் எப்போதும் முழங்கி வருகின்றனர். ஒவ்வொருவரும் தமக்கு ஏற்ற ஒரு பாதையை அல்லது பல பாதைகளின் சந்திப்பாக அமைந்த ஒரு பாதையை ஏற்றுக்கொண்டு முடிவில் ஒரே இலட்சியத்தை அடைகின்றார்கள்.

## 52. முனையடுவார் நாயனார்

இவ்வடியார் சோழப் பெருநாட்டில் திருநீடூர் என்ற ஊரில் வாழ்ந்த ஒரு வேளாளர். அவர் சிவபெருமானிடத்தும் சிவனடியார்களிடத்தும் உயர்ந்த பக்தி கொண்டிருந்தார். போரில் தோல்வியடைந்தவர்களுக்கும், போர் செய்ய முடியாமல் பலவீனமாக

இருப்பவர்களுக்கும், போர் செய்யத் தகுந்த துணைப் படை இல்லாதவர்களுக்கும், அவர் எப்போதும் நம்பிக்கை தந்து உதவி புரிந்து வந்தார். தங்களுடைய தோல்வியை வெற்றியாக மாற்றித் தருமாறு அவர்கள் அவரைச் சந்தித்து வேண்டுவார்கள். போரையே தொழிலாகக்கொண்ட ஒரு போர் வீரராக அவர் தம் உதவிக்குத் தக்க கூலி பெற்றுக்கொள்வார். இப் பணிக்காக அவர் ஒரு தொகையைக் கூலியாகக் குறிப்பிட்டு, அத்தொகையைப் பெற்றுக்கொண்டு சிவனடியார்களுக்குத் திருவமுது படைத்து அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து நன்கு கவனித்து வந்தார். அவர் இவ்வாறு பொருளை ஈட்டி வந்த காரணத்தால் 'முனையடுவார்' (போர்க்களத்தில் போர் செய்பவர்) என்று பெயர் பெற்றார்.

இந்த நாயனாருடைய வரலாறு கற்பிக்கும் இரண்டு முக்கியமான பாடங்களை நாம் கவனிக்காமல் விட்டுவிடக் கூடாது. முதலாவதும் மிக முக்கியமானதும் ஆகிய பாடம், இறைவனால் வழங்கப்பட்ட, தற்காப்புக்காகப் போர் புரியும் திறமை, நலிவுற்றோரையும், வீழ்த்தப் பட்டோரையும், அடக்கி ஒடுக்கப்பட்டோரையும் பாது காக்க மட்டுமே பயன்படுமாறு நாயனார் கருத்துடன் பார்த்துக்கொண்டார் என்பதாகும். அவருடைய பார் வையில், வலிமைகூட இறைவனுடைய வெளிப்பாடு ஆகும்; ஆனால் அது அறநெறியில் இறைவனுடைய பணிக்காகவே பயன்படுத்தப்பட வேண்டும். இரண்டாவது பாடம், இத்தகைய பணிகளால் வரும் பொருள்கள் யாவும் இறைவனுக்கே காணிக்கையாக்கப் படவேண்டும். பகவத்கீதையும், அருளாளர்கள், முனிவர்கள் அனைவரும் போதிக்கும் போதனைகளின் மையக் கருத்து இதுவே. தன்னல மறுப்பும், இறை வனுக்குச் செய்யும் தியாகமும் ஆகிய அடித்தளத் தின்மீது அறம் தங்குகின்றது. எல்லா வகையான பாவங்களுக்கும் அவற்றின் விளைவாக ஏற்படும் துயரங் களுக்கும் எல்லாம் வேர்போன்ற காரணம் தன்னலமே !

## 53. கழற்சிங்க நாயனாரும்
## 54. செருத்துணை நாயனாரும்

கழற்சிங்க நாயனார் இறைவனிடம் ஆழ்ந்த பக்தி பூண்டிருந்தார். அவர், காடவர்குடி மரபைச் சார்ந்த ஒரு பல்லவ மன்னர் இறைவன் திருவருளின் துணையால் அவர் வடபுலத்து மன்னர்களை வெற்றி கொண்டு அங்கெல்லாம் சைவ சமயத்தை நிலை நாட்டினார். அவர் தலயாத்திரைகள் பலவும் மேற்கொண்டார்.

அவர் ஒருமுறை தம் அரசியுடன் திருவாரூர்க் கோயிலுக்கு வந்தார். அரசியார், கோயிலைச் சுற்றி வருகையில், சிவபெருமானுடைய வழிபாட்டுக்காக மலர்கள் வைக்கப்பட்டிருந்த மேடையருகே வந்து, தற்செயலாகத் தரையில் விழுந்த ஒரு மலரை எடுத்து முகர்ந்து பார்த்தார். அப்போது கோயிலில் பணிவிடை செய்து கொண்டிருந்த, தஞ்சையைச் சேர்ந்த வேளாள பக்தராகிய செருத்துணை நாயனார், அரசியாருடைய செயலால் எரிச்சலுற்றார். உடனே மலரை முகர்ந்து பார்த்த அரசியாருடைய மூக்கைத் துணித்தார்.

அரசியாருடைய பரிதாபமான புலம்பலைக் கேட்டு அரசர் அந்த இடம் நோக்கி விரைந்தார். முரட்டுத்தனமான இச் செய்கையைச் செய்தவர்மீது அரசர் அடங்காச் சினம் கொண்டார். அரசியாருடைய செயல் (சிவ அபராதம் ஆகிய) சிவபெருமானை நிந்தனை செய்ததாகும் என்று செருத்துணை நாயனார் அவருக்கு விளக்கிக் கூறினார். முகர்வதற்காக மலரை எடுத்த அரசியாருடைய கையைத் துணித்து மன்னர் கூடுதலாக இன்னொரு தண்டனையும் தந்தார். மன்னர், செருத்துணை நாயனார் ஆகிய இருவரையும் அன்பர்கள் போற்றினர்; விண்ணுலகிலிருந்து தேவர்கள், அவர்கள்மீது மலர்மாரி பொழிந்தனர். இருவரும் சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றனர்.

## 55. இடங்கழி நாயனார்

இவ்வடியார், கொடும்பாளூர் வேளிர் குலத்து அரசர். அவர் சிவபெருமானிடம் மிகவும் உறுதியான பக்தி கொண்டிருந்தார். சைவ ஆகமங்களின்படிச் சிவன் கோயில்கள் எல்லாவற்றிலும் வழிபாடுகள் நடைபெறுவதற்கான ஏற்பாடுகளை அவர் செய்தார். அதே ஊரில் மகேசுவர பூசை செய்யும் இன்னொரு சிவபக்தர் இருந்தார். தம பூசையைத் தொடர்ந்து செய்து சிவபக்தர்களுக்குத் திருவமுது படைக்க முடியாதவாறு அவர் வறுமையுற்றார். ஆதலால் ஒரு நாள் இரவில் அவர் இடங்கழி நாயனாருடைய, நெற்கூடுகள் நிறைந்த கொட்டகாரத்தில் நுழைந்து நெல்லைக் களவாடத் தொடங்கினர். காவலர் அவரைக் கையும் களவுமாகப் பிடித்து அரசரிடம் அழைத்துச் சென்றார். சிவபக்தர் களவாடியதன் நோக்கம் சிவனடியார்களுக்குத் திருவமுது படைப்பதேயாகும் என்று விசாரித்தறிந்த அரசர், அவரை விடுதலை செய்தார்.

இந்நிகழ்ச்சி அரசருடைய கண்களைத் திறந்து விட்டது. உடைமை எதுவும் தமக்கு உரியதல்ல என்பதையும், தம்மிடம் உள்ள எல்லாச் செல்வங்களுக்கும் உரிமை உள்ளவர்கள் சிவபெருமானும், சிவனடியார்களும் மட்டுமே என்பதையும் அரசர் உணர்ந்து கொண்டார். எனவே அவர் சிவனடியார்கள் அனைவருக்கும் தம் அரண்மனையிலும், நெல் கொட்டகாரத்திலும் நுழையவும், அவர்கள் விரும்பிய பொருள்கள் எவற்றையும் கொண்டுபோகவும் அனுமதி தந்தார். இவ்வாறு அவர் சைவ சமயத்தைப் பரப்புவதில் தமக்கிருந்த ஊக்கத்தைப் புலப்படுத்தினர். இவ்வாறு அவர் சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றார்.

## 56. புகழ்த்துணை நாயனார்

இவ்வடியார் செருவிலிபுத்தூரில் வாழ்ந்த பக்தி மிகுந்த ஆதிசைவர். அவர் ஆர்வம் மிகுந்த சிவ பக்தர்.

அவர் கோயிலில் அர்ச்சகராக இருந்தார். சைவ ஆகமங்களின்படி இறைவன் திருவுருவத்தைப் புனித நீராட்டி மந்திரங்களை உச்சரித்துப் பூசை செய்வது அவர் நாள்தோறும் செய்யவேண்டிய கடமையாகும். ஒரு சமயம் அந்த நாட்டில் பஞ்சம் தலைவிரித்தாடிய தால், உணவு சமைக்கவும் அவரிடம் பொருள் இல்லாதுபோயிற்று. இறைவன் திருவுருவத்தையும் நாட் கடமையையும் அவர் மிகுதியும் நேசித்தபடியால், பட்டினிகிடக்க நேர்ந்தும் அவர் அவ்வூரை விட்டுச் செல்ல விரும்பவில்லை. அவர் அங்கேயே நிலையாகத் தங்கியிருந்து தம்முடைய பூசையைத் தொடர்ந்து செய்து வந்தார். அவருடைய உடல் மிகவும் பலவீன மடைந்தது. ஒருநாள் அவர் தம் உடம்பில் சக்தி யில்லாமல் அசதியாக இருந்தும், இறைவனின் புனித நீராட்டுக்காக அவர் தண்ணீரைக் கொண்டுவந்தார்; அவர் இலிங்கத்தின்மீது தண்ணீரை ஊற்றிக் கொண்டிருந்தபோது தண்ணீர்க் குடம் அவருடைய கையிலிருந்து நழுவி இலிங்கத்தின்மீது விழுந்தது. மிகுந்த களைப்பு ஏற்பட்டமையால் நாயனார் மெய்மறந்து நினைவிழந்து கீழே விழுந்துவிட்டார். இறைவன அவருடைய கனவில் தோன்றி, பஞ்சம் தீரும்வரை, நாள்தோறும் கோயிலில் ஒரு பொற்காசு வைப்பதாக வும் அதைக்கொண்டு தேவைப்படும் உணவுப் பொருள் களை வாங்கித் தம் பசியைத் தணித்துக் கொள்ளுமாறும் தெரிவித்தார். நாயனார் விழித்தெழுந்து தாம் கண்ட கனவு நனவானதைக் கண்கூடாகக் கண்டார். தம் பக்தர் பஞ்சத்தைச் சமாளித்துக் கொள்ளுமாறு இறைவன் இவ்வாறு உதவினார். நாயனார் தம் நாள் வழிபாட்டைக் கோயிலில் தொடர்ந்து செய்து வந்தார்; முடிவில் சிவபுரத்தை அடைந்தார்.

## 57. கோட்புலி நாயனார்

இவ்வடியார் வேளாண் குடியில் தோன்றியவர். அவர் சோழ மன்னரின் படைத்தலைவர். சிவபெரு மானிடம் அவர் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். அவர் பக்தியும் அறநெறிச் சிந்தையும் வாய்ந்தவர். தம்

வருவாயைக் கொண்டு நெல்லை வாங்கி இறைவனின் நைவேத்தியத்திற்காகச் சிவன் கோயில்களுக்குத் தருவது அவருடைய வழக்கம். அவர் நீண்டகாலமாக இப்புண்ணியத்தைச் செய்து வந்தார்.

ஒருமுறை அவர் போர்க்கடமையின்மேல் செல்ல நேர்ந்தது. கோயில் உபயோகத்துக்காக அவர் போதிய அளவு நெல்லை இருப்பில் வைத்துத் தம் உறவினர்களிடம் ஒப்படைத்து அது இறைவனுக்காகவே பயன்படுத்தப்பட வேண்டியதென்றும், அவர்கள் தம் சொந்த உபயோகத்துக்காக அதைத் தொடக்கூடா தென்றும் தெளிவான கட்டளை தந்தார். அவர் இல்லாத போது, பஞ்சம் ஏற்பட்டது; அவருடைய உறவினர்கள் உணவில்லாமல் துன்புற்றார்கள். ஆதலால், அவர்கள் இறைவனுக்குரிய நெல்லில் கை வைத்தார்கள்; தங்கள் பசியைத் தணித்துக்கொண்டார்கள். நாயனர் தம் கடமையை நிறைவேற்றித் திரும்பியபோது தம் உறவினர்களின் செயலைப்பற்றிக் கேள்வியுற்றார். அவர்களிடம் அவர் மிகுந்த எரிச்சலடைந்தார். இக் குற்றத்துக்காக அவர் அவர்களைத் தம் இல்லத்துக்கு அழைத்துத் தம் பெற்றோர்களையும் சேர்த்துக் கொன்றார். இறைவனிடம் அவர் கொண்டிருந்த பேரன்பு, தம் நெருங்கிய உறவினர்களிடமும், தமக்கு மிகவும் வேண்டியவர்களிடமும் கொண்டிருந்த அன்பை முற்றிலும் மறைத்துவிட்டது. இறைவன் உடனே அவர் முன்னே தோன்றி, நல்லாசிகள் வழங்கி அவரால் கொல்லப்பட்ட உறவினர்கள், பெற்றோர்கள் ஆகிய அனைவருக்கும் ஆசி தந்து தம் சிவபுரத்துக்கு அழைத்துக்கொண்டார்.

## 58. பூசலார் நாயனர்

பூசலார் தொண்டை மண்டலத்தில் திருநின்றவூரில் வாழ்ந்த ஓர் அந்தணர். இறைவனுக்குச் செய்யும் அகவழிபாட்டில் அவர் தலைசிறந்து நின்றார். புறம்பே சடங்குகளால் செய்யும் வழிபாட்டைக் காட்டிலும், அகத்தே செய்யும் மனவழிபாடு ஆயிரம் மடங்கு

சிறந்தது; மனவழிபாடு சமாதி நிலைக்கு (மிகவுயர்ந்த உள்ளுணர்வுநிலை) அழைத்துச் செல்லுகிறது; அதனால் தன்னை உணரும் தெய்வீகநிலை ஏற்படுகிறது. அவர் சிவபெருமானுக்கு ஒரு கோயிலைக் கட்டவேண்டும் என்று மிகவும் விரும்பினார்; ஆனால் அதற்கான நிதி வசதி அவரிடம் இருக்கவில்லை: ஆதலால் அவர் கோயிலைக் கட்டுவதற்கு வேண்டிய பொருள்கள் யாவற்றையும் மனத்திலேயே சேகரித்தார். மங்கலம் நிறைந்த நன்னாள் ஒன்றில் அவர் அடிக்கல் நாட்டினார். அவர் கோயிலை எழுப்பி இறைவன் திருவுருவத்தைக் கருவறையில் நிலைபெறச் செய்யவும் மங்கல நாள் குறித்து வைத்தார்

காடவர் அரசர், தாமும் சிவபெருமான்மீது கொண்ட மிகவுயர்ந்த பக்தியினால் காஞ்சியில் அழகான பெருங்கோயிலை நிறுவினார். தற்செயலாக, அவரும் பூசலார் தம் மனத்தில் குறித்த அதே நாளையே இறைவன் திருவுருவத்தைக் கருவறையில் நிலைநிறுத்தக் குறித்து வைத்தார். பூசலாருடைய உயர்ந்த பக்தியை அரசருக்குக் காட்ட இறைவன் விரும்பினான். எனவே இறைவன் அரசருடைய கனவில்தோன்றித் தாம் திருநின்றவூரில் தம் பக்தர் கட்டியுள்ள கோயிலில் அந்தநாளில் இருக்க விரும்புவதால், அரசர் கருவறையில் இறைவன் திருவுருவை நிலைநிறுத்தும் நாளைத் தள்ளிவைத்துக் கொள்ளுமாறு தெரிவித்தார். அரசர் விழித்தெழுந்தவுடன் இறைவன் தெரிவித்த பக்தரை நேரில் காணவும் அவர் கட்டிய பெருங்கோயிலைக் கண்டு வழிபடவும் பெருவிருப்பம் கொண்டார்; அக்கோயில் தம் கோயிலைக்காட்டிலும் மிகவும் பெருமை பெற்றதாக இருக்கும் என்றும் அவர் நினைத்தார்.

அரசர் திருநின்றவூருக்கு வந்து கோயிலைத் தேடினார்; எங்குமே எத்தகைய கோயிலும் காணப்படவில்லை. பின்னர் அரசர் பூசலாரைப்பற்றி விசாரித்தார். அவர் பூசலாருடைய இல்லத்திற்குச் சென்று அவர்பால் அணுகினார். அரசருடைய கனவைப்பற்றிக் கேட்ட பூசலார் அதிர்ச்சியுற்றுச் செயலிழந்து நின்றார்.

விரைவில் அவர் உணர்வு திரும்பி மகிழ்ச்சிக் கடலில் திளைத்தார். அவர் பின்வருமாறு நினைத்தார். "இறைவனுடைய கருணையும் அன்பும் என்னே! நான் ஒரு அற்ப உயிர் தான்! எனினும் அவர் என் மனக் கோயிலைத் தம் சிவபுரமாக ஏற்றுக்கொள்ள இசைந்தார். நான் உண்மையில் பேரின்பம் பெற்றேன்!" கோயில் தம் மனத்தில் மட்டுமே இருப்பதாக அவர் அரசரிடம் தெரிவித்தார். அரசர் இதைக்கேட்டு ஆச்சரியமடைந்தார். பூசலாருடைய பக்தியைப் பாராட்டி அரசர் அவருடைய திருவடிகளில் பணிந்து வணங்கினர். பூசலார் இறைவனைத் தம் மனக்கோயிலில் எழுந்தருளச் செய்து வழிபாட்டைத் தொடர்ந்து செய்து முடிவில் சிவபுரம் அடைந்தார்.

## 59. நேச நாயனர்

இவ்வடியார் காம்பிலி என்னும் ஊரைச் சேர்ந்தவர். அவர் ஒரு நெசவாளி. இறைவனிடத்தும் அடியார்களிடத்தும் அவர் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். இறைவனுடைய தாமரை மலர்போன்ற திருவடிகளில் அவருடைய மனம் நன்கு பதிந்திருந்தது. அவருடைய வாய் எப்போதும் திருஐந்தெழுத்து மந்திரத்தை உச்சரித்துக்கொண்டிருந்தது. அவருடைய கைகள் எப்போதும் இறைவனுடைய அடியார்களுக்குப் பணிவிடைகள் செய்வதில் சுறுசுறுப்பாக இருந்தன. இம் மூன்று பண்புகளால் அவர் இறைவனுடைய திருவருளைப் பெற்ருர்.

இறைவனுடைய திருநாமத்தின் பெருமைக்கு இங்கே மற்றும் ஓர் உதாரணத்தைப் பார்க்கின்ருேம். இறைவனுடைய திருநாமத்தின் பெருமையைப்பற்றி நாம் ஏற்கனவே சிறப்புலி நாயனர் வரலாற்றில் பார்த்தோம்; இடையருது தொடர்ந்து மந்திரத்தை உச்சரித்தால், நாள்முழுதும் மட்டும் அன்று, கனவில் கூட நாம் இறைநினைவில் எப்போதும் இருக்கமுடிகிறது. அதைப் பயிலும் வழி இதுதான்: (பின்வருமாறு): காலையில் துயில்நீத்தெழுந்தவுடனே அரைமணி நேரம்

அமர்ந்திருந்து மந்திரத்தை மனத்தில் உச்சரிக்க வேண்டும்; வேலைசெய்யும்போதும் இப்பயிற்சி நடைபெற்றுக்கொண்டே இருக்கவேண்டும். ஒவ்வொரு மணி நேரத்துக்கு ஒவ்வொருமுறை சில கணங்கள் வேலை செய்வதை நிறுத்திவைத்து மனத்தளவில் இறைக்காட்சியைக் கண்டு மனத்திலேயே மந்திரத்தை உச்சரிக்கவேண்டும். இப்பயிற்சியில் நிலையாக நிலைபெற்று விட்டால், மற்றவர்களோடு உரையாடிக் கொண்டிருக்கும்போதும் அல்லது வேறு பணிகளில் ஈடுபட்டிருக்கும்போதும்—இல்லை, உறங்கிக்கொண்டிருக்கும்போதும்கூட, மனம் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே இருக்கும் இறைவனை உணர்ந்துகொள்ளுதல் இப்போது சாத்தியமாகின்றது. பெருமை மிகுந்த இந்த ஜெபயோகத்துடன், நேச நாயனார், இறைவனோடு இரண்டறக்கலக்கும் ஐக்கியப் பயிற்சியையும் செய்து வந்தார். அவர் இறைவனையே நினைத்தார்; இறைவனுக்காகவே வாழ்ந்தார்; இறைவனுக்காகவே பணிகள் செய்தார்; அவர் இறைவன்பால் மிகவுயர்ந்த பக்தி பூண்டு இறைவனையே நேசித்தார்.

## 60. கோச்செங்கட் சோழ மன்னர்

சோழப் பெருநாட்டில் சந்திரதீர்த்தத்தின் அருகே மரங்கள் அடர்ந்த ஒரு காடு இருந்தது. அக்காட்டில் ஒரு நாவல் மரத்தினடியில் ஒரு சிவலிங்கம் இருந்தது. ஒரு வெள்ளை யானை நாள்தோறும் அங்கு வந்து இலிங்கத்தின் முன்னால் பணிந்து தொழுது வந்தது. இலிங்கத்தின்மீது மிகவும் பக்திபூண்டிருந்த ஒரு சிலந்தி, காய்ந்த இலைகள் அதன்மீது உதிர்ந்துவிடுவதைக் கண்டு அவற்றைத் தடுப்பதற்காக இலிங்கத்தின்மேல் ஒரு வலையைப் பின்னியது.

அடுத்த நாள் வழிபாடுசெய்ய யானை வந்தபோது, சிலந்தி வலையைக் கண்டு, அங்கு வந்த யாரோ அப் புனிதமான இடத்தைக் களங்கப்படுத்திவிட்டதாக நினைத்து அவ்வலையைச் சிதைத்துத் தன் வழிபாட்டைச்

செய்துவிட்டு அங்கிருந்து அகன்றது சிலந்தி அவ்விடத்திற்கு வந்து தன் வலை அழிக்கப்பட்டிருந்ததைக் கண்டு வருந்தி மீண்டும் மற்றொரு வலையைப் பின்னிவிட்டுச் சென்றது. அடுத்த நாள், யானை வலையைப் பிடித்து இழுத்தபோது, அங்கு வந்திருந்த சிலந்தி அதைக் கொட்டவே அதன் நஞ்சு ஏறியதால் யானை அந்த இடத்திலேயே இறந்துபோயிற்று. சிலந்தியும் யானையின் துதிக்கைக்குள் அகப்பட்டிருந்தமையால், இறந்துவிட்டது.

இறைவன் திருவருளால் இச்சிலந்தி, சோழ மன்னன் சுபதேவனுடைய மகனாகப் பிறந்தது. அவனும் கடமையுணர்வுமிக்க அவனுடைய மனைவியும் சிதம்பரத்திற்குச் சென்று நடராசப் பெருமானை ஆர்வமுடன் துதித்து ஆண் குழந்தைப்பேறு வேண்டினர். இறைவன் வரம்தர இசைந்தான். விரைவில் கமலவதி கருவுற்றாள். குழந்தை பிறக்கும் நாள் அணுகியது. சில நிமிடங்கள் கழித்துக் குழந்தை பிறந்தால் அவன் மூவுலகங்களையும் அரசாளுவான் என்று சோதிடர்கள் முன்னறிந்து கூறினர். அரசியார் தம் இடுப்பை உறுதியான துணியால் கட்டி அறையின் விட்டத்தில் கயிறமைத்துத் தம்மைத் தலைகீழாக இருக்கும்படி பார்த்துக்கொள்ளுமாறு கேட்டார். மங்கல நேரம் வந்தபோது அம்மையார் விடுவிக்கப்பட்டார்; குழந்தையும் பிறந்தது. இது சிலந்தியின் 'மறு பிறப்பாகும். தாயின் கருவறையில் சிறிது நேரம் நீடித்துத் தங்கிய காரணத்தால் குழந்தையின் கண்கள் சிவந்துபோயின. தாயார் அவனுடைய கண்களைப் பார்த்துக் "கோச்செங்கண்ணன்' (சிவந்த கண்கள் உள்ள குழந்தை) என்று சொல்லி உயிர் துறந்தாள். எனவே அவன் கோச் செங்கட் சோழன் என்று பெற்றான், அவன் தகுந்த பருவத்தை அடைந்தபோது அவனுடைய தந்தை அவனை அரசனாக முடி சூட்டி உலகியல் வாழ்வைத் துறந்து கடுந்தவங்கள் செய்து சிவபுரம் அடைந்தான்.

கோச்செங்கட் சோழன் சைவ சமயத்தை வளர்த்தான். அவன் திருஆனைக்காவில் அதே நாவல் மரத்தின்

கீழ் சிவலிங்கத்தை நிறுவி ஓர் அழகான கோயிலைக் கட்டினான். சோழ நாட்டில் அவன் பல கோயில்களைக் கட்டினான்; தில்லை மூவாயிர அந்தணர்களின் உபயோகத்துக்காகப் பல மாளிகைகளையும் கட்டினான். சிதம்பரத்தில் வழிபாடுகள் ஒழுங்காக நடைபெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் வசதிகளையும் செய்து தந்தான். முடிவில் அவன் சிவபுரத்தை அடைந்தான். புலவர் பொய்கையார் தம் 'களவழி நாற்பது' என்ற நூலில் அவனுடைய பெருமைகளைப் பாடியுள்ளார்.

## 61. திருநீலகண்ட யாழ்ப்பாணர்

சோழப் பெருநாட்டில், திரு எருக்கத்தன்புலியூரில் திருநீலகண்டயாழ்ப்பாணர் என்பவர் சிவபெருமானிடம் பேரன்பும் பக்தியும் பூண்டு வாழ்ந்து வந்தார். யாழ் வாசிப்பதில் (வீணைபோன்ற இசைக்கருவி) அவர் வல்லவர். புனிதக் கோயில்களுக்குச் சென்று இறைவனுடைய பெருமைகளை யாழில் வாசிப்பது அவருடைய வழக்கம். அவர் ஒரு முறை மதுரைக்குச் சென்றார். வாசலில் நின்று கொண்டு அவர் பாடிக் கொண்டிருந்தார். இறைவன் அவரை மிகவும் அணுக்கமாக இருக்கச் செய்து கேட்க விரும்பி அடுத்த நாள் வரும் யாழ்ப்பாணரைக் கோயிலில் உள் கருவரைக்கு அழைத்து வருமாறு தம் பக்தர்களின் கனவில் தெரிவித்தார். அந்தணர்கள் அவரைக் கோயிலின் உள்ளே அழைத்துச் சென்றபோது யாழ்ப்பாணர் ஆச்சரியமடைந்தார்; ஆனால் இது இறைவன் திருவிளையாடல் என்று புரிந்து கொண்டு, இறைவன் தம்மை அருகே இருந்து யாழிசைப்பதைக் கேட்க விரும்புவதை அறிந்து கொண்டார். அவர் யாழிசைத்துப் பாடியபோது விண்ணில் ஒரு அசரீரி எழுந்து பின்வருமாறு கூறியது. "இசைக்கருவி ஈரமான தரையில் பட்டால் முறிந்து விடும், எனவே அவர் அமர்வதற்குப் பொற்பலகை இடுங்கள்!" உடனே அவருக்குப் பொற்பலகை இடப்பட்டது. யாழ்ப்பாணர் இறைவனைப் பணிந்து வணங்கி இறைவனுடைய மிக உயர்ந்த கருணைத் திறங்களை எல்லாம் பொற்பலகைமீது நின்றவாறே பாடினார்.

யாழ்ப்பாணர், பின்னர் திருவாரூருக்குச் சென்றார்; இங்குகூட அவர் கோயிலின் வெளியில் நின்று பாடினார். இங்கும் இறைவன் அவரைத் தமக்கு மிகவும் அருகில் இருந்து பாட வேண்டும் என்று விரும்பினார்; கோயிலின் வடக்குப் புறத்தில் ஒரு வாசலை உண்டாக்கினார். யாழ்ப்பாணர் இறைவனுடைய விருப்பத்தைப் புரிந்து கொண்டு அவ்வாசல் வழியே புகுந்து இறைவன் திருமுன்பு பாடினார். அவர் சம்பந்தரைச் சந்தித்த வரலாறும் முக்தியடைந்த நிகழ்ச்சியும் ஏற்கனவே சம்பந்தர் வரலாற்றில் சொல்லப்பட்டுள்ளன.

## 62. சடைய நாயனாரும்

## 63. இசை ஞானியாரும்

திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் சடையனார் என்ற ஆதிசைவர் வாழ்ந்தார். அவருடைய முன்னோர்கள் அனைவரும் சிவபெருமானிடம் ஆழ்ந்த பக்தி பூண்டவர்கள். அவரும் ஆசாரமும் பக்தியும் உள்ளவர். இசை ஞானியார் அவருடைய கடமையுணர்வுமிக்க மனைவி. அம்மையாரும் இறைவனிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். அவர்கள் முற்பிறப்பில் செய்து வந்த அறங்களின் பயனாக, அவர்களுக்கு ஒரு தெய்வீகக் குழந்தை பிறந்தது. அக்குழந்தையே சுந்தரமூர்த்தி நாயனார். அரசர் நரசிங்க முனையர், அக்குழந்தையின் அழகினால் ஈர்ப்புண்டு தாமே அக்குழந்தையை வளர்க்க விரும்பினார். அரசர் பெற்றோரை அணுகவும், அவர்கள் சிறிதும் தயங்காமல் குழந்தையை அவரிடம் ஒப்படைத்தனர். இச்செயலால், அவர்கள் இவ்வுலகில் எப்பொருளிடத்தும் பாசம் வைக்கவில்லை என்று நிரூபித்தனர்.

அவர்கள் மற்றவர்களுக்கு முன்மாதிரியாக இல்லற வாழ்வை நடத்தி முடிவில் இறைவனுடைய திருவருளைப் பெற்றனர்.

உலகியல் பாசம்தான் மனிதனைச் சம்சாரத்தில் கட்டி வைக்கிற ஒரே சங்கிலியாக உள்ளது. பாசம் இருந்தால் சம்சாரம் அல்லது பந்தம் இருக்கிறது; பாசத்திலிருந்து முற்றிலும் விடுபட்டால், நாம் உடனே ஜீவன் முக்தராகிறோம். இக்கணத்திலேயே இங்கேயே நாம் பிரம்மானந்தத்தை நுகர்வோம். இந்து மதத்தின் தனிச் சிறப்பு இதுவே; உடம்புடன் இருக்கும்போதே இவ்வுலகில் இங்கேயே நாம் உடனே முக்தி பெறுவோம் என்ற உறுதியை அது தருகின்றது. உடனே இவ்வுலகம் முழுவதும் தெய்வீகப் பேரொளியின் வெளிப்பாடாக மாறுகின்றது. படைப்பின் எல்லா மர்மங்களும் புதிர்களும் நமக்குப் புலனாகின்றன.

---

## மாணிக்கவாசகர்

பாண்டிய நாட்டில் திருவாதவூரில் சீலம் மிகுந்த ஓர் அந்தணர் வாழ்ந்தார். அவரும், கடமையுணர்வு மிகுந்த அவருடைய மனைவியும் முற்பிறப்புக்களில் செய்த புண்ணியங்களின் தகுதியினால், தகுந்த மகனைப் பெற்றுத் தம் சொந்த ஊரின் பெயரால், வாதவூரர் என்று பெயரிட்டனர்.

குழந்தை வளர வளர அறிவுநலமும் நன்கு வளரலாயிற்று. விரைவில் சிறுவன் சமய நூல்கள் எல்லாவற்றையும் கற்றுத் தேர்ந்தான். நற்குணங்கள் எல்லாவற்றின் உறைவிடமாகவும் அவன் விளங்கி அனைவருடைய அன்பையும் நன்மதிப்பையும் பெற்றான். புலமை நிறைந்த பண்டிதர்களும் ஞானிகளும்கூட அவனுடைய தோற்றத்தாலும் அறிவாற்றலாலும் கவரப்பட்டனர். மதுரை மன்னன் அரிமர்த்தன பாண்டியன் வாதவூரரின் குணநலன்களைப்பற்றிக் கேள்வியுற்று அவர் எல்லாத் துறைகளிலும் வல்லவர் என்பதையும் நிர்வாகத் திறமை மிகுந்தவர் என்பதையும் கண்டுகொண்டார். அரசர் அவரைத் தம் முதலமைச்சராக ஆக்கிக்கொண்டார். இங்கும் வாதவூரர்

ஒப்பற்ற தம் அறிவினல் பொலிவுற்று விளங்கித் தென்னவன் பிரமராயர் என்ற பட்டத்தையும் பெற்ருர்.

எனினும், நாட்கள் செல்லச் செல்ல, வாதவூரரின் உள்ளத்தில் வெறுப்பு வளர்ந்தது. அவர் உலகின் நிலையாமையை உணர்ந்துகொண்டார். பிறப்பு, நோய், இறப்பு, மீளப்பிறத்தல் முதலிய ஒவ்வொன்றும் அவருக்கு வேதனை தந்தது. அவர் சிவானந்தம் என்னும் பேரின்பத்தை நுகர விரும்பினர். அரசியல் கடமைகளை அவர் நிறைவேற்றிக் கொண்டிருந்த நேரங்களில்கூட அவருடைய மனம் இறைவனுடைய தாமரை மலரடி களில் பதிந்திருந்தது. அவர் கற்றறிந்த அறிஞர்களை வரவழைத்து அவர்களுடன், வேதங்களில் உள்ள சிக்கலான கருத்துக்களைப்பற்றித் தர்க்கம் செய்வார். உண்மையான ஆன்மீக முன்னேற்றத்துக்கு ஓர் குரு மிகவும் அவசியம் வேண்டும் என்று அவர் விரைவில் உணர்ந்தார். உண்மையான குருவைச் சந்திக்க அவர் மிகுந்த ஆவல் கொண்டார். கடமையின் பொருட்டு வெளியே எங்கு சென்ருலும் அவர் தம் குருவையும் தேடிவந்தார்.

ஒருநாள் அரசர் அரசவையை நடத்திக் கொண்டிருந்தபோது குதிரைப்படைத் தலைவன் உள்ளே நுழைந்து குதிரைகள் நோயாலும், இறப்பாலும், மூப்பாலும் எண்ணிக்கையில் குறைந்து விட்டன என்றும் உடனே புதிய குதிரைகளைச் சேர்க்கவேண்டி யுள்ளதென்றும் அறிவித்தான். அரசர் உடனே நல்ல குதிரைகளை வாங்குவதற்கான ஆணை பிறப்பித்தார். நல்ல குதிரைகளைத் தகுந்த இடத்திலிருந்து வாங்கும் பணி வாதவூரரிடத்தில் ஒப்படைக்கப்பட்டது. வாதவூரர், இப்பயணத்தின்போது நிச்சயம் உண்மை யான குருவைச் சந்திக்கமுடியும் என்று கருதிப் பெரு மகிழ்ச்சியடைந்தார். இவ்வாய்ப்பு அவருக்குத் தெய்வ அருளால் நேர்ந்தது. நேர்மையான உள்ளத்துடன் அவர் சோமசுந்தரக் கடவுளுக்குக் கோயிலில் வழிபாடு செய்து மேனியில் திருநீறணிந்தவராய், வாயில் இறைவன் நாமத்தை உச்சரித்தவராய்ப் போதிய

நிதியுடன் குதிரைகளை வாங்கிக்கொண்டுவரும் பணியை நிறைவேற்றப் புறப்பட்டுச் சென்றார். அவர் திருப்பெருந்துறையை அடைந்தார்.

அனைவர் இதயங்களிலும் உள்ளுறையும் சிவ பெருமான், வாதவூரரின் உட்கிடக்கையான மனநிலையை அறிந்தவராய் அடியார் கூட்டத்தில் அவரைச் சேர்க்க முடிவு செய்தார். அந்தணர் கோலம்பூண்டு, கையில் சிவஞான போத நூலின் படியொன்று தாங்கித் திருப்பெருந்துறையில் கோயிலில் குருந்த மரத்தடியில் வீற்றிருந்தார். அவரைச் சுற்றிலும் மற்றவர்கள் (விண்ணுலகத் தொண்டர்கள் மக்கள் கோலம்பூண்டு) புடைசூழ்ந்திருந்தனர். வாதவூரர் கோயிலில் நுழைந்து இறைவன் முன்னிலையில் வழிபாட்டில் ஆழ்ந்து செயலற்று நின்றார். தெய்வபக்தியால் அவர் கண்ணீர் சொரிந்தார். பின்னர் அவர் கோயிலை வலம் வந்தார். குருந்த மரத்தருகே வரும்போது அவர் இறைவன் நாமத்துக்குரிய புனித ஒலி அலைகளைக்கேட்டார்; ஹர ஹர என்னும் ஓசைகேட்டு அவருடைய உள்ளம் உருகிற்று. அந்தணருடைய காந்த சக்தி மிகுந்த தோற்றப்பொழிவு அவரை இழுத்தது. ததும்பி வழியும் அன்பாலும் பக்தியாலும் வாதவூரர் அந்தணர்பால், நீண்டகாலம் பிரிந்திருந்த தாய்ப் பசுவைக்கண்ட கன்று போல் ஓடிச்சென்று அந்தணரின் திருவடிகளில் வீழ்ந்தார்.

இறைவன் திருவருளால், வாதவூரர் அவரே தம் உண்மையான குரு என்று கண்டுகொள்ள முடிந்தது. அவருடைய திருவடிகளைத் தம் கைகளால் பற்றிக் கொண்டு, 'பெருமானே! அருள்கூர்ந்து என்னைத் தங்கள் அடிமையாக ஏற்றுக்கொண்டு அருள் செய்யுங்கள்' என்று வேண்டினார். இறைவன் இதற்காகவே காத்திருந்தான்; வாதவூரர்பால் கருணைமிக்க கடைக்கண் நோக்கம் வைத்தான். இதனால் வாதவூரர் தீவினைகளிலிருந்து விடுபட்டு மனத்தூய்மை பெற்றார். பின்னர் இறைவன் சிவஞானத்தின் தெய்வீக மர்மங்களைப் புரிந்துகொள்ளத் தீட்சை செய்தான். தீட்சை

செய்த அளவிலேயே வாதவூரர் மெய்ம்மறந்து பரவசமடைந்தார். அவர் தெய்வீகப் பேரின்பத்தை நுகர்ந்து தன்னை மறந்து அதிலேயே தோய்ந்திருந்தார். பின்னர் வாதவூரர் மீண்டும் தன் நினைவுபெற்று, மீண்டும் குருவின் திருவடிகளில் வீழ்ந்தார். 'பெருமானே! தெய்வீக மர்மங்களை நான் புரிந்து கொள்ளுமாறு எனக்குத் தீட்சை செய்ய வந்தவரே! ஒரு பார்வையால் என்னை வசப்படுத்தியவரே! என் மனம் உருகச் செய்தவரே! உடல், பொருள், ஆவி அனைத்தும் உணர்வும் உமக்கே ஒப்படைக்கச் செய்தவரே! தோளாமுத்தே! அழியாச் செல்வமே! பேரின்பக் கடலே! அமரத்துவம் வழங்கும் அமிர்தமே! வணக்கம்! வணக்கம்!' என்று அழுது அரற்றி இறைவன் புகழ்களைப் பாடி வாதவூரர் தம்மிடம் இருந்த உடைமைகள் எல்லாவற்றையும் குருவின் காலடிகளில் ஒப்படைத்தார். அவர் ஓர் துறவியாகி விட்டார். மேனி எங்கும் புனிதத் திருநீறு பூசி, மனத்தைக் குருவின் பாதகமலங்களில் பதித்து; வாதவூரர் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கினர். இந்த தியானத்திலிருந்து அவர் விழிப்புற்றபோது இறைவன் புகழ்களைப் பாட வேண்டும் என்ற விருப்பம் அவர் மனதில் நிறைந்தது. அன்பே நாராகவும், அமுத மொழிகளே மாணிக்கங்களாகவும் பாமாலை தொகுத்துக் குருவின் காலடிகளில் அணிவித்தார். இறைவன் பெருமகிழ்ச்சியடைந்து அவரை 'மாணிக்கவாசகர்' என்றழைத்தான்; ஏனெனில் அவர் பாடிய பாடல்கள் அறிவொளிமிகுந்த மாணிக்கங்களாக விளங்கின. அவரை அங்கேயே தங்கியிருக்குமாறு கட்டளை தந்து இறைவன் மறைந்தான்.

இறைவனையும், குருவையும் பிரிந்திருக்க நேர்ந்தமையால் மாணிக்கவாசகரால் பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக்கொள்ள முடியாமல் ஆழ்ந்த வருத்தத்தையும், துயரத்தையும் அவர் அடைந்தார். விரைவில் அவர் தாமே தம்மைத் தேற்றிக்கொண்டு இறைவனும் குருவும் பற்றிய நினைவுகளிலேயே உயிர் வாழ்ந்தார். வாதவூரருடன் உடன் வந்த அரசனுடைய பணியாட்கள்,

அவர் தாம் வந்த காரியத்தை மறந்துவிட்டார் என்று கருதிச் சில நாட்கள் பொறுத்திருந்து அவருக்கு மெதுவாக நினைவுப்படுத்தினர்கள். இன்னும் ஒரு மாத காலத்தில் மதுரைக்குக் குதிரைகள் வந்து சேரும் என்ற செய்தியுடன் மாணிக்கவாசகர் அவர்களை அரசனிடம் அனுப்பினர். வாதவூரருக்கு நிகழ்ந்தவற்றைப்பற்றி அரசன் செவியுற்றபோது சினங்கொண்டான்; ஆனாலும் ஒரு மாத காலமாகட்டும் என்று பொறுமையுடன் காத்திருந்தான்.

திருப்பெருந்துறையில் மாணிக்கவாசகர், அரசனையும் தம் காரியத்தையும் மறந்து இறைவனிடம் பக்திபூண்டிருந்தார்; ஒரு கோயிலைக் கட்டுவதற்காகத் தாம் கொண்டு வந்த நிதியைச் செலவிட்டார். ஒரு மாதம் கழிந்தவுடன் அரசன் தன் சினத்தை வெளிப்படுத்தும் ஓர் குறிப்பை அவருக்கு அனுப்பி, அரசனுடன் காரியத்தில் ஈடுபடுபவர் ஓர் நாகத்துடன் ஈடுபடுவது போல் விழிப்புடன் இருக்க வேண்டும் என்று அறிவுறுத்தி உடனே தம் முன்னே தோன்றுமாறு அறிவித்தான். மாணிக்கவாசகர் நிலைகுலைந்தார். அவர் கோயிலுக்குச் சென்றார். தம்மைக் காப்பாற்றும்படி அவர் இறைவனை வேண்டித் தொழுதார். அவருடைய நேர்மையான வழிபாட்டினால் மனம் நெகிழ்ந்த இறைவன் அன்றிரவு அவருடைய கனவில் தீட்சை செய்த குரு வடிவில் தோன்றி 'பண்புடையாய்! அஞ்சாதே! மதுரைக்கு மிக நல்ல குதிரைகளை நானே அழைத்து வருகின்றேன். முன்னதாக நீ அங்கே போய் இரு. ஆவணி மூலத்தன்று குதிரைகள் வந்து சேரும் என்று அரசனிடம் தெரிவி' என்று கூறினர். மிகவும் விலையுயர்ந்த வைரமணியை அவருடைய கைகளில் சேர்ப்பித்து இறைவன் மறைந்தான்.

அடுத்த நாள் காலையில் மாணிக்கவாசகர் பெருந்துறைப் பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு அமைச்சுத் தன்மைக்குரிய அணியாடைகளைப் புனைந்து கொண்டு மதுரை நோக்கிப் புறப்பட்டார்; அரசனைப் பணிந்து வணங்கி அவனிடம் வைரமணியை

வழங்கினர். 'அரசே! நான் கொண்டு சென்ற நிதிக்கெல்லாம் குதிரைகளை ஏற்கனவே வாங்கிவிட்டேன். குதிரைகளை எல்லாம் இங்கே கொண்டு வந்து சேர்ப்பதற்கான மங்கல நன்னாள் வரட்டும் என்று காத்திருந்தேன். ஆவணி மூலம் மிகவும் சிறந்த பொன்னாள். தங்கள் கட்டளைக்குப் பணிந்து இடையே நான் திரும்பினேன். குதிரைகள் யாவும் அந்த நன்னாளில் இங்கு வந்து சேரும்' என்று தெரிவித்தார். அரசன் தான் சினத்துடன் குறிப்பை அனுப்பியமைக்காக வருத்தம் தெரிவித்துக் கொண்டான். குதிரைகள் வந்து தங்குவதற்காக மாணிக்கவாசகர் மிகவும் பெரிய லாயத்தைக் கட்டினர்.

மாணிக்கவாசகருடைய உறவினர்கள் அவருடைய உண்மையான மன நிலைபற்றி ஐயுற்று உலகைத் துறந்துவிடாமல் தங்கள் அனைவரையும் பேணிக் காக்குமாறு வேண்டினர். அவர் சிரித்துக் கொண்டு, ''நண்பர்காள்! இறைவன் எனக்குத் தீட்சை அளித்த போதே நான் எல்லாவற்றையும் அவருடைய திருவடிகளில் தத்தம் செய்து விட்டேன். இறைவனும், இறைவனுடைய அடியார்களும் தவிர எனக்கு வேறு உறவினர்கள் யாரும் இல்லை. இந்த என் உடம்பின் மீதும் எனக்கு எந்தவித தொடர்பும் கிடையாது. நம் அனைவருடைய பாவங்களையும் போக்கிப் பேரின்பத்தைப் பொழியவல்ல இறைவன் ஒருவன்தான் எனக்குள்ள ஒரே பற்று. பிறப்பதும் துன்பம், இறப்பதும் துன்பம். இறைவனோடு தொடர்பில்லாத எதுவும் துன்பமே. இனி நான் உலகில் உள்ள எதன் பொருட்டும் கவலைப்படவில்லை. விரித்த என் உள்ளங்கையையே பிச்சைப் பாத்திரமாகக் கொண்டு நான் மகிழ்வுடன் பிச்சை ஏற்பேன்; தற்செயலாகக் கிடைக்கும் உணவைக் கொண்டு நான் பசியாறுவேன் நான் தங்குவதற்கு இடம்தர நிலமே தயாராக இருக்கும்போது தனி மாளிகையில் நான் ஏன் அடைக்கலம் அடைய வேண்டும்? என் மேனியில் நான் பூசிக்கொள்ளும் வாசனைத்திரவியம், திருநீறுதான். பல பிறவிகளிலும் செய்த பாவங்கள் அனைத்தையும் அழிக்கவல்ல உருத்

திராட்ச மாலையே என் ஒரே உடைமை. நண்பர்காள்! நான் இறைவனுடைய பாதுகாப்பில் இருக்கும்போது நான் யாருக்காகவும் ஏன் அஞ்சவேண்டும்? என்று தெரிவித்தார்.

இறைவனிடம் லயித்த மனத்துடன், மாணிக்க வாசகர் மங்கல நன்னாளை எதிர்பார்த்துக் கொண்டிருந் தார். இதற்கிடையில், அமைச்சர்களில் ஒருவர், மாணிக்கவாசகர் உண்மையில் நிதியையெல்லாம் கோயில்களைக் கட்டுவதிலேயே செலவழித்துவிட்டார் என்றும், குதிரைகள் வரும் என்று மாணிக்கவாசகர் கூறியது பொய்யென்றும் அரசனிடம் தெரிவித்தார். அரசனுடைய ஐயம் நாளுக்கு நாள் வளர்ந்தது. அவன் தூதுவர் சிலரைப் பெருந்துறைக்கு அனுப்பி அங்கு குதிரைகள் உண்மையில் உள்ளனவா என்று பார்க்கச் சொன்னான். அவர்கள் திரும்பி வந்து 'இல்லை' என்று விடை கூறினர். இனி, இரண்டே நாட்கள் இருந்தன. குதிரைகளைப் பற்றிய தகவல் எதுவும் அரசனுக்கு வரவில்லை. ஆகையால் அரசன் தன் படைவீரர்களுக்கு மாணிக்கவாசகரைச் சித்ரவதை செய்து துன்புறுத்தி நிதியைத் திரும்பப்பெறுமாறு கட்டளையிட்டான். அவர்கள் அரசவையில் நடைபெற்ற எல்லாவற்றையும் மாணிக்கவாசகரிடத்தில் தெரிவித்தார்கள். அவர் மிகவும் அமைதியாக இருந்தார். அரச கட்டளைக்கு இணங்க அவர்கள் அவரைத் துன்புறுத்தினர்; அவர் எல்லாவற்றையும் சகித்து கொண்டார். அவர் தம் மனத்தை இறைவனிடமே பதித்திருந்தார். இறைவன் தாமே தண்டனைத் துன்பங்கள் யாவற்றையும் தாங்கினார்; பக்தர் விடுவிக்கப்பட்டார். அவர் எவ்வாறு பொறுத்துக் கொண்டுள்ளார் என்ற இரகசியத்தைப் படை வீரர்கள் புரிந்து கொள்ள முடிய வில்லை. அவர்கள் அவரை மேன்மேலும் துன்புறுத்தி னார்கள். அவர் இறைவனிடம் முறையிட்டார். இறைவன் தன் பக்தருடைய முறையீட்டைச் செவி யேற்றுத் தன் திருவிளையாடலை ஆட விரும்பினான். நாட்டில் உள்ள நரிகள் யாவும் பரிகள் ஆகுமாறு மனத் தில் எண்ணங்கொண்டான். விண்ணுலகில் இருந்த தன்

தேவ தூதர்களைக் குதிரைப் பாகர்களாக நடிக்குமாறு அனுப்பினான். தானும் குதிரைச் சாத்து வணிகனாகக் கோலம் கொண்டான். இறைவன் மதுரையை அடைந்தான். குதிரைகளின் பாய்ச்சலால் எழுந்த தூசி விண்ணெங்கும் நிறைந்தது. அழகிய குதிரைகளைப் பார்த்த மக்கள் ஆச்சரியத்தால் வாயடைத்துப் போயினர். அன்று, ஆவணி மூலத்திருநாள். காரணமின்றி மாணிக்கவாசகரை வருத்திவிட்டோம் என்ற எண்ணம் அரசனுடைய மனத்தைப் புண்படுத்தியது. அவன் அவரை உடனே விடுவித்து மன்னிப்பை வேண்டினான். அவர்கள் இருவரும் குதிரைகள் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருந்த இடத்தை அடைந்தார்கள். தரம் உயர்ந்த நல்ல குதிரைகளைக் கண்டு அரசன் மகிழ்வுற்றான். குதிரை வணிகனும் அழகுடன் காணப்பட்டான். அவ்வாறு வந்தவன் இறைவனே என்ற உண்மையை மாணிக்கவாசகர் அறிந்து மானசீகமாக தன் வணக்கங்களைச் செலுத்தினார். அரசனுடைய பணியாட்கள் குதிரைகளை லாயத்திற்குக் கொண்டு சென்றார்கள்.

பகல் கழிந்து இரவு வந்தது. இறைவன் விரும்பியவாறு, குதிரைகள் யாவும் பழையபடி நரிகளாக மாறிக் கடிவாளங்களை உடைத்துவிட்டு ஊளையிட்டவாறு லாயத்தைவிட்டு வெளியே ஓடிவிட்டன. அவற்றுள் சில நரிகள், உண்மையாக இருந்த குதிரைகளையும் கடித்துக்குதறின. மூப்படைந்த நரிகள் சில லாயத்திலேயே தங்கிவிட்டன. அடுத்த நாள் காலையில் குதிரைப்பாகர், லாயத்தில் இருந்த ஒரு சில நரிகளைத் தான் கண்டான்; குதிரைகள் எவற்றையும் காணவில்லை. அவர்கள் உடனே அரசனிடம் இதை அறிவித்தார்கள். மாணிக்கவாசகர் ஏதோ மாயம் செய்து தன்னை ஏமாற்றியதாகக் கருதிய அரசன் அவர்மீது அடங்காச் சினங்கொண்டான், அரசனுடைய படைவீரர்கள் அவரை மீண்டும் வதைக்கத் தொடங்கினார்கள். மாணிக்கவாசகர் தம்மைக் காப்பாற்றும்படி இறைவனிடம் முறையிட்டார். உடனே இறைவன் வைகை நதியில் வெள்ளப்பெருக்கு எடுத்து ஓடுமாறு

செய்தான். நகரில் எங்கும் திகிலுணர்ச்சி காணப் பட்டது. காலம் அல்லாக்காலத்தில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டதன் காரணத்தை மக்கள் புரிந்து கொள்ள முடியவில்லை. மாணிக்கவாசகரை காவல் செய்த படை வீரர்களும் ஓடிவிட்டனர். அவர் கோயிலுக்குச் சென்றூர். அவர் சோமசுந்தரப் பெருமானைத் தொழுது தியானத்தில் முற்றிலும் மெய் மறந்து திளைத்தார். அரசன் குழப்பமடைந்தான். நகரை அழிந்துவிடாமல் காப்பதற்கு அவன் விரும்பினான். எனவே அவன் நகரில் உள்ள ஒவ்வொருவரும் ஒவ்வொரு கூடை மண் ஆற்றின் கரையில் இட்டு வெள்ளத்தைத் தடுக்குமாறு ஆணையிட்டான். வந்தி என்னும் பெயருள்ள ஒரு கிழவியைத் தவிர அனைவரும் தம் கடமையை நிறை வேற்றினர். அவள் பிட்டு (சிற்றுண்டி) விற்று வாழ்வை நடத்தி வந்தாள். அவள் சோமசுந்தரப் பெருமானிடம் மிகுந்த பக்தி பூண்டிருந்தாள்; நாள் தோறும் முதல் பிட்டை இறைவனுக்குப் படைத்துவிட்டு விற்பனையைத் தொடங்குவாள். அவள் தற்போது துயரமடைந்தாள். உதவி செய்யுமாறு அவள் இறைவனிடம் முறையிட்டாள். சிவபெருமான் பெருங் கருணை கொண்டு கூலியாள் போன்ற கோலத்தில் கிழவியின் முன்னே தோன்றித் தான் பணி செய்வ தாகவும் கை நிறையப் பிட்டு தந்தால் அதுவே தனக் குரிய கூலியாகும் என்றும் தெரிவித்தான். இடையைச் சுற்றிலும் அழுக்குடை அணிந்து தலைமீது கூடை சுமந்து அவன் ஆடுவதும், பாடுவதுமாக இருப்பான்; பின்னர் கரையில் மண்ணைக் கொட்டுவான். கிழவி அன்புடன் தரும் பிட்டை உண்டுவிட்டு மண்ணைக் கரையில் வேக மாகக் கொட்டுவதனுல் புதிய உடைப்புகளை ஏற்படுத்தி விடுவான். சிறிது நேரம் களைத்துப் போனதுபோல் செயலற்றுச் சோம்பியிருந்து மீண்டும் ஆடவும், பாடவும் தொடங்குவான். அவன் பணி செய்து அடைக்க வேண்டிய இடம் அடைக்கப்படாமல் இருந்த தைக் கண்ட பணியாட்கள் அரசனிடம் புகார் செய் தனர். அரசன் பணிகளை எல்லாம் தானே நேரில் பார்வையிட்டு வருகையில், புதிய கூலியாள் வேலை எதுவும் செய்யாமல் சோம்பேறியாக இருந்ததைக்

கண்டு பிரம்பினால் அடித்தான். இறைவன் மண்ணைக் கொட்டவும் உடைப்பு அடைப்பட்டது. எனினும், அடி அண்டசராசரங்களில் உள்ள எல்லா உயிர்களுக்கும் பட்டது. இறைவனுடைய திருவிளையாடல்தான் இது என்று அரசன் உடனே உணர்ந்து கொண்டான். அவன் மாணிக்கவாசகருடைய பெருமையைப் புரிந்து கொண்டான். அதே நேரம் அவன் பின் வரும் அசரீரியைக் கேட்டான். "அரசே! உன் செல்வம் முழுவதும் எனக்காகவும், என் அடியார்களுக்காகவும் செலவு செய்யப்பட்டது. இச்செயலால் மாணிக்கவாசகர் உனக்குப் பெரும் புண்ணியத்தை ஈட்டியுள்ளார். எனவே அவரிடம் நன்றி காட்டுவதற்குப் பதிலாக அவரை மிகவும் துன்புறுத்திவிட்டாய். என்னுடைய பக்தனுக்காகவே நான் நரிகளைப் பரிகளாக மாற்றியும், திடீரென்று இந்த வெள்ளப்பெருக்கு ஏற்படுமாறும் திருவிளையாடல் புரிந்தேன். இப்போதாவது நீ கண் திறந்து பார்; உன் எதிர்கால நலன் கருதி ஒரு பாடங்கற்றுக்கொள்''.

இதற்கிடையில், மாணிக்கவாசகர் கோயிலை அடைந்து தியானத்தில் மூழ்கினார். அரசன் இறைவனுக்குத் தந்த அடி அவர்மீதும் பட்டதை உணர்ந்தார். தியானத்திலிருந்து அவர் எழுந்தார். அரசன் அவரைத் தேடிக்கொண்டிருந்தான். கிழவி விண்ணுலகத் தேரில் ஏறிச் சிவபுரத்தை அடைந்தாள் என்று அவன் வரும் வழியில் சிலர் தெரிவித்தனர். அவன் திருஆலவாய்க் கோயிலை அடைந்து மாணிக்கவாசகரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். நாட்டை ஆளும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படி அவன் மாணிக்கவாசகரை வேண்டினான். அவர் அதனை மறுத்துவிட்டார்; ஆனால் பெருந்துறைக்குச் செல்ல அனுமதி வேண்டினார். இருவரும் மதுரைக்கு வந்து இறைவனைத் தொழுதனர். பின்னர் மாணிக்கவாசகர் பெருந்துறை நோக்கிப் புறப்பட்டார். இதன் பிறகு அரசனும் எல்லாவற்றையும் துறந்து இறைவனுடைய சிவபுரத்தை அடைந்தான்.

பெருந்துறையில் மாணிக்கவாசகர் மனத்தை மிகவும் உருக்கும் பாடல்களைப் பாடி இறைவன் தமக்கு முன்பு காட்சி தந்த குரு வடிவில் மீண்டும் தோன்றுமாறு வேண்டினார். சிதம்பரத்திற்கு வருமாறு இறைவன் அவரிடம் தெரிவித்தான். வழியில் அவர் பல தலங்களையும் தரிசித்தார். ஒவ்வொரு தலத்திலும் இறைவன் முன்னைய குரு வடிவில் காட்சி தந்தாலன்றி அவர் திருப்தியடையவில்லை. திருஉத்தரகோசமங்கையில் இறைவன் குரு வடிவில் காட்சி தராமையால் அவர் கதறி அழுதார். இறைவன் அவருடைய விருப்பத்தை நிறைவேற்ற நேர்ந்தது. படிப்படியாக அவர் சிதம்பரத்தை அடைந்தவுடன் புனித நிலத்தில் அவர் புரண்டு உருண்டார். கோயிலுக்கு அருகில் இருந்த ஒரு சோலையில் அவர் தங்கித் திருவாசகம் என்னும் புகழ் மிக்க பாடல்களைப் பாடினார். தில்லைவாழ் மக்கள் அப்பாடல்களைக் கேட்டுப் பேரின்பம் நுகர்ந்து மகிழ்ந்தனர்.

ஈழ நாட்டில் (இலங்கையில்) ஓர் அடியார் இடையறாது தொடர்ந்து 'பொன்னம்பலம் நீடு வாழ்க' என்று சொல்லிக்கொண்டிருந்தார். அங்கிருந்த அரசன் பௌத்த மதத்தைச் சேர்ந்தவனாக இருந்தமையால் இதைப் புரிந்து கொள்ள முடியாமல் அவ்வடியவரை அழைத்தான். அடியார் அரண்மனையை அடைந்து அரசனுக்கு முன்னால் அமர்ந்து அதே சொற்களைச் சொன்னார். அதன் பொருளை விளக்கும்படி அரசன் கேட்டவுடன், அவ்வடியார், 'அரசே! பொன்னம்பலம் என்பது சோழ நாட்டில் உள்ள ஒரு புனிதத்தலம். அதைச் சிதம்பரம் என்றும் கூறுவர். உருவமற்ற கடவுள் இத்தலத்தில் நடராஜ வடிவமாகிய உருவம் கொண்டு உலக நலம் கருதித் தெய்விகக்கூத்து நிகழ்த்துகின்றார். உயிர்களை எல்லாம் மாயையின் பிடிகளிலிருந்து விடுவிப்பதே இக்கூத்தின் நோக்கம். கோயிலின் உள்ளே சிவஞான கங்கை என்னும் திருக்குளம் உள்ளது. இக்குளத்தில் மனுவின் மைந்தனாகிய இரணியவர்மன் நீராடிக் குட்ட நோய் தீர்ந்து குணம் பெற்றான். இப்புனிதமான குளத்தில் நீராடி நடராசப்

பெருமானைத் தரிசித்து வணங்குபவர்கள் எல்லாப் பாவங்களும் நீங்கிப் பரிசுத்தம் அடைகின்றனர். பின்னர் அவர்களுக்குப் பிறப்பு இல்லை. அவர்கள் சிவபுரப் பேரின்பத்தை அடைவார்கள்'' என்று கூறினார்.

இவை எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த புத்தமதக் குரு, 'அரசே! புத்தர் பெருமானைத் தவிர இன்னொரு கடவுள் எப்படி இருக்க முடியும்? சிதம்பரத்திற்கு நானே சென்று சைவரை வாதில் வென்று கோயிலைப் பௌத்த விஹாரப்பள்ளியாக மாற்றிவிடுகிறேன்' என்று தெரிவித்தார். அவ்வாறு சொல்லி அவர் தில்லைக்குப் புறப்பட்டார் அரசனும் தன் ஊமை மகளுடன் உடன் சென்றான்.

சைவப் பெரு மக்கள் சோழ மன்னனுக்கு, பௌத்தர்கள் சிதம்பரத்தை அடைந்தவுடன் அவர்களுடன் வாது நிகழ்த்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்யுமாறு செய்தி அனுப்பினர். அதற்கு முந்திய நாள், வாதத்தில் வெற்றியை ஏற்படுத்தித் தருமாறு அந்தணர்கள் நடராசப் பெருமானிடம் வேண்டினர். அன்றிரவு அவர்களின் கனவில் இறைவன் தோன்றி, 'வாதவூரரை அணுகி, பௌத்த குருவை வாதில் எதிர்க்குமாறு வேண்டுங்கள்' என்று தெரிவித்தார். அடுத்த நாள் காலையில் அந்தணர்கள் வாதவூரரை அணுகவும் அவர் உடனே இசைவு தெரிவித்தார். அவர் கோயிலுக்குச் சென்று இறைவனைத் தொழுது வாதம் நடைபெறும் பட்டி மன்றத்தில் நுழைந்தார். பௌத்தர்களின் முகத்தைக் காண அவர் விரும்பாமையால் அவர் ஒரு திரையின் பின்னே அமர்ந்தார். பௌத்தர்கள் வாதத்தைத் தொடங்கினர். மாணிக்கவாசகர் சைவ சமயக் கொள்கைகளை விளக்கினார். பௌத்தர்கள் தகுந்த பதில்களைக் கூற முடியவில்லை. அவர்கள் தாங்கள் சொன்னவற்றையே திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தனர். மாணிக்கவாசகர் உதவி செய்யுமாறு இறைவனை வேண்டினார். இறைவனுடைய ஆணையால் கலைமகள் தன் கருணையைப் பௌத்தர்களிடமிருந்து

திரும்பப் பெற்றுக் கொண்டாள்; எனவே அவர்கள் அனைவரும் ஊமைகள் ஆயினர். பௌத்தர்கள் வாதத்தில் தோற்றனர்.

புத்தமத அரசன் மாணிக்கவாசகரின் பெருமையைப் புரிந்து கொண்டான். அவன் அவரிடம் "நீங்கள் என் குருவையும் அவருடைய சீடர்கள் அனைவரையும் ஊமைகள் ஆக்கி விட்டீர்கள். என் ஊமை மகளை நீங்கள் பேசவைத்தால் நானும் என் குடிமக்களும் சைவ சமயத்தைத் தழுவுவோம்" என்று கூறினான். மாணிக்கவாசகர் அவனுடைய மகளை அழைத்துவரச் சொன்னார். அவர் உதவி செய்யுமாறு இறைவனை வேண்டிப் பௌத்தகுரு சிவபெருமானைப்பற்றி வினவிய வினாக்களுக்கெல்லாம் தகுந்த விடைகளைச் சொல்லும்படி அவர் அப்பெண்ணைக் கேட்டார். ஊமைப் பெண் பேசியதோடு மட்டுமன்றி அவ்வினாக்களுக்கெல்லாம் தகுந்த பதில்களையும் தந்தாள். இந்த அதிசயத்தைக் கண்டு அனைவரும் ஆச்சரியத்தால் செயலற்றுப் போயினர். அரசனும் பௌத்தர்களும் சைவசமயத்தின் உயர்வை உணர்ந்து சைவராயினர். மாணிக்கவாசகர் பௌத்தர்கள் பேசும் சக்தியைத் திரும்பவும் பெறச் செய்தார்.

ஒருநாள் சிவபெருமான் திருவாசகத்தை மாணிக்கவாசகரின் வாயால் கேட்கவும் அவருக்குப் பேரின்பவீடு வழங்கவும் விரும்பினார். அந்தணர் கோலத்தில் அவர் மாணிக்கவாசகரை அணுகினார். மாணிக்கவாசகர் மிகவும் பணிவுடன் விருந்தினரை வரவேற்று அவருடைய தேவைகள்பற்றி வினவினார். சிவபெருமான், மாணிக்கவாசகரிடம், "உங்கள் புனிதத் திருவாயால் திருவாசகத்தைக் கேட்க விரும்புகின்றேன். நான் அவற்றைக் கையால் எழுதிக்கொண்டு பல்கால் பயின்று சம்சார பந்தத்திலிருந்து விடுபட விரும்புகின்றேன்" என்று கூறினார். மாணிக்கவாசகர் திருவாசகப் பாடல்களைப் பாடினார். அந்தணர் (சிவபெருமான்) பனை ஓலைகளில் அவற்றை எழுதினார். பின் உடனே அவர் மறைந்து விட்டார். மாணிக்கவாசகர், அந்தணராக வந்தவர்

இறைவனே என்ற உண்மையை உடனே அறிந்து கொண்டார். முதலில் அவரை உணர்ந்துகொள்ள வில்லையே என்ற வருத்தம் அவரை மிகவும் வாட்டியது.

மாணிக்கவாசகருக்கு அமரத்துவத்தை வழங்கி அவருடைய பெருமையை உலகுக்கு வெளிப்படுத்த இறைவன் விரும்பினர். எனவே அவர் திருவாசகப் பாடல்களைச் சித்சபையின் பஞ்சாக்ஷரப் படிகளில் வைத்திருந்தார் தில்லை அந்தணர்கள் அவற்றை அங்கே கண்டு வியப்படைந்தனர். அவர்கள் ஓலைகளைப் பிரித்துப் பாடல்களைப் படித்தனர். அவற்றின் முடிவில், ''மாணிக்கவாசகர் சொல்லத் திருச்சிற்றம்பலமுடை யான் எழுதியது'' என்று காணப்பட்டது. இப்பாடல் களின் பொருளை அறிந்து கொள்ள அந்தணர்கள் விரும்பி மாணிக்கவாசகரிடம் அவற்றைக் காட்டினர். அவர் அவர்களைக் கோயிலுக்கு அழைத்துச் சென்று சிவ பெருமானுடைய திருஉருவத்தைக் காட்டி 'இப்பாடல் களின் பொருள், இதோ இங்குள்ள தில்லை நடராசரே' என்று கூறினர். உடனே தோன்றிய பேரொளியில் கலந்து அவர் நடராசப் பெருமானுடைய திருவடிகளை அடைந்தார்.

— முற்றிற்று —

---

# இருபது ஆன்மீக போதனைகள்

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

1. நான்கு மணிக்கு எழுந்திருங்கள். ஜபம், தியானம் செய்யுங்கள்.

2. சாத்வீக ஆகாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். வயிறு நிறைய உணவு எடுத்துக்கொள்ளாதீர்கள்.

3. பத்மாசனம் அல்லது சித்தாசனத்தில் அமர்ந்து ஜபம் தியானம் செய்யுங்கள்.

4. தியானத்திற்கென தனி அறையை பயன் படுத்துங்கள்.

5. உங்கள் வருவாயில் பத்தில் ஒரு பங்கினை அல்லது ரூபாய்க்கு பத்து பைசாக்களை தர்மம் செய்யுங்கள்.

6. தினசரி பகவத் கீதையில் ஒரு அத்தியாயம் படியுங்கள்.

7. வீர்ய சக்தியைக் காப்பாற்றுங்கள். தனியாகப் படுத்துத் தூங்குங்கள்.

8. புகை பிடித்தல், போதை தரும் பானம், உயர்தர உணவு இவைகளை விட்டு விடுங்கள்.

9. ஏகாதசி தினம் உபவாசம் இருங்கள் அல்லது பால் பழங்களை மட்டும் எடுத்துக்கொள்ளுங்கள்.

10. தினசரி 2 மணி நேரம் மௌனத்தையும், சாப்பிடும் பொழுது மௌனத்தையும் கடைபிடியுங்கள்.

11. எந்நிலையிலும் உண்மையே பேசுங்கள். கொஞ்சமாக இனிமையாகப் பேசுங்கள்.

12. தேவைகளை குறைத்துக் கொள்ளுங்கள். திருப்தியாக சந்தோஷமாக வாழ்க்கையை நடத்துங்கள்.

13. மற்றவர்களுடைய உணர்ச்சிகளை புண்படுத்தாதீர்கள். எல்லோரிடமும் அன்பாக இருங்கள்.

14. நீங்கள் செய்த தவறுகளை நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.

15. வேலைக்காரர்களையே நம்பி இருக்காதீர்கள். சுய தேவையை நீங்களே பூர்த்தி செய்து கொள்ளுங்கள்.

16. படுக்கையைவிட்டு எழுந்தவுடனும் படுக்கைக்குச் செல்லும் முன்னும் கடவுளைத் தியானியுங்கள்.

17. உங்கள் கழுத்திலோ, அல்லது சட்டைப் பையிலோ ஜபமாலை ஒன்றை வைத்திருங்கள்.

18. எளிமையான வாழ்க்கையும், உயர்ந்த எண்ணமும் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருத வேண்டும்.

19. சாது, சன்யாசி, ஏழை எளியோர்களுக்கு உதவ வேண்டும்.

20. கடமையை நிறைவேற்றுவதில் ஒரு பொழுதும் பின் வாங்காதீர்கள். தினசரி ஆன்மீக நாட் குறிப்பினை எழுதி வாருங்கள்.

---

# சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| | | |
|---|---|---|
| இந்து தர்மம் | விலை ரூ. | 12-00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் | .... | 12-00 |
| ஸமாதி யோகம் | .... | 13-00 |
| நீதிநெறிக் கதைகள் | .... | 7-00 |
| இமயமலையின் வீரமுழக்கம் | .... | 7-00 |
| சுவாமி சிவானந்தரின் சுயசரிதை | .... | 6-00 |
| ஞானயோகம் | .... | 6-00 |
| தர்ம உபதேசம் | .... | 5-00 |
| சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | .... | 5-00 |
| யோகவாசிஷ்டக் கதைகள் | .... | 5-00 |
| எளிய யோக சாதனை | .... | 4-00 |
| மாணவர்கள் வாழ்வில் வெற்றி | .... | 4-00 |
| தினசரி வாழ்வில் யோகம் | .... | 4-00 |
| கர்ம யோகம் | .... | 4-00 |
| நன்னெறிக் கதைகள் | .... | 4-00 |
| சாதன சதுஷ்டயம் | .... | 4-00 |
| அன்பு, அஹிம்சை, தூய்மை | .... | 4-00 |
| வாழ்க்கையின் லக்ஷியம் | .... | 3-00 |
| சத்சங்கமும் ஸ்வாத்யாயமும் | .... | 3-00 |
| சங்கீர்த்தன யோகம் | .... | 3-00 |
| பெண்மணிகளுக்குப் பொன் மொழிகள் | .... | 3-00 |
| குரு தத்துவம் | .... | 3-00 |
| ஞான தீபம் | .... | 3-00 |
| ஒளி சக்தி ஞானம் | .... | 3-00 |
| உபதேச மஞ்சரி | .... | 2-00 |
| சிவானந்த வாணி | .... | 2-00 |
| சிவானந்தர் மொழியமுதம் | .... | 2-00 |
| உருவ வழிபாடு | ... | 2-00 |
| தெய்வீக வாழ்க்கை (சுவாமி சிதானந்தா) | .... | 5-00 |
| இராஜயோகச் சொற்பொழிவுகள் | ,, .... | 5-00 |
| ஞானஒளிபெற நல்வழிகாட்டி | ,, .... | 4-00 |
| சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி | ,, .... | 3-00 |
| சிதானந்தரின் அருட் செய்தி | ,, .... | 3-00 |
| சிதானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | ,, .... | 2-00 |
| நித்திய நெறிகள் | ,, .... | 2-00 |
| மனித வாழ்க்கையின் குறிக்கோள் | ,, .... | 1-00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | | 3-00 |

KOV
2826